காகத்தின்சத்துருமித்துரு

௱உ பழியானகாகத்தின் சத்துருவைக்கேளு
பாலகனேபசுமயிலும்கோழி ஆகும்
வழியானமித்துருவைச் சொல்லக்கேளு
வளர் ஆந்தைவல்லூறும் உறவாய்நிற்கும்
தெழியானஎவ்வகைக்கு மித்துருவேவேண்டும்
சீவன்ஒன்றுங்கூடிரண்டாய்த் திரமாய்வாழும்
அழியாமல்இருக்க சத்துருஆகாது
அப்பனேசத்துருவின் பயன்சொல்லாதே (சஉ)

வல்லூரின்சத்துருமித்துரு.

௱ங பலனன வல்லூரின்சத்துருவைக்கேளு
பார்தனிலேவாழுகின்ற கோழி ஆந்தை
நலமானமித்துருவைச்சொல்வேன்மக்காள்
நல்லமயில்காகமென நவிலலாகும்
துலையானமித்துருவால்வாழ்வார்கோடி
துர்ச்சனனும்சத்துருவாற்கெட்டோர்கோடி
வலனனமித்துருவே உறவதாச்சு
மாறுனசத்துருவாற் பகைஉண்டாச்சே (சங)

மித்துருவின்பலாபலன்

௱ச ஆச்சப்பாமித்துருவால் உலகம்வாழும்
அப்பனேஒருவனைத்தான் அடுத்துக்கொண்டு
பாச்சப்பாகிளைகோடிமகிழ்ச்சிபெற்று
பதிவாகயிருந்துஉறவாடிக்கொண்டு
போச்சப்பாஇனச்சேர்க்கை யாகவாழ்வார்
பொல்லாங்குயொன்றும்இல்லை மித்துருவைத்தொட்டு
வாச்சப்பாமித்துருவாழ் சேர்ந்தநேரம்
மனமகிழ்ச்சியா இருந்துவாழ்வார்பாரே (சச)

இதுவுமது.

௱ரு பாரப்பாமித்துருவாய் இருந்தநேரம்
பார்தனிலேவரவுசெய்தாற்பலன்உண்டாகும்
நேரப்பாயெந்தெந்த தொழில்செய்தாலும்
நேர்மைவுள்ளமித்துருவிற் செய்தாயானல்
ஊரப்பாயெவ்வகையும் கைகூடும்பார்
கலந்துஉறவாடியல்லோ பொருள்கள்சேரும்

ஆரப்பா அறிவரர்கள் மித்துருவின்னேர்மை
அப்பனேயறிந்தவர்க்குப்பகைதான்போச்சே (௬௫)

இதுவுமது

௬௬ போச்சுதடா பகைபோச்சு பொருளுண்டாச்சு
பூமிதனில்எவ்வகையும் பலிதமாச்சு
வாச்சுதடாதனச்சேர்க்கை மகிழ்ந்தசெல்வம்
மங்களமாய்சோபனங்கள் வாழ்வுநன்று
ஏச்சுதடாகூடிஅங்கே செய்யும்நேரம்
என்மகனேமித்துருவாய் இருக்கவேண்டும்
தாட்சிஒன்றும்இல்லாமல் எல்லாம்ஆகும்
சண்டாளசத்துருவை அகற்றிச்செய்யே (௬௬)

சத்துருவின் பலாபலன்

௬௭ அகத்திலேசத்துருவும் மித்துருவும்உண்டு
அப்பனேயதனல் சந்தோஷம்துக்கம்
செகத்திலேஅதுபோலே எண்ணவேண்டும்
தீவினையும்நல்வினையும்ஜெனனக்கூறு
சுகத்திலேஇருந்தவர்க்கு இரண்டும்போச்சோ
துன்பவினைஅணுகாமல் அற்றுப்போச்சோ
சகத்திலேசப்புகுந்தவாறுபோல
சஞ்சலமும்சுகம்இரண்டும் சரிதானப்பாரே (௬௭)

இதுவுமது

௬௮ சரியானமித்துருவும் சத்துருவும்ஒன்று
சடலத்தில்சந்தோஷம் கோபம்ஒன்று
விரிவானஇடம்ஒன்று நலம்பொலனும்ஒன்று
மேதினியில்நன்மைதுன்மை இரண்டும்ஒன்று
குறியானபஞ்சகர்த்தர்இருந்தயிடம்ஒன்று
கூறியேகுவித்தெழுந்த வாசிநிலைஒன்று
நெறியானசிவசெந்தைப் படைத்தபொருள்ஒன்று
நிலைஇருந்தயிடத்திலல்லோ இடர்உண்டாச்சே (௬௮)

இதுவுமது.

௬௯ இடரானசத்துருவின் பகைபொல்லாது
எண்ணியதோர்க் காரியங்கள்கூடுவதும்இல்லை
படரானபொருள்சேதம் உறவுபகையாகும்
பார்தனிலேசத்துருவின் பலன்தானப்பா

கடலானசோபனமும் முடியாதையா
கனிவாகமுடிந்திடினும் வாழ்வதில்லை
வடமானபொருள்சோரம் ஆகும்பாரு
வழக்கிலேபோனாலும் வெல்லான்தானே (௪௯)

இதுவுமது.

௱ய தான்என்றசத்துருவால் முடியாதொன்று
தரணிதனில்நன்மையாய் இருப்பதில்லை
கோன்யென்றசிவன்செயல் என்றுலகப்பேசும்
கொடுமையுள்ளநேரம்யென்று அறியமாட்டார்
வானென்றநேரமது அறிந்தபெரியோர்கள்
வழியானநேரமென்று மகிழ்ந்துகொள்வார்
ஆனென்றமனமிடைஞ்சல் வாராமல்தான்
அப்பனேநேரமதை அறிந்துகொள்ளே [௫ய]

இதுவுமது.

௱யக அறிந்துகொண்டுசத்துருவைச் சேர்த்தாயானால்
அப்பனேயறுபத்து நாள்கும்ஆடும்
தெரிந்துகொண்டுசதிரியுடப் பக்ஷிக்கப்பா
சினமானசத்துருவைச்சேர்த்துக்கொண்டு
தரிந்துகொண்டுசெய்கிறவன்பக்ஷிக்கப்பா
தண்மையுள்ளமித்துருவைச்சேர்த்தாயானால்
பரிந்துகொண்டுசெய்ததொழில் பலிக்குமப்பா
பார்தனிலேயிதைவிட்டால் பலியாதுபாரே (௫க)

இதுவுமது

௱யஉ பலியாதேசத்துருவைச் சேர்க்காவிட்டால்
பங்கமறுமங்கத்திற் பழுதோயில்லை
வலியாதேமித்துருவைச் சேர்த்துக்கொண்டால்
மனம்நினைத்தபடியங்கே முடியாதையா
சலியாதேசாஸ்திரத்தைப் பழுதென்றெண்ணி
தான்நினைத்தபடிசெய்தால் பலிக்குமோசொல்
கலியாதேதைகபாகம் செய்பாகம்தப்பிக்
கண்டபடிசெய்தினும் கனிவாகாதே (௫உ)

இதுவுமது,

௱யங கனியாதுமனதிற்கு ருசிகொள்ளாது
கற்போலேயிருந்துவிடும் கடக்கத்தள்ளு

பனியாதுகருக்குருவும் காணுவிட்டால்
பாவைபோல்இருந்துவிடு பலிதம்இல்லை
குனியாதுகிமிராது குணம்செய்யாது
குணமாகமாட்டாது சத்துருவைவிட்டால்
தனியாதுஅஷ்டகன்ம வித்தைஐயா
தாணுடமாட்டாது தணிந்துபோமே (௫௩)

இதுவுமது,

௫௯௪ தணிந்துபோம்பட்சிவித்தை பலிதம்இல்லை
தனதானமித்துருசத் துருவைவிட்டால்
குணிந்துபோம்எத்தொழிலும் குணம்செய்யாது
கூடிவரப்போரதில்லை அறியாவிட்டால்
கணிந்துபோம்நன்மையிலே நன்மைசெய்யும்
கடிதானதீமையிலே தீமைசெய்யும்
அணிந்துபோம்நேரம்க்கே முன்பின்னாக
அசதியாய்ப்போகாமல் அறிவாய்த்தானே (௫௪)

பொதுப்படலம்-முற்றிற்று,



உ

ஆருடகாண்டம்.

சிந்தனைப்படலம்.



அசுவனியின் பலாபலன்

௫௯௫ சொல்லுவேன் அசுவினிதான் உதயம்மானால்
சோர்வானஜனவரத்தும் பொருள்வரத்தாம்
வெல்லவேநினைத்தபொருள் கைவசமேசேரும்
வெல்லவரும்பகைஞருமோ உறவுவரும்பாரு
நில்லவேசோபனங்கள் கூடுவதுதிண்ணம்
நினைத்ததொருசிந்தனைதான் மஞ்சள்நிறமாகும்
புல்லவேபட்சிபகை இல்லாவிட்டால்
பலிக்குமடாநாள்எட்டுக் குள்ளேபாரே (௧)

இதுவுமது,

௫௯௬ உள்ளானஅன்பகையே ஆடுங்காலம்
உத்தமனேவிலைதணிந்த பொருளும்மாகும்

வெள்ளானகிழக்குவகை என்றுசொல்லு
மேதினியிற்பிறர் வருவார்செலவுகாணும்
தள்ளானபின்னுதவி சற்றும்இல்லை
சஞ்சலங்கள்மனதிற்குத் தானேதோன்றும்
கொள்ளானஇப்பலன் நாள்பதினைந்துக்குள்
குணம்ஆனநன்மைதுன்மை கூடும்காணே (௨)

இதுவுமது,

௧௧௭ காணுமேஅரசுபகை ஆனால்மைந்தா
கைப்பொருளேசெலவாகும் வரத்தோன்றில்லை
தோணுமேகிளைஞர் களிற்சேதம்உண்டு
சொற்பெரியபிரபுபகை ஆகும்பாரு
வேணுமேபெண்டுபிள்ளை பகையும்ஆகும்
விலையில்லாப்பொருள்என்று சொல்லல்ஆகும்
கூணுமேஇரண்டுபத்து நாளைக்குள்ளே
அணுகும்அடாஇப்பலனை அறிந்துபாரும் (௩)

இதுவுமது,

௧௧௮ அறிந்துபார்கண் அரசுபகையேஆனால்
அப்பனேநினைத்தபொருள் ஒன்றும்இல்லை
தெரிந்துபார்அப்பொருள் கைவசப்படாது
சிக்குவதுஒன்றில்லை சேதம்ஆகும்
சரிந்துபோம்நோய்வரும்பின் பகையுமுண்டு
தள்ளிவிடுபலிதம்இல்லை என்றுசொல்லு
நெரிந்துபோம்மூன்றுபத்து நாளைக்குள்ளே
நிலைதவிரும்நன்மை எல்லாம்தின்மைஆமே (௪)

இதுவுமது,

௧௧௯ தின்மைஒன்றும்இல்லையப்பா பகைஇல்லாவிட்டால்
தினம்ஐந்துக்குள்வரத்து மெத்தஉண்டு
நன்மையென்றகாரியங்கள் மிகவுங்கூடும்
நடக்குமடாநினைத்ததெல்லாம் நன்றாய்த்தானே
வன்மைஎன்றதங்கம்என்று சொல்லல்ஆகும்
மனமகிழ்ச்சிசோபனங்கள் திண்ணம்ஆகும்
மென்மைஎன்றபிரபுஉறவாகும்பாரு
மேன்மைஎன்றால்சொலப்போமோ உறவுநன்றே (௫)

பரணியின்பலாபலன்

கஉ0 உரவானபரணிதான் உதயம்ஆனல்
உத்தமனேகரும்சிவப்பு நிறமும்ஆகும்
நிறம்ஆனநிலங்கள்வரும் உரவுசேர்க்கை
செம்மைஉடன்மறுதேசம் போனூர்மீள்வர்
கறம்ஆனஅரசர்உற வாகும்பாரு
கனத்ததொருகெர்ப்பம்அது ஆணேஆகும்
சிரம்ஆனசோபனங்கள் கூடும்நல்ல
செய்திடுமேகேட்கலாகும் தினம்தான்பத்தே (௬)

இதுவுமது

கஉக தினம்ஆகஊண்பகை ஆகாதுபாரு
சிவந்தகருப்பாம்அதுவும்விலை அதிகம்அப்பா
கனமானசோபனத்திற் குலைவுவரும்திண்ணம்
கனத்ததொருபூமியிலே வருமானம்கொஞ்சம்
இனமாகஇருந்தாலும் பகையதாகும்
இடம்நாடிப்போனவர்கள் இடஞ்சலிலேநிற்பார்
மனமாரப்பசிவேளை பசிப்படைத்தல்இல்லை
வந்திடும்பார்நாள்மூன்று அஞ்சும்ஆமே [எ]

இதுவுமது

கஉஉ அஞ்சாதஅரசுபகை யானல்கேளு
அப்பனேநினைத்தபொருள் விலையோயில்லை
மிஞ்சாதஉறவும்பிலை பொருள்வரத்தில்லை
வேந்தன்உறவொருநாளும் விரும்புவதில்லை
நஞ்சாகிஊர்வழியிற் போனபேர்கள்
நன்மையாய்ஒருபோதும் வருவதில்லை
பஞ்சாகிப்பொருட்சேதம் ஆகும்பாரு
பலன்வருவதிரண்டு பத்துநாள்இதாமே (அ)

இதுவுமது,

கஉங நாளானஊண்அரசுபகை இல்லாவிட்டால்
நலம்பெறவாம்விலை அதிகம்எல்லாம்சேரும்
தாளானசோபனங்கள் கூடும்பின்பு
தரணிதனிற்பிறந்தபிள்ளைதரணிஆள்வன்
வாளானவினைவருவதில்லைபாரு
மனமகிழ்ச்சிமெத்தஉண்டு உறவுசேர்க்கை

கோளானநாள்ஏழிற் குணமதாகும்
கூடிவருஞ்செல்வமெனக் குறித்துசொல்லே (௬)

இதுவுமது

௧௨௬ குறித்துநின்றவூண் அரசு பகையேஆனால்
கூடிவரப்போரதில்லை பகையும்வுண்டு
கறுத்துநின்றமனம்போலே வருவதில்லை
கனவுகண்டகாட்சியைப்போல் ஆகும்பாரு
தரித்துநின்றுபோனவர்கள் மீள்வதில்லை
தான்நினைத்தகாரியமும் மணம்கூடாது
மரித்திறந்துபோய்விடும்பார் பிறந்தபிள்ளை
மாளுமேநாலெந்துக் குள்ளேபாரே (௰)

கார்த்திகையின்பலாபலன்

௧௨௫ பாரடாகார்த்திகைதான் உதயம் ஆனால்
பண்புடனேநினைத்தபொருள் கருப்பாம்பாரு
நேரடாபெண்பெறுவள் செலவு நேரும்
தேடியதோர்பொருள்வரத்து இல்லைஇல்லை
காரடாஉடலில்வந்த பிணிதீராது
கனியானபிரபுஉற வாகாதையா
சேரடாநட்பகம்பம் போலேமக்காள்
சிதறுமேநாள்பத்தில் சிதறும்பாரே (௰௧)

இதுவுமது

௧௨௬ சிதறுமேஊண்பகையே ஆகும்காலம்
சிந்தைதனில்நினைத்தபொருள் கல்மண் ஆகும்
பதறுமேஉடல்உயிரும் கிளையும்சேதம்
பகைவரும்பார்உண்பதுவும் இல்லை இல்லை
அதிரவேபிறந்தபிள்ளை இறந்துபோகும்
அகலவேபோனவர்கள் மீள்வதில்லை
கதறுமேமூவைந்து நாளைக்குள்ளே
கலங்காதமனங்கூடக் கலங்கும்பாரே (௰௨)

இதுவுமது

௧௨௭ கலங்குமேஅரசுபகை ஆனால்மக்காள்
கருத்திலேநினைத்தபொருள் கரியுருவும் ஆகும்
இலங்குமேஊர்வழிதான் போனபேர்கள்
இனிவருவதில்லையென்றே இயம்பலாகும்

அ

மலங்குமேநினைத்தபொருள் கைகூடாது
மனதிலேதுயரம்அல்லால் மகிழ்ச்சியில்லை
துலங்குமேநாள்எட்டில் பலிதம்ஆகும்
துடிஆனஅரசுபகை பொல்லாதென்னே (௰௩)

இதுவுமது

௧௨அ பொல்லாதஊண்அரசுபகையேஆனல்
புந்திதனில்நினைத்தபொருள் பொறகரும்பாம்
நில்லாதுசோபனங்கள் நேர்வதில்லை
நினைத்ததொருகாரியமும் வசப்படாது
கொல்லாதுசொல்லும் அடாஉயிரைத்தானும்
கூடிவரல்ஒன்றும்இல்லை செலவுமெத்த
எல்லாரும்பகைஆவர் நாள்அஞ்சுக்குள்
இனிதானசொல்லும்இல்லை இவன்பிழைப்பதரிதே (௧௪)

இதுவுமது

௧௨௯ அரிதானஊண்அரசு பகைஇல்லாவிட்டால்
அப்பனேநினைந்ததுதான் விலைஉள்ளகருப்பு
நெரியாகப்போனவர்கள் வருவார்பின்பு
நேசம்இல்லைமனதிற்குத் துயரம்இல்லை
குறிஆனமணம்கூடும் குலைவனவும்ஆகும்
கூடிஇருப்பார்பின்பு பிறிந்துபோவார்
சரிதானநாள்ஐந்திற் பலிதம்ஆகும்
தாம்நினைத்தபடி அவற்குமுடியாதுபாரே (௧௫)

உரோகணியின்பலாபலன்

௧௩௰ முடியுமேஉரோக்ணிதான் உதயம்ஆனல்
முழுமனவாய்நினைத்தபொருள் வெள்ளைப்பூவாம்
கடிஆனமணம்செய்ய நன்மை ஆகும்
கடைசேறப்போனவர்கள் வருவார்இப்போ
படிவாகப்போனதுவும் கைவசமே ஆகும்
மனத்துயரம்எள்ளளவும் வருவதில்லை
படிவாகநாள்ஏழில் நினைத்ததெல்லாம்
பலன்கூடும்சொல்கேட்க ஒலைவரும்பாரே (௰௬)

இதுவுமது

௧௩௧ ஓலைவரும்ஊண்பகைஆய் இருந்தால்ஐயா
உளம்நினைத்தபொருள்அதுதான் அழுக்குள்வேளை

சாலைவரும்மணம்கூடும் உறவுசேரும்
தனிவழக்குஉண்டாகும் சலனம்இல்லை
காலைவருதிரேகத்திற் பீடையுண்டு
கசிந்தபலன்இல்லையென்று கருதலாகும்
மாலைவரும்பெண்பெருவள் பயமுங்கொஞ்சம்
மனதிற்குசந்தோஷம் இல்லைதானே (௧௭)

இதுவுமது

௱௩உ இல்லையடா அரசுபகை யிருந்தால்ஐயா
இருதயத்தில்நினைத்தபொருள் கறுத்தவெள்ளை
தொல்லைஅடாகூடிவரப் போரதில்லை
துன்பவினைசூழ்ந்துகொண்டு துயரம்செய்யும்
கல்லைஅடாபொருட்சேதம் ஆகும்பாரு
கனிவானஉறவில்லை பகைஉண்டாச்சு
சள்ளைஅடா அரசுபகை பொல்லாதப்பா
தனில்ஒன்றும்வருவதில்லை சடம்நோவாமே (௧௮)

இதுவுமது,

௱௩௩ நோவாகும்ஊண்அரசு பகையேஆனால்
நொய்யமனம்நினைத்தபொருள் கரியேஆகும்
மாவாகும்பலன்ஒன்றும் இல்லைஅப்பா
வந்தவினைதீராது பழியேசெய்யும்
தேவாகும்மனுஉதவி சற்றும்இல்லை
ஜெடம்அலைந்துபோவதல்லால் பலன்உண்டோசொல்
காவாகும்பகைத்தபேர் வெல்வார்இப்போ
கண்டபடிநான்உரைத்தேன் கருதிக்கேளே [௧௯]

இதுவுமது

௱௩௪ கருதிக்கேள்ஊண்அரசு பகையில்லாட்டல்
கனிவாகநினைத்தபொருள் விலைபெற்றவெள்ளை
சுருதிக்கேள்மணம்செய்ய நன்மைஆகும்
துலைதூரம்போனவரும் வந்துசேர்வார்
பருதிக்கேள்போனபொருள் வந்துசேரும்
பகைஇல்லைஉறவாகும் உட்பகையும்போச்சு
சருவிக்கேள்நாள்ஏழிற் பலிதம்ஆகும்
தான்நினைத்தபடிமுடியும் தப்பாதென்னே (௨௰)

மிருகசீரீடத்தின்பலாபலன்

௱௩௰ தப்பாதமிருகசிரம் உதித்ததானல்
தான்நினைத்தபொருள் இலையின் பச்சைஆகும்
ஒப்பாதுநினைத்தபடி முடியாதப்பா
ஊர்வழிப்போனவர்கள் சஞ்சலத்தால்மாய்வர்
அப்பாலும்மணம்இல்லை ஊண்பகையேஆனல்
அதனலும்வரும்என்ற பலன்ஒன்றில்லை
செப்பாதநாள்பத்தில் தீமைவருந்திண்ணம்
ஜெயமாகமாட்டாது எல்லாம்தீதே [௨௧]

இதுவுமது

௱௩௰௧ தீதென்றஅரசுபகைஇருந்ததானல்
செயமாகப்போரதில்லை வரத்துஇல்லை
தூதென்றஓலைவரும் பொருட்சேதமாகும்
துயரமுமேகூடிவிளையாடும்பாரு
வாதென்றஇருவர்பகை இல்லாவிட்டால்
மனத்துயரம்வெகுகொடுமை இல்லைஇல்லை
தானென்றநாள்பத்தில் பலனைக்காட்டும்
தப்பாதுநன்மைஇல்லை தின்மைஆமே (௨௨)

திருவாதிரையின்பலாபலன்

௱௩௰௨ தின்மைஎன்றசொல்இல்லை ஆதிரைக்கு
சிந்தைதனில்நினைத்தபொருள் நீலவர்ன்னம்
வன்மையென்றபொருளதுகை வசமேஆகும்
மக்களேஊண்பகைதான் இருக்கொண்ணது
தன்மையென்றஊர்பயணம் போனபேர்கள்
சடுதியிலேவருவதில்லை அரசுபகைஆனல்
உண்மையென்றபொருட்சேதம் உறவுபகைஆகும்
உத்தமனேஇருவர்பகை இருக்கொண்ணதே (௨௩]

இதுவுமது

௱௩௰௩ ஒண்ணதஊண் அரசு மித்துருவாய்நின்றால்
உத்தமனேவருமரணம் என்னசொல்வேன்
தன்னலேகூடிவரும் உறவுசேரும்
தண்மைஉடன்பிரபுஉப காரமாகும்
சொன்னரேபிறதேசம் போகநன்று
தொடுத்துமணம்செய்யநன்று சோபனங்கள்கூடும்

எண்ணுதேபிடை இல்லைகன்மைஉண்டு
எடுத்ததொருகாரியங்கள் பலிதம் ஆமே (உ௪)

புனர்பூசத்தின்பலாபலன்

௱௩௧ பலிதமடா புனர்பூசம் சேர்க்கஉண்டு
பண்புடனேநினைத்தபொருள்சிவப்பதாகும்
வலிதமடா ஊர்வழிதான் போனபேர்கள்
வருவார்கள் பொருள்வுடனே மணமுங்கூடி
கலிதமடா ஊண்பகையாய் இருங்கொண்ணுது
கனிவானவருமானம் கால்வரிசைகுறையும்
வலிதமடா அரசுபகை ஆகும்போது
நாடிவரும்பொருள்உடமைநஷ்டம்ஆமே (உ௫)

இதுவுமது

௱௩௨ நஷ்டம்இல்லைஊண் அரசுபகை இல்லாவிட்டால்
நலமானகாரியங்கள முடியும்பாரு
தொட்டதெல்லாம்கூடிவரும் மங்களங்கள்கூடும்
தூரத்தின்ஓலைவரும் சுகமதாக
வட்டமுலைமாது ஜனை உண்டுபாரு
மக்களேசிவகலையால் வந்துகூடும்
இட்டமுடன்நாள் அதுதான் இருபதுக்குள்
இசைந்துவரும்நிலம்கொள்க இனிதாம்பாரே [உ௬]

பூசத்தின்பலாபலன்

௱௩௩ இனிதானபூசம்அது உதயம்ஆனால்
இருதயத்தில்நினைத்தபொருள் கறுத்தவெள்ளை
கனிவானசல்லியமும் சிறுகும்உண்டு
களவாகப்போனபொருள் கைவசப்படாது
தனியானஊண்பகைதான் மிகுந்தசல்லியம்
தன்மையுள்ளஅரசுபகை ஆகாதையா
துணிவான இருவர்பகை மோசம்மோசம்
தொட்டதொன்றும்வாழ்வதில்லை துயரம்தானே (உ௭)

இதுவுமது

௱௩௪ துயரமதுஊண் அரசுபகைஇல்லாவிட்டால்
சோரமாய்போனபொருள்பாதிகாணும்
பயிரதுவும்பணங்கூடும் அலைச்சல்ஆகும்
பகைஉறவுகெடுநாளாய் இருக்காதையா

வயிரமுடன்பிறமனுஷர் வருவார்இப்போ
வந்ததினால்பொருட்சேதம் உறவுபகையாகும்
கயில்அதுதான்நாள்ஐந்திற் பலனைக்காட்டும்
கலங்கும்அடாதுயரத்தால் கலகம்ஆமே (உஅ)

ஆயிலியத்தின்பலாபலன்

ஈசுக கலகமடாஆயிலியம் கண்டபோதே
கருத்திலேநினைத்தபொருள் கரிசல்வெள்ளை
விலகும்அடாபோனவுயிர் திரும்புவதேயில்லை
மேதினியில்நோவுகொண்டார் எழுந்திருப்பதில்லை
இலகும்ஒருசோபனங்கள் கூடுவதுபோல
இருக்கும்அடாஒருபோதும் நடப்பதில்லை
சிலகுளதாம்ஊண்பகைதான் இருந்தால்மோசம்
சிந்தித்தபடிநடப்ப தில்லைதானே (உகூ)

இதுவுமது

ஈசச இல்லையென்றேஊண்அரசு பகைஇல்லாவிட்டால்
இருதயத்தில்நினைத்தபொருள் பலிக்கும்கொஞ்சம்
கொல்லையென்றுபயிர்செய்தால் பலன்உண்டாகும்
கோதையரைமணம்செய்யில் வாழ்வதில்லை
தொல்லையென்றுஒருபொழுதும் செய்வொண்ணாது
தொட்டதெல்லாம்கூடிவர மாட்டாதையா
எல்லைஎன்றநாள்இருபத் தைந்துக்குள்ளே
இப்பலனைக்கண்டவர்தான்ஏங்குவாரே (௩0)

மகத்தின்பலாபலன்

ஈசரு ஏங்காதேமகமதுதான் உதயம்ஆனால்
என்மகனேநினைத்தபொருள் குங்குமத்தின்வர்ன்னம்
தாங்காதேபோனபொருள் கைவசமேஆகும்
தப்பாமல்போனபேர் வருவார்இப்போ
பாக்கியைத்தான்கொள்வதற்குப் பலன்உண்டாகும்
பாகமுடன்மணம்செய்ய நன்மையாகும்
தூங்காதேஊண்பகைதான் மாகாதையா
சொல்லொண்ணாதரசுபகை கூடாதுபாரே (௩க)

ஈசகு கூடாதஊண் அரசு பகைஇல்லாவிட்டால்
கொண்டிசொல்லவுறவுபகை யாவதில்லை

தேடாதுநினைத்தபொருள் கைவசமேஆகும்
தேசத்திற்போனவர்கள் ஜெயமாகவாழ்வார்
நாடாதுமணம்செய்ய நன்மையாகும்
நடந்துமொருபிறர்உதவி அதிகமாகும்
வாடாதுநாள்பத்தில் பலன்கைக்கூடும்
வண்மையுள்ளமாதர் உறவாகும்பாரே (௬௨)

பூரத்தின்பலாபலன்

௱௬௭ பாரடாபூரமதுஉதயம்ஆனல்
பண்புடனேநினைத்தபொருள் பசியபச்சை
நேரடாஊர்ப்பயணம் போனபேர்கள்
நேசமாய்வருவதில்லை மணமும்இல்லை
தேரடாபொருள்உடமை சேர்வதில்லை
திடமானசொல்இல்லை உறவும்யில்லை
ஆரடாஊண்பகையே ஆகும்காலம்
அப்பனேகூடுவது அறிதுதானே (௬௩)

இதுவுமது

௱௬௮ அரிதானஅரசுபகை ஆகும்காலம்
அன்புடனேநினைத்தபொருள் கைகூடாது
நெறியானஊண்அரசு பகையில்லாவிட்டால்
நினைவிலேநினைத்தபொருள் சிறிதுகூடும்
வரிதானஉயிர்சேதம் வருமேஅப்பா
மணம்இல்லைவுறவில்லை மகிழ்ச்சியில்லை
எரியானநாள்யிதற்கு முப்பதுக்குள்
எண்ணியதோர்பீடையது விலகும்பாரே (௬௪)

உத்திரத்தின்பலாபலன்

௱௬௯ விலகுமேஉத்திரம்தான் உதயம்ஆனல்
வினவுபொருள்கருஞ்சிவப்பு விளைவித்தாகும்
பலகுமேபோனபொருள் அசதியிற்காணும்
பழகினபேர்வருவார்கள் பகைவுரவாகும்
இலகுமேசம்மந்தம் கூடும்பாரு
என்னசொல்வேன்ஊண்பகைதான் இருக்கொண்ணாது
அலகில்லாஅரசுபகை இருந்தால்ஐயா
அப்பனேசஞ்சலத்தில் அழுந்துவானே (௬௫)

இதுவுமது

ளருய ஆழுந்துவானேஊண் அரசு பகையில்லாவிட்டால்
அசதியால்போனபொருள் அடுத்தவருல்வருகும்
எழுந்துதான்ஊர்ப்பயணம் போனபேர்கள்
எண்ணியதோர்கருமமுடன் பொருட்சேதம் ஆகும்
கொழுந்தாநினைத்தபடி முடியாதையா
கோதையராற்சல்லியமாய்க் கோபமுடன்வருவார்
நுழைந்தாகும்மூவைந்து நாளையிலேபலிதம்
நொந்துமனம்புண்ணாகி இடைஞ்சல்வரும்பாரே (ரு௬)

அஸ்வத்தின்பலாபலன்

ளருக வருமானகாரியங்கள் அஸ்தமாகில்
மனதிலேநினைத்தபொருள் பலனிரமும் ஆகும்
உருவானபிறதேசம் போனபேர்கள்
உண்மையுடன்மணம்கூடி வருவார்பாரு
தருவானபொருட்சேதம் களவுபோகும்
தப்பாமல்ஊண்பகைய தாகும் ஆகில்
தருவானபோனபொருள்வருவதில்லை
சண்டாளர்அரசுபகை ஆகாதுபாரே (ரு௭)

இதுவுமது.

ளருஉ ஆகாதுஊண்அரசுபகை இல்லாவிட்டால்
அப்பனேபொருள்கூடும் திண்ணம் ஆக
ஏகாதமனம்வாழ்வதில்லையப்பா
எடுத்ததொருகாரியமும் நேர்வருவதில்லை
போகாதேசஞ்சலமாய் இருந்தபேர்கள்
புனிதமுடன்எழுந்திருந்துவாழ்வதில்லை
நோகாதேஏழஞ்சிநாளைக்குள்ளே
நவலும்இந்தபலன்கள்எல்லாம் நேறும்பாரே (ரு௮)

சித்திரையின்பலாபலன்

ளருந நேர்ந்துபார்சித்திரைதான் உதயமானல்
நினைத்தபொருள்சிவப்புவெள்ளை மஞ்சளாகும்
கூர்ந்துபார்நினைத்தபொருள் வருவதில்லை
கொடுத்திடுமேசிலுக்குசண்டை மணம்கூடாது
சார்ந்துபார்ஊண் அரசு பகையேயானல்
தப்பாதுபொருட்சேதம் உயிருஞ்சேதம்

கூர்ந்துபார்இவருடப்பகை இல்லாவிட்டால்
கூடுவதுங்குறைவதுவும் இல்லைத்தானே (௩௪)

இதுவுமது,

௩௫௪ இல்லையேபொருளுடைமை வருவதில்லை
எதிர்த்ததனால்ஜெயமாகப் போறதில்லை
தொல்லையேஅனுசரித்து சஞ்சலங்களாகி
தொல்புவியிற்சொல்குறைச்சல் பேருண்டாகி
சள்ளையேமனுயுதவி இல்லாமல்தான்
சஞ்சலத்தால்வெகுதூரம் வந்துசேரும்
கொள்ளையேநாலுபத்து நாளைக்குள்ளே
கூடிவரப்போறதில்லை குணத்தைப்பாரே (சய)

சுவாதியின் பலாபலன்

௩௫௫ குணத்தைப்பார்சுவாதிதான் உதயமானால்
கூடுதன்னில்நினைத்தபொருள் தங்கம்தங்கம்
மணத்தைப்பார்ஊர்வழியிற் போனபேர்கள்
மனமகிழ்ச்சிமெத்தவுண்டு மங்களம்கூடும்
இனத்தைப்பார்ஆண்குழந்தை பிறக்குமென்று
எண்ணியதோர்கருமமெல்லாம் கைவசமேயாகும்
சணத்தைப்பார்ஊண் அரசு பகைஆகாது
தான்நினைத்தபடிஅங்கே முடியாதுபாரே (சக)

இதுவுமது

௩௫௬ முடியாதோஊண் அரசு பகையில்லாவிட்டால்
மெய்குழலாள்பூமடந்தைகிருபையாலே
படியாதோநினைத்ததெல்லாம் கைவசமேயாகும்
பசுமையுள்ளபொருள்கூடும் உறவுமாகும்
கடியானசோபனங்கள் கூடும்பாரு
கடல்கவிழ்ந்தபொருள்கூடும் கவலைஇல்லை
வடிவானஈரைந்து நாளைக்குள்ளே
மக்களேகூடிவரும்மகிழ்ந்துபாரே (சஉ)

விசாகத்தின்பலாபலன்

௩௫௭ மகிழ்ந்துபார்விசாகமங்கே உதயமானால்
மனதிலேநினைத்தபொருள் கசப்புள்ளவர்க்கம்
நிகழ்ந்துபார்போனபொருள் தாமிசமேயாகும்
நேரானசோபனங்கள் கூடுவதும் இல்லை
நகர்ந்துபார்ஊண்பகையாய் இல்லாவிட்டால்
நன்மைதின்மைஇரண்டுமஉண்டு பயந்துபாரு

தகர்ந்துபார் அரசுபகை யாகமின்றால்
தப்பாது தீமையென்று தான்சொல்வாயே (சுஙு)

இதுவுமது

௱௩அ சொல்லாதஊண் அரசு பகைஇல்லாவிட்டால்
சொன்னபடிதப்பாது நோயில்மாய்வன்
நில்லாமல்வெகுதுயரம் பட்டுதேறி
நேர்மையுள்ளகாலன்வரும் என்றுசொல்லி
பொல்லாதநேரம்என்று சொல்லுவார்கள்
புதுமையுள்ளகருத்தறிந்த காலம்பாரார்
எல்லாரும்பகையாகும் நாலைந்துகருள்
இதுபலனைக்கண்டறிந்து இயம்புவாயே (சுச)

அநுடத்தின்பலாபலன்

௱௩கூ இயம்புவாய் அநுடமங்கே உதயமானால்
யெண்ணிய்தார்பொருள்வெள்ளி யென்றுசொல்லு
நயம்பியேஊண துவும் பகையேயானால்
நலமில்லைகருக்கண் வெள்ளி என்றுசொல்லு
பயம்பியேஊணரசு பகையேயானால்
படிகமென்றபீங்கானும் பதிவாய்ச்சொல்லு
துயம்பியேஊணரசு பகையில்லாவிட்டால்
துய்யவெள்ளியென்றுசொல்லி துணிந்துபாரே (சுரு)

இதுவுமது

௱சுய துணிந்துபார்பொருளுடைமை கூடிவரும்போது
துணையானசோபனங்கள் நடக்கும்பாரு
அணிந்துபார் பிறதேசம் போனபேர்கள்
ஆள்மோசம்வாராமல் வருவார்யிப்போ
தணிந்துபார்சடலத்தில் நோயோஇல்லை
தான்நினைந்தபடிமுடியும் தப்பாதப்பா
நணிம்பியேமூணுபத்து நாளுக்குள்ளே
நலமாகக்கூடிவரும் நயந்துபாரே (சுசு)

கேட்டையின்பலாபலன்

௱சுக அறிவதுதான்கேட்டைஅங்கே உதயம்ஆனால்
அப்பனேநினைத்தது பித்தளையும்*நாறல்
எறிவதுதான்ஊண்பகையே ஆகும்ஆகில்
என்சொல்வேன் அப்பிரகம் என்றுசொல்லு
சரியதுதான் அரசுபகை யாகநின்றால்
தப்பாதுமஞ்சள்நிற மானவோடு

* நாறல்தாளயம் கெந்தி எனினும் ஓக்கும்

பூறிவதுதான்ஊண்அரசுபகை இல்லாவிட்டால்
மொழிந்தபொருள்சொன்னதுபோற் சொல்லுவாயே (சுஎ)

இதுவுமது

ரசுஉ சொல்லுவாய்நினைத்தபொருள் கூடிவதும்இல்லை
சுகமானவனைம்இல்லை உறவும்இல்லை
மல்லதுவாய்போனபொருள் வாராதப்பா
மறுதேசம்போனவர்கள் வந்துறவும்இல்லை
கொல்லுவதுதிண்ணம்என்று நின்றநிலைபார்த்து
குறிகுணங்கள்ஆராய்ந்து சொல்வாய்மைந்தா
அல்லதுகேள்நாலெட்டு நாளைக்குள்ளே
அப்பனேஇதுகளினால் அறிந்துபாரே (சுஅ)

மூலத்தின்பலாபலன்

ரசுங அறுந்தபார்மூலம்அங்கே உதயம்ஆனால்
அப்பனேநினைத்தபொருள் நிலம்கறைகள்ஆகும்
நெறிந்துபார்ஊண்பகையே ஆகுமாகில்
நெரானமாடுமா டென்றுசொல்லு
தெறிந்துபார்அரசுபகை யாகநின்றால்
திடமாகச்சொல்லுவது சொற்பலாபம்
எறிந்துபார்ஊண்அரசு பகையில்லாவிட்டால்
என்னசொல்வேன்பொருளுடைமைஎன்றுசொல்லே (சுகூ)

இதுவுமது

ரசுச என்றுசொல்லுநினைத்தபொருள் கைவசமேசேரும்
இனிதானமணம்கூடும் பிறபுஉறவாகும்
அன்றுசொல்லுஆள்வரத்தால் பொருள்கைசிக்கும்
அன்பானசொல்கேட்டு சந்தோஷம்ஆகும்
நன்றுசொல்லுதன்கிளையின் ஆண்குழந்தைஆகும்
நலம்பெறலாம்அதனாலே மகிழ்ச்சிஉண்டு
கண்டுசொல்லுஐயைந்து நாளைக்குள்ளே
கனிவானசொல்கேட்கக் கருதலாமே (௭0)

பூராடத்தின்பலாபலன்

ரசுரு கருதலாம்பூராடம் உதயம்ஆனால்
கருத்திலேநினைத்தபொருள் கல்மண்ஆகும்
நிருகமாம்ஊண்பகையே ஆகும்ஆகில்
நேரானஎருவாகும் சாம்பல்ஆகும்
இருநிலமாம்அரசுபகை யாகநின்றால்
எழும்பியதோர்பறவையுடை இறகதாகும்

அருமையாய்வலுண்அரசு பகைஇல்லாவிட்டால்
அப்பனேநல்இலையும் அறியசொல்லே (௩௯)

இதுவுமது

௩௪௰ சொல்லுவதுநினைத்தபொருள் கூடுவதொன்றில்லை
சோபனங்கள்செய்தாலும் வாழ்வதில்லை
மல்லுவதுபோனவர்கள் வருவதில்லை
மனதிலேநினைத்தபடி நடப்பதில்லை
கொல்லுவதுவிஷதிஷ்டி யாலேமக்காள்
கூடிவரப்போரதில்லை நினைத்ததெல்லாம்
அல்லுவது ஆறெட்டு நாளைக்குள்ளே
அப்பனேஇப்பலனை அறிவாய்த்தானே (௩௨)

உத்திராடத்தின்பலாபலன்

௩௪௭ அறிவாயேஉத்திராடம் உதயமானால்
அன்பாகநெஞ்சில்ஒன்றும் நினைத்ததில்லை
சரியானவலுண்பகைதான் இருந்தாலென்ன
தரணிதனில்அரசுபகை ஆனாலென்ன
இருதாசனெஞ்சதனைச் சோதிக்கஎண்ணி
கேட்டதல்லாற்கேட்ட திலோர் பொருளுங்காணேன்
இருநிலத்தில்இப்பலனை எண்ணிப்பாரு
எளிதாகத்தோணும்இதை இசைத்திடாயே (௩௩)

இதுவுமது

௩௪அ இசைத்துப்பார்நினைத்ததொன்று இல்லைஇல்லை
இனிதாகசோதிப்போம் நாமென்றெண்ணி
விசைத்துதான்வினவுகின்ற தல்லால்மைந்தா
வேறேதும்இல்லையடா வெளிவிட்டோம்பார்
வசைத்துதான்இப்படி யாகச்சோதித்து
மறுபடியும்கேட்பம்என்று வந்தாய்என்றும்
உசத்திஇல்லைஅதற்கொருநாள் ஆகும்என்றும்
உரைத்தவனைஓட்டிவிடு உறுதிதானே [௩௪]

திருவோணத்தின்பலாபலன்

௩௪௯ உறுதியென்றுதிருவோணம் உதயமானால்
உன்மனதில்நினைத்தபொருள் நெல்லும்புல்லும்
கருதுகின்றவலுண்பகையே ஆகும்ஆகில்
கலந்துசொல்லுகண்டுமனம் தேறிநீதான்
பருதியென்றஅரசுபகை யாகநின்றால்
பதறாமல்அதிலணிந்த வகையைக்காட்டு

சுருதியென்றஊண் அரசுபகை இல்லாவிட்டால்
சொல்லுவாய்உயர்ந்தகனைச் சொல்லுவாயே (௫௫)

இதுவுமது

௱௭௬ சொல்லுவாய்நினைத்தபொருள் மங்களங்கள்கூடும்
சோரனால்பயம்உண்டுபொருள் உடைமைபோகும்
அல்லுவாய்பொன்பொருள் சைவசமேஆகும்
அப்பனேதொலைதூரம் போனால்மீள்வார்
வெல்லுவாய்பகைஉறவாய் வந்துகூடும்
மேலானஜாதியிலே உறவுசேரும்
நல்லுவாய்எழுமூன்று நாளைக்குள்ளே
நடந்துவரும்இப்பலனை நாடிப்பாரே (௫௬)

அவிட்டத்தின்பலாபலன்

௱௭௭ நாடிப்பார்அவிட்டம்அங்கே உதயமானால்
நலமாகநினைத்ததெல்லாம் விளங்குஞ்சோதி
தேடிப்பார்ஊண்பகையே யாகும்யாகில்
சென்றதொருநாணயத்தில் தணிவுசொல்லு
ஓடிப்பார் அரசுபகை யாகநின்றால்
உத்தமனே அதில்தணிந்த நாணயமேயாகும்
தூடிப்பார்ஊண் அரசு பகையில்லாவிட்டால்
தொகையுயர்ந்தநாணயமாய்ச் சொல்லுசொல்லே (௫௭)

இதுவுமது.

௱௭௨ சொல்லுவாய்பொருள்உடமை கைவசமேசேரும்
சோபனங்கள்உரன்முறையார் தொந்தமாகும்
வெல்லுவாய்பிறதேசம் போனபேர்கள்
வேணபடிசெல்வர்களாய் வந்துசேர்வார்
மல்லுவாய்பிறமனிதர் உதவியாலே
வந்திடுமேபால்பழவர்க் கங்கள்மைந்தா
வெல்லுவாய் ஆறைந்து நாளைக்குள்ளே
வேணபடிபொருள்வரத்து விளையும்பாரே (௫௮)

சதாயத்தின்பலாபலன்.

௱௭௩ பொருள்வருமேசதயம் அங்கேஉதயமானால்
புந்திதனில்நினைத்தபொருள்பயிருபச்சை
இருள்வருமேஊண்பகையே யாகுமாகில்
எண்ணியதோர்வர்க்கத்தில்தணிவுமாகும்
அருளலெனும்அரசுபகை யாகநின்றால்
அதிற்குறைந்தவர்க்கவகை அறிந்துகொள்ளு

சருள்பொருளூண் அரசு பகைஇல்லாவிட்டால்
தளிர்ந்தவிலை இல்லையடா சார்ந்துபாரே (௫௯)

இதுவுமது.

ளஎசு சார்ந்துபார்பொருள்வரத்தே அதிகம்இல்லை
சஞ்சலங்கள்என்றும்இல்லை தணிவும்இல்லை
நேர்ந்துபார்போனவர்கள் துயரத்தாலே
நிருவக்கமாட்டாமற் பிணியால்நொந்து
கூர்ந்துபார்கைப்பொருளும் சேதம் ஆக்க
கூடியஉறவாயிருந்தோர் பகையதாக்கி
தேர்ந்துபார்ஏழஞ்சு நாளைக்குள்ளே
திரும்பிடுவார் இப்பலனைத்தெளிந்துபாரே (௬௰)

பூரட்டாதியின்பலாபலன்

ளஎரு தெளிவானபூரட்டாதி உதயமானால்
சிந்தைதனில்நினைத்தபொருள் ஊரும்பூச்சி
வழியானஊண்பகையே ஆகும்யாகில்
மன்னவனேசிறுபூச்சிஎன்றுசொல்லு
கொழுவானஅரசுபகை யாகநின்றால்
கொடுமையுள்ளபூச்சென்றே கூறலாகும்
தழுவாதிஊண் அரசு பகையில்லாவிட்டால்
தண்மையுள்ளபூச்சாகச் சொல்லுவாயே (௬௧)

இதுவுமது

ளஎசூ சொல்லுவாய்செலவதிகம் வரவுகொஞ்சம்
தொடுத்ததொருவியாஜ்ஜியமும் தோல்வியாகும்
மல்லுவாய்ஊர்வழிதான் போனபேர்கள்
வழக்கிலேதொல்வியாய் இடைஞ்சல்உண்டாய்
வெல்லவேபொருளுடைமை களவுபோகும்
வேந்தனால்தண்டனைகள் வருமேபாரு
அல்லவேமூணுபத்து நாளைக்குள்ளே
அப்பனேஇப்பலனும் அறிந்துகொள்ளே (௬௨)

உத்திரட்டாதியின்பலாபலன்

ளஎஎ கொள்ளுவதுஉத்திரட்டாதி உதயமானால்
கூடுதனில்நினைத்தபொருள் குளிர்ந்தபச்சை
எள்ளுவதுஅரசுபகையே யாகும்ஊண்யாகில்
எண்ணியதோர்அழுக்குள்ள பச்சையாகும்
துள்ளுவதுஅரசுபகை யாகநின்றால்
துடியானகளிப்புள்ள பச்சையாகும்

தள்ளுவதுஊண் அரசு பகைஇல்லாவிட்டால்
சாற்றியதோர்குளிர்ந்தபச்சை ஆகுங்காணே (௬௩)

இதுவுமது

௩௭௮ காணுமேசிலுக்கசண்டை களவுபோகும்
கள்ளனால்பயம்வுண்டு கனிந்தஉறவில்லை
வேணுமொருசம்பந்தம் பகையதாகும்
மேலானபிரபுவினால் சல்லியங்கள்உண்டு
ஆணுமேபோனவுயிர் திரும்பாதையா
அப்பனே அதனாலே பொருளுடைமைதோல்வி
தோணுமேஎண்ணஞ்சு நாளைக்குள்ளே
தொடுத்திடுங்கால்இப்பலனைச் சொல்லுவாயே (௬௪)

இரேவதியின்பலாபலன்

௩௭௯ சொல்லுவாய்இரேவதிதான் உதயம் ஆனால்
தொடுத்தபொருள்மூத்துவகை என்றுசொல்லு
வெல்லுவாய்ஊண் பகையே ஆகும் ஆகில்
விலைதணிந்தரத்நவகை ஆகவேண்டும்
மல்லுவாய் அரசுபகை யாகநின்றால்
வசம் இல்லைசொட்டையென்று வகுத்துச்சொல்லு
சொல்லுவாய்ஊண் அரசுபகை இல்லாவிட்டால்
தொகைஉயர்ந்தவர்க்கம்என்றுதொகுத்திடாயே (௬௫)

இதுவுமது

௩௮௰ தொகுத்திடுவாய்பொருள்வரத்தோ மெத்தவுண்டு
சோபனங்கள்கூடும்அப்பா சொல்லக்கூடா
வகுத்திடுவாய்போனவர்கள்பணமாய்வந்து
வாழ்ந்திருப்பார்இனத்துடனே மகிழ்ச்சியாக
அகத்திடுவாய்இரண்டுபிள்ளை பிறந்தசெல்வம்
அவன்கிளையும்பெருகிவளர்ந் தோங்கும்பாரு
திகழ்ந்திடுவாய்நினைத்ததெல்லாம் கைவசமேசேரும்
நேருனஅறுமூன்று நாள்தான்பாரே (௬௬)

சிந்தனைகூறுதலின்யுக்தி

௩௮௧ பாரடாநின்றநிலை பரிந்துபாரு
பதிவாகமுகம்நோக்கும் திசையும்பாரு
நேரடாமுன்சொன்ன எழுத்தோடெல்லாம்
நினைவுதடுமாறாமல் நிறுதிக்கொண்டு
சேரடாநட்சேத்திரஞ் சொல்லக்கண்டு
திசையாமத்சொன்னபடி தெரிந்துணர்ந்து
மாறடாமவுனம்வென்ற எழுத்தைநாடு
மகத்தானசோசியத்துட் சிறப்புஞ்சொல்லே (௬௭)

சிந்தனைப்படலம்முற்றிற்று



# ஜாதகப்படலம்

ஊண் முதல்விநாடியின் பலன்,

ாஅஉ சொல்லுகிறேன்ஊணதிலே முதல்விநாடி
துலங்குகின்றகுழந்தையது பிறந்ததானால்
அல்லல்யென்பதொன்றுமில்லை சுகமாய்வாழும்
அப்பனேவயதிவனுக் கறுபத்தஞ்சாம்
கல்லலன்றபிணிஇல்லை துன்பமில்லை
கவடில்லைவஞ்சகம் எக்காலும்இல்லை
நல்லபுகழ்உடையவனாய் ஆயுள்மட்டும்
நானிலத்தின்வாழ்ந்திருப்பான் நன்மையாமே (க)

ஊண்-உ-ம் விநாடியின்பலன்

ாஅங நன்மையென்றஇரண்டாம் விநாடிதன்னில்
நன்றுமெத்தஉற்பனத்தில் நலமேஆகும்
வன்மையென்றபூமியும் கைவசமாய்சேரும்
வாழ்ந்திருப்பர்அறுபதுவாம் வயதுமட்டும்
செம்மையென்றவசிகரமும் திரமும்மெத்த
தேகம்உள்ளமட்டும்ஒரு பிணியேஇல்லை
தன்மையென்றதாய்தந்தை பிறப்பிற்சேதம்
சற்றும்இல்லைசுகமாகவாழ்வார்பாரே (உ)

ஊண்-ங-ம்-விநாடியின்பலன்

கஅச வாழுமேமூன்றும் விநாடிதன்னில்
மக்களேமதலையது உதித்ததானால்
கேளுமேவயதுதான் அன்பதானல்
கெர்ப்பம்முதல்வய்துபதி னைந்துமட்டும்
கோளுமேபிணிகள்உண்டாம் சுகமோகொஞ்சம
குவலயத்தில்அதிகசுகம் இல்லைபாரு
தாளுமேகூடிவர மாட்டாதப்பா
சஞ்சலமும்சுகமதுவும் சரிதான்பாரே (ங)

ஊண் ச - ம் விநாடியின்பலன்

கஅரு சரியானவிநாடி அங்கே நாலதாகித்
தான்பிறந்தால்வயசதுதான் நாற்பத்தொன்று
குறியானசடலமது உள்ளமட்டும்
கொண்டிடும்ஓர்மணம்இல்லை வாழ்வுகொஞ்சம்
விரிவானபொருள்இல்லை போகம்இல்லை
வேந்தன்உறவொருநாளும் விரும்புவதேஇல்லை

நாயானபசிவேளைப் பொசிப்போஇல்லை
நன்மைஇல்லைதீமைஇல்லை நாடிப்பாரே (ச)

ஊண்-ரு-ஆம் விநாடியின்பலன்.

கஅசு நாடிப்பார்ஐந்தாம்விநாடிதன்னில்
நலமாகப்பிள்ளையது பிறக்கும்ஆகில்
தேடிப்பார்வயசதற்கு மூப்பத்தேழு
செம்மையுடன்வசிகரமாம் இருக்கும்பாரு
கூடிப்பார்சினேகிதமோஉயிரொன்றுகும்
குணமதுதான்சற்குணமாய் இருக்கும்பாரு
வாடிப்போம்பொருளுடைமை இல்லாமல்தான்
மனத்துயரம்விதிவனைக்கும்வருத்தும்பாரே (ரு)

ஆதானபலன்,

கஅஎ பாரடாவிந்ததுதான் பாயும்போது
பண்பானசூரியகலை நடக்கும்ஆகில்
ஆரடா ஆணுகும்சந்திரகலைஆகில்
அப்பனேபெண்ணுகும் அறிந்துபாரும்
சாரடாசுழிமுனையில் தரிப்பதில்லை
தரித்தாலும்அதுபிழைக்க மாட்டாதப்பா
கூரடாசாஸ்திரங்கள்யாவும்பார்த்து
குணங்குறிகள்தவறுமற் குறிசொன்னேனே (சு)

நடைமுதல்விநாடியின்பலன்,

கஅஅ சொன்னேனேநடையிலே முதல்விநாடி
தொல்புவியில்பிள்ளைகள்தான்தோன்றும்ஆகில்
அன்னதனுக்காயதனுய் அன்பதாகும்
அதுதரித்தநாள்முதலாய் சுகமோஇல்லை
பின்னதுகேள்வயசு முப்பதுக்குமேலே
பிரபலனும்அதிகம்இல்லை வாழ்வுகொஞ்சம்
தன்னலேவருவதல்லால் உதவியில்லை
சடம்உள்ளவனையினும்பொய்கோள்சொல்வானே (எ)

நடை-உ-ஆம்-விநாடியின்பலன்,

கஅகூ சொல்லவேநடையிரண்டாம் விநாடிதன்னில்
தோன்றிஞேன் அவன்வயதுஐம்பதைந்து

ம

கொல்லுவான்சீவசெந்தை அதிகமாக
கொடுமையுள்ளபொய்களவுவஞ்சம்மெத்த
தள்ளுவான் இனச்சேர்க்கை சற்றும்இல்லை
சண்டாளன்என்கிறபேர்பெறுக்குமையா
துள்ளுவான்எனக்கெதிர்தான் இல்லையென்று
சொல்லுவான்பிரர் அவன்சொல்தள்ளுவாரே (அ)

நடை-ங-ஆம்-விநாடியின்பலன்,

கசூ௰ தள்ளவேநடைதனிலேமூன்றாம்விநாடி
தான்பிறந்தால்வயசதுதான்மூப்பத்தேழு
கொள்ளவேவயசதுதான்உள்ளமட்டும்
கொலைகளவுபொய்சூதுகொடுமைமெத்த
மல்லவேபிரபவிபிஉள்ளமட்டும்
வருத்தும்வெகுநோயாலேவருந்துவான்பார்
பல்லவேநல்லருசியுள்ளதெல்லாம்
பண்புடனேஅவன்வாயில் படாதுபாரே (கூ)

நடை-ச-ஆம்-விநாடியின்பலன்,

கசூக படாதுநடைநான்காம்விநாடிதன்னில்
பதிவாகஉற்பத்திஆகும்ஆகில்
கடவாதுவயசதுதான் இருபத்தொன்று
கல்வியுமோமெத்தஉண்டுகளவும்உண்டு
சடியாதுபெரியோரைத்தூஷணிப்பான்
சண்டாளப்பிறவிஇவன் ஒருவர்க்கஞ்சான்
தொடர்வானஅன்னவஸ்திரம் அதுவும்இல்லை
துர்ச்சனன்காண் இவன்நல்லஅழிஇல்லானே; (௰)

நடை-ரு-ஆம்-விநாடியின்பலன்,

கசூஉ வழியதனில்ஐந்தாம்விநாடிதன்னில்
மைந்தனையுற்பவித்துவந்தானாகில்
தெளிவுள்ளவயசதுதான்பதினெட்டாகும்
நினைவுதப்பிப்பித்தவெறிகொண்டுபேசும்
பழியுடையன்பிறர்க்குதவிசற்றும்இல்லை
பணமில்லான்சனத்துடனேவாசஞ்செய்யான்
களியுள்ள இனந்தனிலே இருந்துவாழான்
கசடனப்பாநற்குணங்கள் இல்லைத்தானே (கக)

அரசுமுதல்விநாடியின்பலன்

*கசுஈ தானென்றஅரசிலே முதல்விநாடி
தான்பிறந்தான்தன்வயது நூற்றுஏழு
பானென்றபவுஷுஉண்டுபாக்கியம்உண்டு
பால்உண்டுகிளைஉண்டுபணியும்உண்டு
தேனென்றசொல்உண்டு ஜெகம்எல்லாந்தான்
சென்றுவரநடையில்லைஜெகத்தில்உள்ள
மானென்றவிழிமடவார்மயங்குவார்பார்
மக்களேஅவன்வாழ்வைமதிக்கொண்ணாதே (௰௨)

அரசு-உ-ஆம்விநாடியின்பலன்

கசுச ஒண்ணாதஅரசிரண்டாம்விநாடிதன்னில்
உற்பவித்தால்வயசதுதான்தொண்ணூற்றைந்து
எண்ணாதசுகபோகம்சொல்லொண்ணாது
இன்பம்உள்ளவாழ்க்கையென்னல்மதிக்கொண்ணாது
தன்னாலேஞானநிலைநிலைக்கும்அப்பா
தண்மைஉள்ளபுருஷர்என்பர்தரணியோர்கள்
சொன்னதொரு அவனுடையகீர்த்தியென்னல்
சொல்லுதற்குநாவில்லைசொன்னோம்பாரே (௰௩)

அரசு-௩-ஆம் விநாடியின்பலன்

கசுரு சொல்லுமொரு அரசுமூன்றாம்விநாடிதன்னில்
தோன்றுவனேல்அவன்வயதுஎண்பத்தாறு
வெல்லும்அவன்வாழ்வைஎன்னல்மதிக்கொண்ணாது
வெகுபோகம்வெகுசுகங்கள்உண்டுபாரு
அல்லவேசரீரத்தில்பீடைஇல்லை
அவன்பவுஷோஅளவிடக்கூடாதுமைந்தா
சொல்லவேஅஷ்டசித்திஅவர்க்கேசித்தி
சொல்லவுமேகூடாதுசுகத்தைத்தானே. (௰௪)

அரசு-௪-ஆம்-விநாடியின்பலன்

கசுசா தானென்றஅரசுநான்காம்விநாடிதன்னில்
தான்உதித்தால்வயசதுதான்எழுபத்தெட்டு
தேனென்றமொழியுடையோன்சேகரங்கள்உள்ளோன்
தீமையென்றசொல்ஒருக்காலும்சொல்லோன்
வானென்றகுணம்உள்ளான் அறவதுள்ளான்
மகத்தானபெரியோரைவணங்கிநிற்பான்

கோனென்றசிவகளையும்உள்ளோன்ஐயா
கொடுமைஉள்ளவஞ்சகலைச்சேரோண்ணனே, (ருரு)

அரசு-ரு.ஆம் விநாடியின்பலன்

கசுஎ ஒண்ணாத அரசைந்தாம்விநாடிதன்னில்
உதித்தவனுக்கேபிரமன்விதித்ததநாள்
எண்ணாத அறுபத்தேழ்ஆகும்மைந்தா
என்னசொல்வேனிவன்பெருமைஇயம்பொண்ணாது
துன்னாத அன்னைசுற்றம்கிளைஉண்டாகும்
தொடுத்திடுமேபூமிதனிற்செல்வம்உண்டாம்
வண்மையுடன்வாழும்இவன்குடித்தான்அப்பா
மனமகிழ்ச்சிமெத்தஉண்டுமதிக்கொண்ணாதே (ருசு)

நித்திரைமுதல்விநாடியின்பலன்,

கசுஅ ஒண்ணாதஉறக்கத்தில்முதல்விநாடி
உத்தமனேஉதித்ததெனில்வயதேழஞ்சாம்
விண்ணானபாக்கியமோஇல்லைஇல்லை
வீணானதுயரமதுமெத்தஉண்டு
கண்ணானநோயதுவும்உண்டுபாரு
கலங்கும்அடாஅவன்மனதுசுகமோகொஞ்சம்
தன்னாலேவிதிஅமைப்புஉள்ளமட்டும்
தலைமீதுசுமைசுமப்பன்திண்ணம்தானே, (ருஎ)

நித்திரை-உ-ஆம் விநாடியின்பலன்,

கசுக திண்ணமாம்துயில்இரண்டாம்விநாடிதன்னில்
செனித்திட்டோம்தன்வயதுஇருபத்தேழு
கன்னம்இடும்களவுகளும்கொலையும்செய்வான்
கண்டவரால்துஷ்டனெனத்திரிவன்கண்டாய்
வண்ணமுறுமனைவியுமேசேர்வதில்லை
மகத்தானபாவிஎன்றுஉலகம்அஞ்சும்
எண்ணமுறும்துயரம்உயிர்உள்ளமட்டும்
இருக்கும்இதுசிவன்செயலாம்என்றுபாரோ (ருஅ)

நித்திரை-ந-ஆம்விநாடியின்பலன்,

(உ0) பாரோநீஉறக்கம்மூன்றும்விநாடி
பாரில்உதித்தான்வயதுஎழுமூன்றாகும்
தேரோநீதேரைபைப்போல் திரைஞ்சுபோகும்
செடம்அதுதான்உள்ளமட்டும்துன்பம்நீங்கா

காரேநீதாய் தந்தைஉறவும் இல்லை
கண்டவர்கள் இவனுடனே கலந்துபேசார்
வாரேநீதேசம்விட்டு தேசம்போக
மனம்துணிந்து அவிடம்போய் மாளுவானே (௰௯)

நித்திரை-௬-ஆம்விநாடியின்பலன்

௨௱௧ மாளுவான் உறக்கம்நான்காம்விநாடி
வந்துதித்தோன் தன்வயதுபதின்மூன்றுகும்
வாளுவான் அக்குடியிற் பிறந்தாவதென்ன
வருந்துவார் இவன் உயிர்தான் மாளுமட்டும்
தேளானபிணியாளன் துயரம்மெத்த
தெளிமைஉள்ள வாக்குரிசிகொள்ளொட்டாது
நாளானநாளுக்கு நான்தான் அப்பா
கலங்குவான்சுகம் என்பதில்லைபாரே [௨௰]

நித்திரை-௫-ஆம்விநாடியின்பலன்

௨௱௨ இல்லைஎன்ற இளப்பம்உறக்கம்தன்னில்
இயம்பும்ஐந்தாம்விநாடிதனில் வந்துதித்தோன்
தொல்லையென்ற வயதுகொஞ்சம்ஒன்பதேதான்
சுகமதுதான் ஒன்றும்இல்லை யினியோமிச்சம்
கல்லல்என்றசடலமது பறக்கும்பாரு
கண்டவர்கள் விதிப்பயனோஎன்றுசொல்வார்
சுள்ளியிலேசுழல் விட்டபாண்டம்போல
சுழலுவான்மாளுமட்டும சுகம்இல்லானே (௨௧)

இதுவுமது

௨௱௩ சுகம்என்பதொருபோதும்இல்லை இல்லை
சுழித்ததொருகாற்றினிலே துரும்புபோலே
அகமதிலேஒருபோதும் வாழ்வதில்லை
அவன்வாழ்வுநன்மையாய் இருப்பதில்லை
செகமதிலேபிணியாளன் போலேமக்காள்
செடம்அழிவதல்லாமல் திடமேஇல்லை
பகைவருவதல்லாது உறவுமில்லை
பாழானஉயக்கம் ஐந்தின்பலன்தான்பாரே (௨௨)

மரணம்முதல்விநாடியின்பலன்

௨௱௪ பாரப்பாமரணத்தின் முதல்விநாடி
பண்பானநேரத்தில்பிரந்தான் ஆகில்

வாரப்பாவயதுகொஞ்சம்புனிரண்டாகும்
மக்களேதாய்தந்தைசேதம்ஆகும்
காரப்பாஅவன்உடல்தான்நோவுகொள்ளும்
கடைத்தேறல்ஒருநாளும்இல்லைஇல்லை
சாரப்பாஅவன்சடலம்மடியும்போதில்
தனியனும்இவன்இருந்துஇறப்பான்தானே (௨௩)

மரணம்-௨-ஆம்விநாடியின்பலன்

௨௱௩ இறந்துபோம்மரணம்ரெண்டாம்விநாடிதன்னில்
இனிதானஉற்பத்தி ஆகும் ஆகில்
மறந்துபோம்அவன்வயதுஒன்பதுக்கும்
மரணமதுபோல்துடித்துமாய்வான்நோயில்
குறைந்திடாநாளுக்குநாள்தான்அப்பா
குணம்ஆகமாட்டாதுகொடுமைமெத்த
நிறைந்துபோம்செடலமதுசெத்தால்நன்று
செகந்தனிலேஎன்றுலகம்சொல்லும்பாரோ (௨௪)

மரணம்-௩-ஆம்விநாடியின்பலன்

௨௱௪ சொல்லுவதுமரணம்மூன்றும்விநாடி
தோன்றிட்டால்அவன்வயதுஏழுசாகும்
மல்லுவதுநோயதுதான்மெத்தவுண்டு
மரணம்போல்வந்துபின்புதெளிவுண்டாகும்
தொல்லுலகில்இவனுக்குஇதுபோல்வந்து
சூழுமடாசெப்பும்இந்தத்துப்தேறி
அல்லுவதுமேல்உரைத்தவயதில்மைந்தா
அந்தகனும்உயிர்ச்சேதம் ஆகும்பாரே (௨௫)

மரணம்-௪-ஆம்-விநாடியின்பலன்

௨௱௫ ஆகுமேமரணம்நான்காம்விநாடி
அவனியில்வந்துதித்தவர்க்குவருஷம்ஒன்றும்
சாகும்அந்தநாளளவும்இவன்தான்அப்பா
தனிவெயிலிற்புழுவதுதான்தவிப்பதேபோல்
வேகும்வெகுவியாதிகளால்மடிந்துநொந்து
வீணாகஅழிவதல்லால்சுகமதுண்டோ
சாகும்மரணத்துதித்ததோதோவென்னில்
தான்மூன்புதரித்ததுதான்சுழினேஆமே (௨௬)

மரணம்-ரு-ஆம்விநாடியின்பலன்

உளஅ ஆமென்றமரணம்ஐந்தாம்விநாடிதன்னில்
அப்பனேகுழந்தைஅவதரிக்கும்ஆகில்
போமென்றஇக்குழந்தைதனக்குவேந்தன்
பொறிநிட்டூலிபிகொஞ்சம்புகலக்கேளு
தாமென்றதாய்அலறதந்தைநோக
சகோதரர்கள்பொருமிஅழத்தலையேசாய்ந்து
ஏமென்றஆறுதிங்கள்தனிலேமாயும்
இவன்தரித்ததவ்வேளைசுழிணையாமே (உஎ)

மரணப்பேற்றின்சத்துருமித்துருபலன்

உளகூ சுழிணைதனில்மித்ருவதிநாகின்றால்
சொன்னபடிசரியாகும்சத்ருவாகில்
அழிவுள்ளமரம்போலேமாளும்மட்டும்
அலைத்துவிடும்வெகுகொடுமைசடலம்நோகும்
எழில்அற்றஉயிரதுதான்தவிப்பான்ஐயா
என்னசொல்வேன்சத்துருதான்விதியழிப்போன்
சுழன்றலையும்பாய்மரத்தில்பட்சிபோலே
தொல்பிணிகள்வந்துதுன்பம்செய்யும்பாரே

இதுவுமது

உா0 செய்யவேபொருள்வருத்துஇல்லைஇல்லை
ஜெயமானமணம்இல்லைசேர்க்கைஇல்லை
ஐயுமேஉலகம்எல்லாம்வம்பன்என்று
மனைவிமக்கள்உறன்முறையார்மருவல்இல்லை
நொய்யதொருநோயாலேவருத்தம்மெத்த
நுவலும்அந்தநோயதனால்மெலியும்சீவன்
கொய்யுமொருசத்துருவின்பகைபொல்லாது
கொடுமையுள்ளமரணத்திற்பிறக்கொண்ணாதே (உகூ)

இதுவுமது

உகக பிறக்குமிதிற்சத்துருதான்அரசன்ஆகில்
பிண்டத்தில்மாண்டுவிழும்ஊனதாகில்
சிறக்கவேபதினைந்துநாளைக்குள்ளே
செற்றுவிடும்தப்பில்லைஜெகத்தில்மைந்தா
உறக்கவேமாசமதுமூன்றுக்குள்ளே
ஒழிந்துபோம்ஊனதுதான்மித்துருஆகில்

பறக்கவேமாசம்ஒருஐந்துக்குள்ளே
பதிக்கரசன்உயிர்ச்சேதம்செய்வான்பாரே (௬௰)

நித்திரைப்பேற்றின்சத்துருமித்துருபலன்

௨௧௨ செய்திடுவான்உறக்கத்தில்மித்ரு அரசாகில்
சென்னத்தில்பிரம்மலிபிஉனாத்ததுமுன்சரியே
எய்திடுவான்சத்ரு அரசாகினின்றால்
என்னசொல்வேன்வெகுநோயால்துன்பம்ஆவன்
வைதிடுவான்வருமானம்ஒன்றும்இல்லை
மணம்இல்லைபிரபுதனையும்மகிழ்ச்சியில்லை
கொய்திடுவான்பிறந்தாறுதிங்களுக்குள்
குலைபத்தில்வாழ்வதில்லைதிண்ணம்ஆமே (௬௧)

அரசுட்டேற்றின்சத்துருமித்துருபலன்

௨௧௩ திண்ணம்என்றஅரசனுக்குசத்ருஇல்லை
செயலாகும்ஜெகந்தனிலேதொடுத்ததெல்லாம்
வண்ணம்என்றமகிழ்ச்சிவரத்துமெத்த
மனைவிமக்கள்வரன்முறையார்உதவிமெத்த
எண்ணம்என்றதுயரம்எள்ளளவோயில்லை
ஏழைஎன்றசொல்இல்லைஈவதிவன்தொழிலாம்
அன்னம்என்றகளஞ்சியம்என்றியாவரும்பூசிப்பார்
அப்பனேஇவற்கிணைதான்சொலக்கூடாதே (௬௨)

நடைப்பேற்றின்சத்துருமித்துருபலன்

௨௧௪ கூடாதேநடையினில்மித்துருஊண்ஆகில்
கூறியதோர்லிபிதனக்குக்கால்அதிகம்ஆகும்
நாடாதுமித்துருவேஅரசன்ஆகில்
நாட்டியதோர்பிரமமலிபிக்கால்அதிகம்ஆகும்
தேடாதசத்துருஊண்ஆகநின்றால்
செப்பும்அதில்கால்வரிசைசெல்லாய்ப்போகும்
வாடாதசத்துருதான்அரசன்ஆகில்
வழுத்தியதோர்லிபியில்அரைகுறையும்பாரே (௬௩)

இதுவுமது

௨௧௫ குறையானவபதேழுக்குள்ளேமைந்தா
குறைத்திடுவான்கைகாலிற்குற்றம்வரும்படியாய்
[illegible] நிறைபான இவன்பிறந்துபதினைந்துக்குள்
சிரசுமுதல்கண்காதுமூக்குதட்டில்

குறைஆகும்மூன்றுபத்து வயதுக்குள்ளே
சூர்மையுள்ளவேகத்தில் குறைவுசெய்வான்
கறைஆகும்பிரம்மலபி உள்ளமட்டும்
கணக்கில்லாநோயில் அழுந்துவன்கண்டாயே (ருச)

இதுவுமது

உகசு அழுந்துவதுசத்துருவின் பகைஆகாது
அப்பனேவிந்துஅது தரித்தநேரம்
கொழுந்துவிட்டுயெழுந்த அனல்போலேமக்காள்
குடிகெடுத்தசத்துருவும் நின்றதாலே
தழைத்ததொருசுழிமுனை அங்கிருந்ததாலே
சண்டாளசத்துருபகைஆனதாலே
நெளிந்துவிடும்சந்திரன் சூரியனைவிட்டு
நேராமற்போனதினாற் பகைஆம்பாரோ (ருரு)

ஊண்பேற்றின் சத்துருமித்துருபலன்.

உகஎ பகையானஊண் அதிலே மித்துருவலிதாகில்
பாடினதுபொய்யாது பலிக்கும்பாரு
தொகையானசத்துரு அங்கேஅரசாய்நின்றால்
துலங்கவுமேமிஞ்சஒட்டான் குறையஒட்டான்
தகையாகவருங்காரியம் தவிர்த்துவைப்பான்
சண்டாளசத்துருதான் தாழ்ந்துபோகான்
வகையானதேகத்தில் பீடைகொஞ்சம்
வருத்தம்வரும்வந்தாலும் வலுச்செய்யாதே (ருசு)

இதுவுமது

உகஅ வலுவானஅரசு மித்துருவேஆனால்
மக்களேபிரமலபி அனாஅதிகம்ஆகும்
நலிவானதேகத்தில் நலியேயில்லை
நன்மையென்றமணம் போகம்வாழ்வுமிச்சம்
கொலுவாகப்பூமி யினம்பலிக்கும்பாரு
கொண்டுவிற்கும் வியாபாரம்குணமதாகும்
வலுவானமன்னர் உரவாகும்மேலும்
மக்களேஅதிகபலன் வருகும்பாரோ (ருஎ)

உகக பாரடாபட்சுவலு அறியவேண்டும்
பகையானயெழுத் தைவிட்டுமாறவேண்டும்

கோருவதுஎவ்வேளை அவ்வேளைக்குக்
குடிகெடுத்தசத்துருவை விலக்கிப்போடு
நேருற்ஒருபட்சிபகை ஆனபோ
நினைவில்வைத்து அவருடனேபேசவேண்டும்
சேருவதுபட்சி உரவானபேரைச்
சேர்ந்ததினால்நன்மைஉண்டு திண்ணம்தானே (ங௲அ)

ஆயுட் பிரமாணம்

உஉ௰ தான்யென்றபிரப்புக்குவயதுசொல்வேன்
தண்மைஉள்ள ஊணுக்குஎழுபதாகும்
மான்என்றநடைதனக்கு வயதோமைந்தா
மறையவன்தான் விபித்தபடி அன்பதாகும்
தேன்யென்ற அரசக்குவயதுமெத்த
செப்பவென்றால்நூற்றுபத்து யிருந்துவாழ்வான்
கோன்யென்ற உரக்கத்தின் வயதுகொஞ்சம்
குறைவானயேழைந்து வயதான்பாரே (ங௯)

இதுவுமது,

உஉக வயசுகொஞ்சம் மரணத்தின்வயசுகேளு
மக்களேபதினைந்து வருஷம்ஆகும்
பயன்உடைய அரசுபகைஆகாதப்பா
பண்பானஇதற்கதிகம் இல்லைஇல்லை
அயன்என்னும்தந்தை அன்றுசேர்ந்தநேரம்
அந்தியமாய்ச் சுழிமுனைதான்முடிந்தநேரம்
வயசதுவேஅற்றுவிடும் சனிஇவன்தான்மைந்தா
மருவிமணம்செயுநேரம் நோய்வரும்ஊண்கேளே (சய)

ஜாதகப்படலம் முற்றிற்று,



# பிணிப்படலம்

---

பொதுவிதி.

பிணிகொண்ட ஊணின் காலபலன்

உஉஉ ஊண்யென்றபிருதியில்வியாதிகண்டால்
உத்தமனேமூவைந்து நாளையிலேதீரும்
தேன்என்ற விநாயகர்க்கு அபிஷேகித்துத்
தீபதூபம்கொடுத்து தியானம்செய்து

வான்என்றமருந்தீதல் செய்வீர்ஆகில்
மக்களேபிராமணர்க்கு அன்னதானம்
கோன்என்றஒருமனதாய்ச் செய்யும்போது
கொடுமைஉள்ள பீடையும்தான்விலகும்பாரோ (க)

பிணிகொண்ட நடையின் காலபலன்

௨௨௩ விலகுமோநடைதனிலே வியாதிகண்டால்
விசனம்அதுமிகுதிஉண்டாம் மாதம்மூன்றில்
நலமாகவேலவர்க்கு அபிஷேகம்செய்து
நங்கையரும்கன்னியர்க்குக் களபம்பூசி
பலரும்உண்ட அன்னமது அன்பாய்செய்து
பண்டிதர்குஉபசாரம் பலவும்செய்து
இலகவேமருந்தீதல் செய்வாராகில்
எழும்பியதோர்அப்பிலவந்த பிணிதான்போச்சே (உ)

பிணிகொண்ட அரசன் காலபலன்,

௨௨௪ போச்சென்றஅரசுதனில் வியாதிகண்டால்
புண்ணியனேநாள்கட்டில் தீரும்தீரும்
ஆச்சென்றசிவனுக்கு அபிஷேகம்செய்து
அப்பனேஅரசுபிர தட்சணமேசெய்து
வாச்சென்றகோவினர்க்கு மருந்துதானே
வளமாகக்கொடுத்திடவே விலகும்பீடை
காச்சென்றஅக்கினியால் வந்தபீடை
கலைவதற்குஓமங்கள் செய்திடாயே (ந)

பிணிகொண்டநித்திரையின் காலபலன்

௨௨௫ செய்துதான்உறக்கத்தில் வந்தபீடை
தீருவதுமாதம்ஒரு மூன்றுக்குள்ளே
கொய்துதான்சடலத்தை நோகப்பண்ணும்
குலவியதோர்காளிக்கு அபிஷேகஞ்செய்து
வைதுதான்வாயுவினால் வந்ததாலே
மாருதிக்குவடைமாலே மகிழ்ந்துசாற்றி
நொய்துதான்வயித்தியன்கை மருந்துஈந்தால்
நொந்துமிகவருத்தம்ஆய்த் தீரும்பாரோ (௪)

பிணிகொண்ட மரணத்தின்காலபலன்

௨௨௬ தீருமோமரணத்தில் வியாதிகண்டால்
தீருவதுவெகுவருத்தம் திங்கள்ஆறில்

தேறுமோதேறுதோ என்பார்கோடி
செய்வினையோ தீவினையோஎன்பார்கோடி
ஆறுமாமுகன்செயலே நடக்கும்ஆகில்
அரசுபகைஆவதுதான் இவனுக்கில்லை
தீரும்ஒருபரிகாரம் என்னஎன்னில்
கெம்பீரம்ஆம்சனிக் கபிஷேகங்கள்செய்யே (ரு)

இதுவுமது,

உஉஎ செய்துபார்ஆகாச வெளிஇதாகும்
திடமானஊண் அரசு பகையாகாது
நெய்துபார்சத்துருவின் கொடுமைமெத்த
நெறியானமித்துருவே இருக்கவேண்டும்
கொய்துபார்கூத்தன் என்றதினமரணநாளும்
கூடியேஇல்லாமல் இருக்கவேண்டும்
வைதுபார்இதுகளுடைப் பகையாகாது
வந்ததென்றால் உயிர்ச்சேதம்வருகும்பாரோ (சு)

(பிணிப்படலத்தின் பொதுவிதி சிரப்புவிதி)

உ-ற்கும் வரலாறு

உஉஅ ஆகுமேசாமம்அதைக் குறுக்கினன்றாய்
அப்பனேநாழிகையாய்ப் பிரித்துச்சொன்னோம்
போகுமேவிநாடிஅங்கே வாய்த்ததானல்
புண்ணியனேஒருநாளும் பொய்த்திடாது
ஏகுமேவிநாடிஅது பிசகிப்போனல்
எடுத்ததொருகாரியங்கள் பிசகும்பாரு
சாகுமேநேரம்அது பிசகிற்றானல்
சண்டாளஎத்தொழிலும் பிசகும்பாரோ (எ)

இதுவுமது

உஉகூ பிசகாமல்விநாடிஅங்கே அறியவேண்டும்
பிணக்கறுக்கசாஸ்திரத்தில் வினையம்வேண்டும்
அசையாமல்ஒருமனதாய் நிறுத்தவேண்டும்
அறிவானபுத்தியினல் அறியவேண்டும்
திசையானகுருவினிடம் கேள்விவேண்டும்
செய்தொழிலும்கைபாகம் தெரியவேண்டும்
வசமானபெரியோர்க்கு வணக்கம்செய்தால்
வழியானதொழில்செய்யும் வகைசொல்வாரோ (அ)

சிறப்புவிதி,

பிணிகொண்டவூண்காலமுதல் விநாடியின்பலன்

உ௱௰ சொல்லவேவூண்முதலாம் விநாடிதன்னில்
தொடர்பிணிதானாலைந்து நாளில்தீரும்
வெல்லவேநோய்அதுதான் பெலனேறுஇல்லை
வெற்றிஆம்அரசுபகை இருக்கொண்ணாது
அல்லவேஇவன்பகையிற் பிணிதான்மெத்த
ஐங்கரனார்க்கபிஷேகம் செய்தால்மைந்தா
சல்லியங்கள்தொடுத்துநின்ற பிணிகளாலே
சஞ்சலங்கள்ஒன்றுமில்லை சவுக்கியம்ஆமே (௯)

பிணிகொண்ட ஊண்கால - உ - ஆம் விநாடியின்பலன்

உ௱௧ சவுக்கியம்ஆம்ஊண் இரண்டாம் விநாடிதன்னில்
சரீரத்திற்பிணி அதுதான்சாரும்ஆகில்
அவத்தம்இல்லைநாள்ஏழிற் குணமதாகும்
ஐங்கரனார்க்கருச்சனை செய்தடிபணிந்தால்
சிவக்கும்ஒருஅரசுபகை இராதுமைந்தா
திடம்செய்யமாட்டாது வலுவேஇல்லை
குவித்திருக்கும்ஒருபிருதிவியின்கூறுயநின்ற
கொள்கையினால்வந்ததிந்தக் குணம்நான்பாரே (௰)

பிணிகொண்ட ஊண்கால - ௩ - ஆம் விநாடியின்பலன்

உ௱௨ குணமானவூண்மூன்றாம் விநாடிதன்னில்
குறித்தவுடல்வந்தபிணி நாள்ஒன்பானில்
மணமாகத்தீருவதே திண்ணம்திண்ணம்
வழிக்காகைவிநாயகர்க்குப் பூசைசெய்தா
கணம்ஆகாதரசுபகை இருந்தாலுந்தான்
கண்டிப்புமெத்தஇல்லை அறசுற்பாதி
இனமானஅரசுபகை ஊணில்வலுயில்லை
என்னசெய்வான்கோபம்அது செய்யொண்ணாதே (௰௧)

பிணிகொண்ட ஊண்கால - ௪ - ஆம் விநாடியின்பலன்

உ௱௩ ஒண்ணாதவூண்நான்காம் விநாடிதன்னில்
உடலில்வரும்பிணிஅதுநாள் பதின்மூன்றுக்குள்
திண்ணமாய்த்தீர்ந்துவிடும் செப்பினேன்பார்
சித்திவிநாயகர்க்கவலும் கடலைதேங்கா
வண்ணமாம்பால்பழங்கள் படைத்துமைந்தா
வணக்கமாய்ப்பிராமணனே பசாரம்செய்தால்

அண்ணல்பகை இருந்தாலும்வலுச்செய்யாது
அப்பனேபிரிதிவியின்கூறிதாமே

பிணிகொண்டஊண்கால - ரு - ஆம் விராடியின்பலன்

உ௩ச கூற்றுணஊண்அஞ்சாம் விராடிதன்னில்
கொண்டபிணிபதினஞ்சு நாளில்தீரும்
வேற்றுண அரசுபகை வேதைசெய்யும்
விநாயகர்க்கு அபிஷேகம்செய்துமேலும்
சாற்றறியவேதியர்க்கு அன்னதானம்
தன்மைவுடன்செய்திடவே தணிந்துபோகும்
பாற்றுணஊண் அதிலேவந்தரோகம்
பரிவானபிரிதிவியைச் சார்ந்ததாமே (மங)

பிணிகொண்டநடைக்கால முதல்விராடியின்பலன்

உ௩ரு சார்தம்ஆம்நடைதனிலே முதல்விராடி
சரீரத்திற்பிணி அதுதான்சாரும்ஆகில்
நேர்ந்தபடிசடலத்தை வருத்தம்செய்து
நீக்கும்அடாநாள்பத்தில்வினைநில்லாது
வேந்தன் அவன்பகைத்ததனால் வினையேஇல்லை
மேதினியில்இருவருக்கும் தோழன் ஆகும்
வார்ந்தமயில்வாகனத்தில் ஏறிஆடும்
வடிவேலனைத்தொழுதுவணக்கம்கொண்டே (மச)

பிணிகொண்டநடைகால உ-ஆம் விராடியின்பலன்

உ௩சு கொள்ளவேநடையிரண்டாம் விராடிதன்னில்
குறித்தபிணிபதினஞ்சு நாளில்மைந்தா
தள்ளவேசாந்தம் அதாம்மைந்தாகேளு
தண்ணீரிற்பகைத்த தொருபீடைதானும்
கொள்ளவேகொல்வதில்லை செந்தூர்வாழும்
குமரகுருசெயல் இருக்கிற்குறைஒன்றில்லை
விள்ளவேதிண்ணம் இதுமுனிவர்சொன்னார்
வேந்தனிடப்பகை பெரிதாம்சொல்லினேனே (மரு)

பிணிகொண்டநடைகால - ௩ - ஆம் விராடியின்பலன்

உ௩எ சொல்லவேநடைமூன்றும் விராடிதன்னில்
தோன்றினதோர்பிணி அதுநாள்இருபதுக்குள்
சல்லியம்ஆம்பிணியாலேவருத்தம்மெத்த
துணைமுகனார்க்கருணையினால்சாந்தம்ஆகும்

கல்லல்இடும்சத்துருஊண் அரசாகாது
கலங்காத மனத்தையும் தான்கலக்கச் செய்வான்
தொல்லைஇது அப்புவினல் வந்தபீடை
தொலைந்துபோம்தாமிசத்தில் துடிசெய்யாதே (கசு)

பிணிகொண்டநடைகால ச ஆம்விநாடியின்பலன்

உ௩அ துடியானநடைநான்காம் விநாடிதன்னில்
தொடுத்தபிணிநாள் இருபத்தைந்தில்மைந்தா
துடிவானசண்முகத்தின் கிருபையாலே
வயித்தியத்தாற்சாந்தியதால் தீர்ந்துபோகும்
முடிவானவிந்துஅங்கே தரித்தநேரம்
மொழியநின்றநவக்கிரக தோஷத்தாலே
கடுகியேவந்தபிணி நீரின்கூறும்
கலக்கம்இடும்சத்துருவின்பகையாகாதே (கஎ)

பிணிகொண்டநடைகால ரு ஆம்விநாடியின்பலன்

உ௩௯ ஆகாதநடைஐந்தாம் விநாடிதன்னில்
அப்பனேதேகத்தில் பிணிதான்வந்தால்
போகாதுஅரசுபகை புகவொண்ணாது
போசனத்தின்பகைஅரையிற் பொல்லாதப்பா
நோகாதுநோகும் அடாதேகம்மைந்தா
நுண்ணிதம்ஆம்பாசம் அதாஒன்றுக்குள்ளே
வேகாதுவெந்தல்லோ நீரதாகும்
வேலவர்க்குஅபிஷேகம் செய்யச்சொல்லே (கஅ)

இதுவுமது

உ௪0 செய்யவேமுருகனிட கிருபையாலே
தீராதவியாதியஸ்த்தன் தோஷம்தீரும்
கொய்யவேஅரசுபகை இருந்தால்அப்பா
கொடுமைஉள்ளசனியனுக்கு அபிஷேகந்தான்
நொய்தாகும்நோய் அதுதான் வலுச்செய்யாது
நுவலாதுஎன்னசொல்வேன் ஜலத்தின்கூறும்
எய்பவந்ததல்லாமல் வேறொன்றில்லை
யிவன்பிழைத்தயன்எழுத்தின்பெலன்என்பாரே (கக)

பிணிகொண்டஅரசுகால முதல்விநாடியின்பலன்

உ௪க பெலமாகஅரசுமுதல் விநாடி தன்னில்
பெரிதாகட்ட வில்வந்த பிணிதான்ஐயா

தலமான அக்கினியாற் சூழ்கொண்டு
ஜடலம் எல்லாம் வெந்துருகி பெழுகும் ஆகி
நலம் ஆனநாள் மூன்றில் குணம் அதாகும்
நற்சடையோன் சிவன்தனக்கு அபிஷேகந்தான்
வலம்வந்து செய்திடவே நோய்கள் எல்லாம்
மக்களே தீர்ந்திடுதல் திண்ணம் ஆமே (உ0)

பிணிகொண்ட அரசுகால உ. ஆம்விநாடியின்பலன்

உசஉ திண்ணம் அடா அரசிரண்டாம் விநாடி தன்னில்
ஜெடலத்தில்வந்தபிணி திரர்செய்யாது
வண்ணமடா நாள் ஐந்தில் தீர்ந்துபோகும்
வண்மையுள்ள சிவகிருபை ஆனதாலே
சொன்னோம் அடா அக்கினியும் பகைத்தால் ஏது
துடியான சனியனிடத் தோஷத்தாலே
எண்ணம் அடா பீடையது விலகும்பாரு
எள்ளளவும் நோய்பெலனே இல்லைத்தானே (உக)

பிணிகொண்ட அரசுகால ங ஆம்விநாடியின்பலன்

உசங இல்லை அடா அரசு மூன்றாம் விநாடிதன்னில்
எழும்பியதோர் தேகத்தில் வந்தநோவு
தொல்லை அடா என்று சொல்லி நினைத்திடாதே
துடியான சிவனுக்கு அபிஷேகம்செய்தால்
சள்ளை அடா ஒன்றும் இல்லை நாள் எட்டுக்குள்ளே
சடலத்தில்வந்தபிணி தள்ளிப்போகும்
பிள்ளைகளே அக்கினியால் வந்ததோஷம்
பெலம்செய்யமாட்டாது தீரும்பாரே (உஉ)

பிணிகொண்ட அரசுகால ச ஆம்விநாடியின்பலன்

உசச திரமாம் அரசு நான்காம்விநாடி
செடத்திலேவந்தபிணி தினம்தான் பத்தின்
மாறிவிடும் சனியினிட தோஷம்தானும்
மக்களே சிவன்தனக்குக் குளிரவைநீ
நீரிவிடும்நோயதுதரன் வினையில்லாது
நிலத்தரசு ஒருவரிடம் பகையும் இல்லை
காரிழையாள் பூமடந்தை கிருபையாலே
கண்ட பலன் நான் உரைத்தேன் கருத்தில்வையே (உங)

பிணிகொண்ட அரசுகால-ரு-ஆம்விநாடியின்பலன்

உ௪ரு கருத்தான அரசுஐந்தாம் விநாடிதன்னில்
கண்டபிணிபனிரண்டு நாளில்தீரும்
வருத்தம்அதுசெய்யாது வலிதுகொஞ்சம்
மனமகிழ்ச்சிஇல்லாது வியாதிபோலும்
பொருத்தமஅது அக்கினியாற்கண்டரூபு
பொருமைஉள்ளசிவன்உமையாள் கிருபையாலே
தரிப்பதுவே இல்லை இல்லை நோய்கள்தானும்
தண்மையாய்த்தேகம்இது சவுக்கியம்ஆமே (உ௪)

பிணிகொண்டசித்திரைக்கால் முதல் விநாடியின்பலன்

உ௪௬ ஆமப்பாஉறக்கத்தில் முதல்விநாடி
அப்பனேதேகத்தில் பிணிதான்வந்தால்
காமப்பாவாயுவினுற் கண்டதோஷம்
கடினம்அடாதிரும்புவது நாள்எட்டுக்குள்
சோமப்பாஅரசுபகை ஆகாதுபாரு
சொன்னேம்அடாகாளிக்கு அபிஷேகம்செய்தால்
நாமப்பாஅநுமனுக்கு வணக்கம்செய்தால்
நன்மயதாய்அப்பிணிதான் தீரும்பாரே (உ௫)

பிணிகொண்டசித்திரைக்கால-உ-ஆம் விநாடியின்பலன்

உ௪௭ தீரும்அப்பாஉறக்கம் இரண்டாம்விநாடிதன்னில்
ஜெடலத்தில்வந்தபிணி தீர்வதரிதேஆகும்
மாறும்அப்பாலகுவாகித் திரும்பும்பின்னும்
மனத்துயரம்ரம்பவும்ஆம் அடைஞ்சல்மெத்த
ஆறும்அப்பாகண்டவர்கள் விதிப்பயனேவென்று
அலறுவார்உலறுவார் அகிலம்தன்னில்
தேரும்அப்பாநாள் அதுதான் பதினேந்துக்குள்
திடம்ஆணகாளிக்கு அபிஷேகம்செய்யே (உ௬)

பிணிகொண்ட சித்திரைக்கால்-௩-ஆம் விநாடியின்பலன்

உ௪அ செய்யவேஉறக்கம மூன்றும்விநாடி
தேகத்தில்பிணிவந்தால் சேதம்போல
நொய்யவேஜடலத்தை நோகச்செய்தே
நொருக்கிவிடும்வாயுவினுல் வந்ததோஷம்
வைபம்அதில்காளிக்கும் பலியும்பொங்கல்
வயிரவர்க்குவடமாலை மகிழ்ந்துசாத்தி

எய்யவேபண்டிதன்கை மருந்தைச்ந்தால்
இதுதிரஇருபதுநான் சொல்லும்பாரே (உ௭)

பிணிகொண்ட சித்திரைக்கால-௬-ஆம்-விநாடியின்பலன்
உ௬௧ செல்லும்ஒரு உறக்கம் நான்காம்விநாடி
தீவினை ஆம்பிணிகொண்டால் தேகம்தன்னில்
கொல்லவேவெகுகொடுமை கொள்ளும்கொள்ளும்
கூற்றுவனும்அரசுபகை ஆகநின்றால்
அல்லவேமாசம்ஒரு மூன்றுக்குள்ளே
அல்லாவிட்டால்தீருவது மாசம்மூன்றில்
வெல்லவேகாளிக்கு அபிஷேகம்செய்தால்
வெல்லுவது திண்ணம்என்றுசொல்லொண்ணாதே (உ௮)
பிணிகொண்ட மரணகால-ரு-ம்-விநாடியின்பலன்
உ௬௰ ஒண்ணாதஉறக்கம்ஐந்தாம் விநாடிதன்னில்
உத்தமனேதேகத்தில் பிணிதான்ஆனால்
எண்ணாதசாவதுதான் எய்தும்எய்தும்
இசையாதஅரசுபகை இருந்ததானால்
தண்ணாதுதண்ணும்அடா க்ஷணத்துக்குள்ளே
தன்மையுள்ளஅரசுமித்ரு ஆகநின்றால்
கண்ணாதுதீரும்என்று சொல்ஒண்ணாது
கடினம்அடா அஞ்சுபத்து நாள்தான்காணே (உ௯)
பிணிகொண்ட மரணகால முதல் விநாடியின்பலன்
உ௬௧ நாளானமரணத்தின் முதல்விநாடி
நலமானதேகத்தில்பிணிதான்வந்தால்
கேளாதேகூற்றுவன்ஆம்அரசுபகையானால்
கெணிதமதுமாசம்தான் இரண்டுக்குள்ளே
பாழாகப்போகுமடா ஜடலம்தானும்
பழிகாரன்கோவானால் ஓடுக்கவைப்பான்
தாளாதஆகாசவெளியின்தோஷம்
தன்மையாய்வரும்ஆனால்மாசம்ஆறே (௩௰)
பிணிகொண்டமரணகால-உ-ஆம்விநாடியின்பலன்
உ௬௨ ஆறுதமரணம்ரெண்டாம் விநாடிதன்னில்
அப்பனேதேகத்தில் பிணிதான்கொண்டால்
தீராதஅரசுபகை பொல்லாதப்பா
க்ஷணத்திலேதேகம்விட்டு உயிரைநீக்கும்

தோராமல்சூனியத்தில் சேர்ந்ததோஷம்
இடமானகூற்றன் அவன் பிடரிநின்று
பாராமல்இவ்வுடலை அழிப்பான் அன்றோ
பழியாகும்வருஷம் ஒன்றிற் பாருபாரே (௩௧)

பிணிகொண்டமரணகால-௩-ஆம் விநாடியின்பலன்

௨௫௩ ஒன்றான மரணம் மூன்றாம்விநாடி
உத்தமனே உடல்தனிற் பிணிதான்வந்தால்
நன்றான ஆகாச வெளியின்தோஷம்
நலமானஊண் அரசு பகை ஆகாது
சென்றான சூனியத்திற் சேர்ந்தநேரம்
இடமானகங்கைவிட சாபம்போல
கன்றானவுடல்விட்டு உயிர்போம்அப்பா
கனிவாகத்திரும்புவது அரிதாம்காணே (௩௨)

பிணிகொண்டமரணகால-௪-ஆம்விநாடியின்பலன்

௨௫௪ அரிதாகும்மரணம் நான்காம்விநாடி
அப்பனே ஜடம்அழிக்க வந்தநோயாம்
பெரிதாகும்சத்துருநாள் மரணவேளை
பேணியே அரசுபகை ஆகவேண்டும்
சரியானதினமரணம் ஆகவேண்டும்
சண்டாளசூனியமும் சேரவேண்டும்
குறியாக அவன்ஜடலம் அழிந்துபோகும்
குணமாகமாட்டாது வருத்தம்ஆமே (௩௩)

பிணிகொண்டமரணகால-௫-ஆம்விநாடியின்பலன்

௨௫௫ வருத்தமடாமரணம்ஐந்தாம் விநாடிதன்னில்
மக்களே உடல்அழிந்த வந்தநோய்தான்
கருத்தனடா பிதா ஆன பிரமன்சேர்ந்த
கணக்கென்றதொகைசரிதான் இனிவேறில்லை
விருத்தன்என்றகாலன் அவன் தானேவந்தால்
வேணபடிபட்டதினால் வருவதேது
மருந்தொருசொல்சொல்லாது உயிர்போம்போது
வாழ்க்கைஎன்ன ஆசையென்னவருமோபாரே (௩௪)

பிணிகாலஅளவு

௨௫௬ வரும்என்றபிணிகால் அளவுசொல்வேன்
வழியானஊண்தனக்கு மாசம்ஒன்று

குறுகியதோர்நடைதனக்கு காலம்அப்பா
குலவியதோர்மாசங்கள் ஆறதாகும்
தருமம்மிகும்அரசாட்சி தனக்கோஎன்னில்
தண்மைஉள்ளபட்சம்ஒன்றாய்ச் சார்ந்துநிற்கும்
மருமம் இல்லைதூக்கத்தின் காலம்மைந்தா
வருஷம்ஒன்றும்இதில்இருந்து வாழுதாமே (௩௫)

இதுவுமது

௨௫௭ வாழாதமரணத்தின் காலங்கேளு
மகிழ்ச்சியில்லைவருஷம்அது மூன்றதாகும்
கேளாதபிணிக்கான காலம்சூதாம்
கெடுதியதாய்ச்சூனியம் உற்றிருந்ததாலே
மாளாதஅரசுபகை ஆனதோஷம்
மக்களேஒன்றுபத்தாய் வளரும்பாரு
ஆளாகஅருள்செய்யும் மாமுனிவன்வாக்கால்
அறிந்தபடிஅறிவித்தேன் திண்ணம்ஆமே (௩௬)

இதுவுமது

௨௫௮ திண்ணமாம்ரோமரிஷி முனிவன்வாக்கு
திண்ணம்என்றுமனதுறுதி யாகக்கொண்டா
எண்ணமாம்காலமுழு தரியலாகும்
எடுத்ததொருகாரியமும் ஜெயமேஆகும்
வண்ணமாம்ஞானவிதி கைவசமேஆகும்
மகத்தானகன்மம்எட்டும் பலிக்கும்பாரு
கண்ணதாம்வேளைகண்டு முடிக்கவேண்டும்
கண்மணியேசாந்திசொல்வேன்கருதிப்பாரோ (௩௭)

சாந்திப்பொது

௨௫௯ பாரடாபாரில்உள்ள மாந்தர்க்கையா
படரும்ஒருபிணிஅதுதான் விலகுதற்கு
நேரடாசாந்திசெய்தால் தீரும்பாரு
நேர்மைஉள்ளபீடையது தீராவிட்டால்
சாரடாபாரைதனில் பாசிபற்றி
தள்ளுவதுபோல்சுறுக்கி சரீரம்நோகும்
ஏரடாதொடுத்ததிது கன்மபீடை
என்மகனேஅறிவாகும் ஊனைக்கேளே (௩௮)

ஊண்காலப்பிணிக்குச்சாந்தி

உசுயி ஊண்என்றபட்சியினல் வரும்நோய்தீர்க்க
உத்தமனேகணபதியை நிறுத்திமைந்தா
வேணமடடும்வெள்ளைமலர் சாத்திநன்று
மேன்மேலும்உபசாரத் துடன்வணங்கி
ஆமெனன்றஓம்ஸ்ரீம் ஹரீம் ரீம் சங் உங் என்
ஐயும்கிலீம்கணபதி சர்வசாப
வாமெனன்றமசிநசி எனவேமைந்தா
மனதொருமித்தாயிரத் தெட்டுருந்தான்ஓதே (௬௯)

இதுவுமது

உசுக உருவான அதன்பிறகு கும்பம்வைத்து
ஒருபடிநெல்பரப்பி அறுகோணம்இட்டு
திருவானகாரணபஞ்சாட் சரம்கீறி
செயம்ஆனகாரியபஞ்சாட் சரமும்சேர்த்து
ஒருவானசக்கரத்தில் சூலம்விட்டு
ஓம் அம் உம் சிவ சிவா என்றுநாட்டி
தருவானகும்பத்தில் சலம்நிரைத்து
தண்மையுள்ளமாவிலையை அதன்மேல்வையே (௭௰)

இதுவுமது

உசுஉ வைத்தபின்பு அதன்மேலே தேங்காய்வைத்து
வாகானநூல்சுற்றி ஆடைசாற்றி
வைத்ததொருகும்பத்தின் முன்னேஐயா
வஸ்துவுடன்சத்தியும்தான் வைத்துமைந்தா
நெய்த்ததொருவர்க்கவகை மிகப்படைத்து
நேரிருந்து ஓம் ஐயும் கிலீயும் சௌவும்
தைத்ததொருபாணம் அடா அங் வுங் என்று
சர்வபீடைகளும் மசி நசி யென் றோதே (௭௧)

இதுவுமது

உசுங ஓடாதஆயிரத்தெட்டுருவம் ஆனல்
உத்தமனேஓமகுண்டம் இரண்டுபோடு
வாடாதசமித்துவகை சொல்லக்கேளு
வன்னிமுன்அரசுருகி தர்ப்பைநெல்லு
எதடாஆவின்நெய் ஆகுதிகள்செய்து
என்மகனேகுண்டத்திற் கு பசாரம்செய்து

கோதிலா அட்சரத்தைச் சொல்லக்கேளு (௬௨.)
குணமாகமுதல்உரைத்த தெடுத்துஓதே
இதுவுமது
௨௬௪ ஓதியதோர்உருஅய்யா பிரமாணுல்
உத்தமனேபெலியுடனே பொஙகவிட்டு
கோதில்லாசாம்பல்எல்லாம் குடத்தில்போட்டு
குடத்துநீர்அவன்சிரசில் விடுக்கும்போது
ஆதிதனைச்சிவசிவா யெனநினைத்து
அப்பனேஅபிஷேகம் செய்துபாரு
நீதியாம்நாள்அதுதான் பதினென்றுனுல்
நிலையாதுபீடையெல்லாம் விலகும்பாரே (௬௩)
இதுவுமது
௨௬௫ விலகுமேவெள்ளியினுல் தகடுசெய்து
வியாதிஉச்சாடனம் விதித்தெழுத்தைமாறி
கலகம்இல்லாதேவியென்ற வாலைபூசை
கைபாகம்தப்பாமல் கனிந்துசெய்து
நிலையானமூன்தகட்டை மூன்புவைத்து
நிகழ்ந்துஉச்சாடனம்உரு ஆயிரத்தெட்டேஆனுல்
விலகாமல்இறுந்திட்ட பீடைபோச்சு
மேன்மேலுமகன்னிக்கு உபசாரஞ்செய்யே (௬௪)
நடைகாலப்பிணிக்குச்சாந்தி
௨௬௬ செய்துபார்நடைஅதனிற் பீடைவரும்ஆகில்
தீர்ப்பதற்குவினயகரை வைத்துக்கொண்டு
கொய்துபார்குண்டம்ரெண்டு கும்பம்பத்து
கூறுனசமித்துவகை சொல்வேன்மைந்தா
நைவானஅரசுவன்னி உருபிதற்பை
நல்லவினாம்அரசுபலா கருங்காலிச்சுப்பல்
நெய்வானநெற்பொரியும் கடலைமொச்சை
நேருகக்கலந்துகொண்டு குண்டம்போடே (௬௫)
இதுவுமது
௨௬௭ போடவேஆவின்நெய் இலுப்பைநெய்யும்
புண்ணியனேயிரண்டும்ஒன்றுய்க் கலந்துக்கொண்டு
நாடவேயெக்கியத்தில் ஆகுதிகள்செய்ய
நல்லதொருஅட்சரத்தைச் சொல்லக்கேளு

ஆடவேஷம் ஸ்ரீம் ரீம் அங் உங் என்
ஐயும்கிலீயும்கணபதிசர்வபீடா
தேடவேமசிநசிஎன்று பதினாயிரந்தான்
செலுத்துவாய்பொங்கல்பெலி உபசாரஞ்செய்யே (சகு)

இதுவுமது

உசுஅ செய்துகொண்டுகுண்டத்தின் சாம்பல்எல்லாம்
திரணமும்தான்போகாமல் கும்பத்தில்போட்டு
பெய்துநீர்குளுப்பாட்டி சிவாயென்றேதான்
பிரியமுடன்சிவன்பாதம் பெரிதும்போற்றி
செய்துகொண்டுரவித்தகடு அதனில்மைந்தா
திரமானதம்பனத்தை எழுதிக்கட்டு
வைதுகொண்டுபோகும்அடா நடையின்பீடை
மக்களேபதினொருநாள் செய்துபாரே (சள)

அரசுகாலப்பிணிக்குச்சாந்தி

உசுக செய்யவேஅரசுதனில் பீடைவந்தால்
திடமானகணபதியை வைத்துப்போற்றி
செய்யவேகும்பத்தை முன்னேவைத்து
நேர்முகமாய்வாலைதனைப்பூஜைசெய்து
கொய்யவேகுண்டம்அதுஇரண்டுசெய்து
கொளுத்துகிறசமுத்துவகைசொல்வேன்மைந்தா
நைவானஅரசுசெஞ்சந்தனமேஆகும்
நன்மையுள்ளநெற்பொருகாராவின்நெய்யே (சஅ)

இதுவுமது

உஎய நெய் நுண ஆகுதிகள்செய்துக்கொண்டு
நேர்இருந்துஉருஐயாயிரம்நீபோடு
துய்யாதபலிஉடனேதூபம்காட்டி
தோணவேசாம்பல்எல்லாங்கும்பத்திட்டு
கையாலேபிணியாளன்தலைமேல்விட்டு
கருணைஉள்ளசிவன்பதத்தைக்கருத்தில்வைத்தால்
மெய்யாலேவருகின்றபிணிகள்ஓடும்
மேலானசுவர்னத்நால்தகடுசெய்யே (சகூ

இதுவுமது

உஎக தகடதிலேமசியெழுத்தைவரிந்துகொண்டு
தப்பாமல்நாள்யேழுபூசைசெய்து

விசுடம்இதில்இல்லாமல் போகும்போது
மேலானபீடைஎல்லாம் விலகிப்போகும்
சகடம்இதில்சிவன்கிருபை மெத்தவுண்டு
தரணிதனில்அறிந்தவர்கள் வணங்கிப்போற்றி
அகடில்லாதுலகதனில் வாழ்வார்பாரு
ஆகலினால்பீடை இதில் விலகும்பாரே (௫௦)

நித்திரைகாலப்பிணிக்குச்சாந்தி

௨௭௨ பாரடாஉறக்கத்தில் வரும்பீடைதானே
பதிவிடுத்துவிலகுதற்கு பக்குவம்கேளீர்
நேரடாகணபதியை வைத்துக்கொண்டு
நேர்முகமாய்வாலையின்முன் கும்பம்வைத்து
ஓரடாஓம்குண்டம் நாள்தான்போக
உத்தமனேசமித்துவகை உரைப்பேன்ஐயா
கோரடாபால்அரசு அத்திஇத்தி
குலவியதேவன்னிமுன்னே உருவிளள்ளே (௫௧)

இதுவுமது

௨௭௩ என்னுடனேநவதான்யம் நெற்பொரியும்சேர்த்து
எள்மகனேயாவின்நெய் இலுப்பைநெய்யும்
தென்னுடனேதேங்காய்நெய் கலந்துக்கொண்டு
தொப்பையினாற்கோரிவிடும் உருஎருமட்டும்
அன்னுடனேஓம் ரீம்கலியும்ஐயும்சௌவும்என்று
அப்பனேஸ்ரீம்ஹரீம் அங்உங்சிவாஎன்று
கின்னுடனேசர்வபீடை மசிநசிஎன்று
கெடியாகஎழுபதினாயிரம் போதோன்ட (௫௨)

௨௭௪ போடடாகுண்டம் ஒன்றில்தம்பனம்தான்
புகனமற்றொன்றில் பேதனம்தான்
கேட்டாவித்வேஷணம் தான்மூன்றில்
கெடியானநான்கில் இடுபேதனம்தான்
நாட்டாபெலியுடனே தூபங்காட்டி
நலமானகுண்டத்தில் சாம்பல்வாரி
கேடாட்டாகும்பத்தில் விடுத்துமைந்தா
குளுப்பாடச்சிவன்தனக்கு அபிஷேகம்செய்யே (௫௩)

இதுவுமது,

உ௭௫ செய்யவேரளிமதியும் சேர்த்துக்கொண்டு
திரமாகத்தகட்டினில் உச்சாடனம்தான்சீறி
உய்யவேபிணியாளன் தனக்குக்கட்ட
ஓடிவிடும்பீடையென்ற தோஷம்எல்லாம்
துய்யவளாய்கன்னிக்கு உபசாரஞ்செய்ய
சொறபெரியவேதியர்க்கும் உபசாரம்செய்
வையகத்தில்இவைகளெல்லாம் நன்றுநன்றும்
மக்களேமண்டலம்தான் அனையாய்செய்யே (௫௪)

மரணகாலப்பிணிக்குச்சாந்தி.

உ௭௬ செய்யடாமரணத்தின் பீடைவரும்ஆகில்
திரும்புவதுவருத்தம்அடா சிவன்செயலேவேண்டும்
துய்யவனும்கணபதியை வைத்துப்போற்றித்
தொடுத்திடுவாய்வாலையிடம் கும்பம்வைத்து
மெய்யானஓமகுண்டம் எட்டுபோடு
விளம்புகின்றசமித்துவகை சொல்வேன்மைந்தா
தைஅரசு அத்திஇத்தி உருவிவன்னி
தனதானகருங்காலி மாவின்கொம்பே (௫௫)

இதுவுமது

௩௭௭ கொம்புடனேபுரசுசுப்பல் நெல்விசுப்பல்
கோர்வையாய்நவதானியம் பொரியுங்கூட்டி
அன்புடனேமேதைநெய்யும் செம்மறியின்நெய்யும்
அப்பனேஇலுப்பைநெய்யும் தேங்காய்நெய்யும்
தென்புடனேபுன்னைநெய்யும் புங்கன்நெய்யும்
தெளிவானவேம்பின்நெய் பன்றிநெய்யும்
இன்புடனேகேசரியின் நெய்யுங்கூட்டி
எடுத்திடுவாய்அக்கியத்தில் இனிநாம்பாரே (௫௬)

இதுவுமது,

உ௭௮ பாரேநீகுண்டம்எட்டில் கன்மரெட்டும்
பாங்காகஜபம்பதினாயிரமே ஆனால்
வாரேநீவினையற்ற பொங்கல்பலிதூபம்
வேணதும்செய்தெரிந்ததனைக் கும்பத்திட்டு
நேரேநீஇன்றுசதா சிவர்தனைப்போற்றி
நீர்கொண்டுஅவன்சிரசில் அபிஷேகித்தால்

சோராமல்மண்டலவ்ஞன் றிவ்வண்ணம்தான்
தொடர்ந்துமின்றதோஷம் எல்லாம்விலகும்பாரே. (ருஎ)

இதுவுமது,

உஎகூ விலகுமேஇவ்விதத்தால் வந்ததோஷம்
வேறெனினும்இவ்வண்ணம் சாந்திதானே
சலனம்இல்லைசெய்துகொண்டால் நீங்கும்நீங்கும்
தரணிதனில்சவுக்கியமாய் வாழலாகும்
இலகுவதாம்என்னசெய்யப் போகுதென்று
எளிதாகநினைத்துவிட்டால் இழுத்துக்கொல்லும்
அலையவேபிரமனிபி உள்ளமட்டும்
அலக்கழிக்கும்பீடை இன்னம் தோணும்பாரே (ருஅ)

இதுவுமது,

உஅம் தோணுமோஉலகில்உள்ள பசாசர்க்கெல்லாம்
தோணுதுபஞ்சபட்சி சூட்சம்அப்பா
காணுமோகருக்கிடையும் கருமானம்தான்
கருணைவைத்து ஆசானே காட்டவேண்டும்
பேணவேமனதுறுதி ஆகவேண்டும்
பிசகினல்பஞ்சபட்சி பிசகிப்போகும்
ஆணவேஅட்சரங்கள் அரியவேண்டும்
அறிவதென்றால் அறிதாகும் உரைப்பேன்ஊணே (ருகூ)

பிணிப்படலம் முற்றிற்று,



# யாத்திரைப்படலம்.



பொதுவிதி,

யாத்திரைக்கு ஊண்காலபலன்.

உஅக ஊண்அதிலேவழிப்பயணம் புறப்பட்டால்தான்
உத்தமனேஉடலில்ஒரு பிணியும்இல்லை
தோணவேபோஜனங்கள் வர்க்கவகைஉண்டு
சொல்லரியதோஷருடன் பிறபுஉறவாகும்
தாணுவாய்தன்னிடத்திற் பொருளுடைமைசேரும்
சஞ்சலங்கள்பணத்திற்குச் சற்றும்இல்லை
மாண்புடைய அரசன்தான் சத்துருவே ஆனல்
வழிநடையில்துயரம்மெத்த வழுக்கலாமே (க)

இதுவுமது

உஅஉ வழுத்தவேஉடல்தனக்கு வருத்தம்உண்டாம்
வகையானபேர் ஜனங்கள் வாய்த்திடாது

கொளுத்துமோர்சுலுகுசண்டை களவும்ஆகும்
கொடுமையாய்உறவினரை அகற்றிவைப்பான்
தழைத்ததோர்மனதிற்குளவளவேணும்
சந்தோஷம்சலனம்அல்லால் சற்றும்இல்லை
சுழித்ததோர்சத்துருவின் வலிதாகாது
துணையானமித்துருவின் வலிதுநன்றே (௨)

யாத்திரைக்கு நடைகாலபலன்,

௨௮௩ நன்றல்லநடையிலே போகொண்ணாது
நடந்தலைவதல்லாது மற்றொன்றில்லை
பண்டுறவாய்இருந்தவரும் பகைவர்ஆவர்
பசிநேரம்பொசிக்கும் அந்தப்பலனும்இல்லை
வண்டயரம்கூந்தல்நல்லார் சேர்வும் இல்லை
வழக்குகளிற்சென்றாலும் வெல்வதில்லை
கொண்டமனையாட்டியுடன் கொடுமைமெத்த
கூற்றன்என்றசத்துருவன் அரசாகாதே (௩)

இதுவுமது,

௨௮௪ அரசனாய்மித்துருதான் இருந்தால்நன்று
அலங்காலும்பொசிப்புக்கு இனம்உண்டாகும்
சிரசரியவந்ததொரு பீடைதன்னை
சிலுகுதன்னைநீக்கிவைப்பான் க்ஷணத்திலேதான்
சரசம்இல்லைஉறவுதனிற் சொற்பலாபம்
சரீரத்திற்பிணிவந்து தானேநீங்கும்
பரிசம்என்றமணம்அதுதான் செய்யொண்ணாது
பகைவந்துஒருபோதும் வாழார்பாரோ (௪)

யாத்திரைக்கு அரசின்காலபலன்

௨௮௫ வாழ்வானஅரசுதனிற் பயணம்ஆனால்
மனதிற்குளவளவேணும் பீடைஇல்லை
க்ஷேமமாமஉறவினர்கள் அனந்தகோடி
கெடியானபோகயோக்கியங்கள்உண்டாம்
மாளாதசத்துருகளின் வழக்கும்வெல்லும்
மணம்செய்யநன்றாகப் பெருகிவாழ்வர்
ஏழ்மையில்லாப்பொருளுடன் வஸ்திரங்கள்உண்டு
இன்பம்உண்டரசனிட இணங்கப்பாரோ, (௫)

இதுவுமது,

௨அகூ பாரடாசொன்னதில் ஓர்பழுதும் இல்லை
பகையில்லைபகைத்தபேர் ஜெயிப்பதில்லை
சேரடாபிரபுஉற வாகும்பாரு
சேர்க்கையுமேமெத்தஉண்டு மனமகிழ்ச்சிஉண்டு
ஆரடாஅரசனைத்தான் வெல்லப்போனூர்
ஆராலும்கூடாது சுகம்அதிகமாகும்
நேரடாசத்துருவால் இல்லாட்டாலே
நேர்ந்தபடிவெல்லும்இது திண்ணம்தானே (௬)

யாத்திரைக்கு நித்திரைக்காலபலன்,

௨அஎ திண்ணம்அதாம்நித்திரையிற் செல்லொண்ணுது
தீராரோய்வரும் உண்ணம் இன்னல்இல்லை
வண்ணம்அதாம்முன்உறவும் பகையதாகும்
வழக்குகளிற்சென்றாலும் சேதம்ஆகும்
கண்ணனுமாய்இருந்தாலும் வாராதுகண்டாய்
கடினமடாபோனவர்கள் மீளார்மீளார்
முன்னமேபட்சிஅது உறங்கிற்றையோ
மூடர்களேசத்துருஊன் அரசாகாதே (எ)

இதுவுமது,

௨அஅ அரசாகில்சத்துருதான் கொடுமைமெத்த
அலக்கழிப்பான்மனம்புண்ணுய் நோகச்செய்வான்
சுரமானசூடுகொண்டு உடலும்காந்தி
சுழல்வண்டுசுழல்வதுபோல் துன்பம்மெத்த
பரமானஆபத்துக் காளும்ஆகித்
பகைத்தவர்கள்நகைத்திடவே பழிகள்செய்வான்
சரமானபிரசண்டை வாய்வுக்குள்ளே
சருகதுவும்பாம்பின்வாய்தவளைஆமே, (அ)

யாத்திரைக்கு மரணகால பலன்

௨அகூ தவளையடாமரணத்திற் பயணம்ஆனுல்
சத்துருதான்ஊன்அரசு தாகின்றல்
கவலைஎன்னஇனிமேலும் சாவுதிண்ணம்
கைப்பொருள்போம் மற்றொருவர்உதவிஇல்லை
சவளையைப்போல்மனம்கொதித்து நோகும்புண்ணுய்
சண்டாளசத்துருவின் பகைஆகாது

சிவன்சொல்லமுனிவர்சொன்ன திதுநப்பாரு
சென்றவர்கள்திரும்பிவர மாட்டார்பாரே (௬)

இதுவுமது.

௨௬௰ மாட்டாதமரணத்தில் மித்துருவலித்தானால்
மனம்நினைத்துப்போனதுபோல் வருவதில்லை
தேட்டமாம்பொருளாதுகைச் சிக்கிடாது
சிந்தைநொந்துபுண்ணாகிச் செடம்நோயால்
பாட்டிலேமனந்துயரப் பட்டுநொந்து
பதறுவதும்அல்லாமற் பழிவந்தெய்தும்
நீட்டியதோர்மரணத்தில் யாதொருகாரியமும்
நினைத்தாலும்நீணிலத்தில் ஆகாதுபாரே (௰)

பொதுவிதிசிறப்புவிதி உற்கும்வரலாறு

௨௬௧ ஆகாதெனதும்குறுக்கித் தெளிவாய்ச்சொன்னேன்
அப்பமனபகல்ஒன்று சாமம்அஞ்சு
நோகாது அதைகுறுக்கி நாழிகையாய்ச்சொன்னேன்
நுணுக்கும்ஆய்விநாடியிலே நுவலக்கேளு
வாகாகவகைவிபரம் ஆகத்தானே
வளமாகப்பார்த்தறிந்து வரிசைஆக
வேகாதபொருள்போல ஞானமார்க்கம்
விள்ளாமல்விள்ளும்அடா ஊணைக்கேளே (௰௧)
சிறப்புவிதி

யாத்திரைக்குஊண்காலமுதல் விநாடியின்பலன்

௨௬௨ ஊண்காலஅதனில்முதல் விநாடிதன்னில்
ஊர்ப்பயணம்யாவரெனும் போவாராகில்
சேணரியபட்சணமும் பாற்சோறுண்டு
திரவியங்கள்உண்டுபரி செனங்கள்உண்டு
மாணரியமன்னர்உற வாகும்பாரு
மழைஉண்டுமங்களசோபனங்கள் உண்டு
வேணபடிநினைத்த காரியங்கள்கூடும்
மீளவும்பிணிவருவ தில்லைப்பாரே (௰௨)

யாத்திரைக்குஊண்கால-௨-ஆம் விநாடியின்பலன்

௨௬௩ பிணிஇல்லை ஊண்இரண்டாம் விநாடிதன்னில்
பிரயாணம்செயில்நினைத்த தெல்லாம்ஆகும்
கனிவர்க்கம்போசனவர்க் கங்கள்உண்டு
கலந்துறவாம்சோபனங்கள் கந்திக்கூடும்

வணிதம்எனும்வாணிப ஆம்மகிழ்வும்மெத்த
வழிநடையில் அணிஉண்டு ஆடைஉண்டு
தனிஆன அரசுமித்துரு ஆகநின்றால்
தான்நடத்தும்காரியம்தான் சொல்லொண்ணாதே (௰௩)

யாத்திரைக்குஊண்கால-௩-ஆம்விநாடியின்பலன்

௨௯௪ சொல்லொண்ணாஊண்மூன்றாம் விநாடிதன்னில்
தொலைதூரம்பிரயாணம்போவார் ஆகில்
கல்லனையமனத்துயரம் சற்றுமஇல்லை
கண்டவர்கள்வெகுஉறவாய்க் கலந்துகொள்வார்
தொல்லை இல்லைபோஜனத்திற் குறைஒன்றில்லை
ஸ்தூலம்அதற்பிணிஇல்லை பகைகளஇல்லை
அல்லல்தரும்அரசுசத்துரு ஆகநின்றால்
அந்த்தவர்களபகைஉண்டு சோரம்ஆமே [௰௪)

யாத்திரைக்குஊண்கால-௪-ஆம்விநாடியின்பலன்

௨௯௫ சோரம்இல்லைஊண் அதில் நான்காம்விநாடி
துணிந்தேகில்துணைஉண்டு தோகைஉண்டு
சாரம்என்றபொருள்உண்டு சம்பத்துண்டு
சகலசனகூட்டுமவும் மணமும்உண்டு
காரம்என்றபந்துகளின் சேர்க்கைஉண்டு
கலங்காதேஒருபோதும் கலக்கம்இல்லை
வீரம்என்றவேந்தனி. ப் பகைஆகாது
வேந்தனிடப்பகை ஆகவும் துயரம்ஆமே (௰௫)

யாத்திரைக்குஊண்கால-௫-ஆம்விநாடியின்பலன்

௨௯௬ துயரம்ஊண்ஐந்தாம் விநாடிதன்னில்
தொலைதூரம்பிரயாணம் தொடர்ந்துபோகில்
சயமானவழிஅதனிற் பகைகள்உண்டு
தடைஉண்டுமனத்தடங்கா இடர்கள்உண்டு
சயமானஒருத்தர்உற வாகும்பாரு
கலந்ததினால்வரும்பீடை கழன்றுபோகும்
பயமானஅரசுபகை இருந்தால்மோசம்
பணியார்கள்பிறர்ஒருத்தர்பாசத்தோரே (௰௬)

இதுவுமது,

௨௯௭ பாசம்என்றஅரசுபகை இருந்தால்மோசம்
பழிவருமேவழிநடையிற் களவுபோகும்

வீசிநின்றபிணிஉண்டு அரசுபகைஉண்டு
மேலானமனுஉதவி இல்லைஇல்லை
தாசியறிற்பிறசனங்கள் கல்வியமேசெய்வர்
தனதாகஇருந்தவரும் பேசார்பேசார்
மோசம்என்றுதிசைநோக்கி வருவான்மூங்கை
மொய்குழளாள்பூமடந்தை உதவியில்லைபாரே (௧௭)

யாத்திரைக்குநடைக்கால் முதல்விநாடியின்பலன்

உ௬அ உதவிஇல்லாநடைமுதலாம் விநாடிதன்னில்
உத்தமனேஊர்ப்பயணம் போவாராகில்
சதியாகவீண்நடையால் நடத்திக்கொல்லும்
தன்மையுள்ளமனுஉதவி இல்லைஇல்லை
கதுவியதோர்சுகபோகம் தானும்இல்லை
களவுபோம்பெண்பகையாற் கலஹும்ஆகும்
பதம்ஆவதொருபோதும் வருவதில்லை
பழிகாரஊண் அரசின்பகையாகாதே (௧அ)

யாத்திரைக்குநடைக்கால் உ ஆம்விநாடியின்பலன்

உ௬௯ பகையானநடைஇரண்டாம் விநாடிதன்னில்
பார்தனிலேஊர்ப்பயணம் நடக்கொண்ணாது
தொகையானபோஜனத்தால் துயரமாகும்
துணைஒருவர்உதவிஇல்லை நாவில்நோயாம்
வகையானபொருள்கூடும் களவுபோகும்
மன்னரால்தண்டிக்க வருமேஅப்பா
தகையானபோசனத்தில் மித்துருவேஆனால்
ஜனஉதவிகொஞ்சம்உண்டாம் தன்மைபாரே (௧௯)

யாத்திரைக்குநடைக்கால் ௩ ஆம்விநாடியின்பலன்

௩௰ தன்மைஎன்றநடைமூன்றும் விநாடிதன்னில்
தனச்சேதம்உயிர்க்குதவிதானே இல்லை
உண்மைஎன்றமித்துருவும் சத்துருவாய்எதிர்ப்பன்
உலகத்தில்துணைஇவனுக் கொருவர்இல்லை
வண்மைஎன்றதந்தைமனம் வெறுத்துப்போகும்
வழிநடையில்வெகுதுயரம் வருரும்பாரு
திண்மைஎன்றசத்துருஊண் அரசன்ஆனால்
தீவினைகள்மெத்தஉண்டு சேருப்பான்தானே (உ௰)

யாத்திரைக்குநடைக்கால-௪ ம்விநாடியின்பலன்

௩௱௧ சேர்ந்திவர்நடைநான்காம் விநாடிதன்னில்
திரமாகஊர்ப்பயணம் செல்வார் ஆகில்
கோரணிக்குஉள்ளாகி விதிவசத்தைநொந்து
கொடுந்துயரால்புண்ணாகிக் குமுறுவானப்பா
தாரணியிற்சத்துருவை அரசாகாது
சண்டாளர்கொடுமை மெத்த தயங்கச்செய்வான்
தேரும்இந்தஇருவர்களும் மித்துருவாய்நின்றால்
செயம்உண்டுபிறர்உதவி செய்வார்பாரே (௨௧).

யாத்திரைக்குநடைக்கால ௫ ஆம்விநாடியின்பலன்

௩௱௨ செய்ததொருநடை ஐந்தாம் விநாடிதன்னில்
சேர்ந்திருவர்தங்களிலே மித்துருஆனால்
நொய்துமனம்புண்ணாகித் தெளிவும்ஆகும்
நொடிக்குள்ளேமனமகிழ்ச்சி நுவலல்ஆகும்
எய்திவரில்அரசுஉற வானால்அப்பா
என்மகனேவெகுசுகங்கள் எய்தும்பாரு
தைபலர்கள்உறவாகும் சந்தோஷம்உண்டு
தயவானஅரசுஉறவாகும்காலே (௨௨)

யாத்திரைக்குஅரசுகால முதல்நாடியின்பலன்

௩௱௩ உறவாகும்அரசதிலே முதல்விநாடி
உத்தமனேபிறதேசம் போகநன்று
நிறைவானசொல்உண்டு வரத்தும்உண்டு
நினைத்தபடிசுகம்உண்டு உதவிஉண்டு
குறைவானகாரியங்கள் ஒருவதில்லை
கூடிவரும்பரிசனங்கள் அரசர்உறவாகும்
பரவும்தாரணம்உண்டு பகையேஇல்லை
பகையானபேர்களும்வந் துறவாவாரே (௨௩)

யாத்திரைக்குஅரசுகால-௨-ஆம்விநாடியின்பலன்

௩௱௪ பாரானஅரசிரண்டாம் விநாடிதன்னில்
பரிவாகப்பிறதேசம் பயணம்ஆகில்
நேரானதடையில்லை துயரம்இல்லை
நினைத்தபடிமுடிப்பதற்குப் பிறபுஉறவாவன்
காரானமகிழ்ச்சி அதிகம்உண்டாம்
கண்கொள்ளாக்காட்சிகளிற் களிக்கல்ஆகும்

தேரானபூமிதனம் கைவசமேசேரும்
செல்வம்அது செப்பஎன்னல் அடங்கிடாதே (௨௪)

யாத்திரைக்கு அரசுகால (௩) ஆம் விநாடியின்பலன்

௩௭௫ அடங்காத அரசுமூன்றும்விநாடி
அப்பனேபயணம்தான் ஆவார் ஆகில்
தடங்காணும்உதவியினல் சுகங்கள் உண்டு
சண்டாளசத்துருக்கள் இல்லைஇல்லை
மடங்காதவாழ்வென்னல் மதிக்கப்போமோ
மன்னர்உறவாகுமன மகிழ்ச்சிஉண்டாம்
ஒடுங்காதபூபரது துணைதான்உண்டு
உரைக்கலொண்ணதிவன்வாழ்வு உரைக்கஎன்னல் அரிதே (௨௫)

யாத்திரைக்கு அரசுகால ௪-ஆம் விநாடியின் பலன்

௩௭௬ அரிதான அரசுநான்காம்விநடி
அப்பனேகங்குகரை இல்லைசெல்வம்
பெரிதானஇடங்களிலே மணம்சேர்க்கைஉண்டு
பின்தொடரும்ஆண்குழந்தை பிரபலமேஆகும்
சரியானபொருள்வரத்து உண்டாம்மேலும்
சவுக்கியம்என்ற சுகபோகம்சுத்தம்உண்டு
குரியானஇவன்தன்னல் குலம்ஈடேறும்
குவலயத்தில்உண்டாகும் வெகுஉதவியாரே (௨௬)

யாத்திரைக்கு அரசுகால(௫) ஆம்விநாடியின்பலன்

௩௭௭ உதவிஎன்றஅரசுஐந்தாம் விநாடிதன்னில்
உத்தமனேஎத்தொழிலும் செய்யநன்று
பதவிஎன்றகாயசித்தி யோகசித்தி
பண்பானஞானசித்தி மந்திரசித்தி
சதமாகநினைத்தது கைவசமேஆகும்
சண்டாளநேரம்அங்கே தரிப்பதரிதாகும்
அதமர்என்றசொல்போச்சு உத்தமம்தான் ஆச்சு
அப்பனேஇவ்வேளைவாய்ப் பதரிதாமே (௨௭)

யாத்திரைக்கு நித்திரைகாலமுதல்விநாடியின்பலன்

௩௭௮ அரிதென்றஉறக்கத்தின் முதல்விநாடி
அப்பனேபிரதேசம் போகும்காலம்
சரிஎன்றதன்உயிர்தான் தவிக்கும்பாரு
தயங்காதமனம்கூடத் தவித்துப்போகும்

௰௬

விரிகின்றஜம்புலனும் துயரப்பட்டு
மெலிவதல்லால்சுகம்ஒன்றும் இல்லைஇல்லை
அரிகின்றபரிஜெனங்கள் இல்லைஇல்லை
அப்பனேசண்டாளநேரம்தானே (௨அ)

யாத்திரைக்கு நித்திரைகால (௨) ஆம் விநாடியின்பலன்

௱௨௯ நேரானஉறக்கம் இரண்டாம்விநாடி
நினைத்திட்டகாரியங்கள் வசப்படாது
கூரானசரீரத்திற் பிணிதான்வந்து
கூற்றுவன்போல்உடல்உயிரைக் கொடுமைசெய்யும்
பாரானசண்டாளர் பகைதான்மெத்த
பகைத்ததினால் வெகுகொடுமைபழிகள்சூழும்
ஆரானம்சிவன்கிருபை அகலநிற்கும்
அவன்சடலத்துயரத்தால் அழுந்தும்பாரே (௨௯)

யாத்திரைக்கு நித்திரைக்கால (௩) ஆம் விநாடியின்பலன்

௱௩௰ அழுந்துகின்றஉறக்கம் மூன்றும்விநாடி
அப்பனேபிரயாணம் ஆவார்ஆகில்
கொழுந்துபோம்மனுஉதவி இல்லாமல்தான்
கொள்ளையும்ஆம்வெள்ளத்தில் அவதியாகும்
கழிந்துபோம்சடலம் உருவாவதில்லை
கண்டவர்கள்இவனுடனே கலந்துறவேஇல்லை
அழிந்துபோம்உயிர்சேதம் ஆகும்மைந்தா
அப்பனேஇவன்துயரம் தீர்வதரிதாமே (௩௰)

யாத்திரைக்கு நித்திரைக்கால (௪) ஆம் விநாடியின்பலன்

௱௩௰௧ அரிதானஉறக்கம் நான்காம்விநாடி
அப்பனேவழிப்பயணம் போகொண்ணாது
விரிவானவழியிடையில்சஞ்சலத்தால்ஐயா
வெகுதுயரம்வந்திடும்பார் விஷதிருஷ்டிஉண்டாம்
குறைதானகாலம்என்றும் பிறஜனங்கள்பேசும்
கூடினபேர் புறப்பட்டநேரம்என்பார்
சரியானவேலை அல்லசண்டாளவேலை
தன்மைஉள்ள மித்துருஅரசாகில்நன்றே (௩௰௧)

யாத்திரைக்கு நித்திரைக்கால (௫) ஆம்விநாடியின்பலன்

௱௩௰௨ நன்றிஇல்லாஉறக்கம் ஐந்தாம்விநாடிதன்னில்
நாட்டிலேபயணம்வந்துபோவார்ஆகில்

குன்றென்றமுனைமுகத்திற் போனாற்போல
 கொடுமையாம்உயிர்ச்சேதம் வருமே திண்ணம்
மன்னென்றவிஷதிருஷ்டி யாலேசாவான்
 மக்களேசோரனால் சாவும்உண்டு
கன்னென்றபெண்ணாறவால் உயிர்தான்சேதம்
 கடினம்அவன்திரும்புவதும் கில்லைப்பாரே (௩௨)

யாத்திரைக்கு மரணகால முதல் விநாடியின்பலன்

௩௧௩ இல்லையென்றமரணமுதல் விநாடி தன்னில்
 என்மகனேஊர்ப்பயணம் போகொண்ணாது
தொல்லைஅடாபோனவர்கள் திரும்பார்மைந்தா
 தோணாமல்உயிர்தவிப்பார் துணையில்லாமல்
சல்லியமாம்சோரர்தன்னால் உயிரும்சேதம்
 சண்டாளஉயிர்க்கெவர்தான் துணைஆவார்கள்
கொல்லும்அடாஅண்டினபேர் தமையுங்கூட
 கொடுமைஉள்ளநாட்பயணம் ஆகாதாமே (௩௩)

யாத்திரைக்குமரணகால(௨)ஆம் விநாடியின்பலன்

௩௧௪ ஆகாதமரணம்இரண்டாம் விநாடி தன்னில்
 அப்பனேபுறப்பட்டால் உயிர்ச்சேதம்ஆகும்
வேகாதுவெந்துமனம் புண்ணாய்நோகும்
 வேறுபட்டஅன்றிலைப்போல் துன்பம்எய்தும்
சாகாதபிணம்போல உயிர்தவித்து
 தனக்கொருத்தர்துணைஇன்றி வாடாநிற்பன்
நோகாமல்போவதில்லை பழிபகைகள்வருமே
 நோவதுதான்மெத்தவுண்டு நொந்துவிடும்மனமே (௩௪)

யாத்திரைக்கு மரணகால(௩)ஆம்விநாடியின்பலன்

௩௧௫ மனம்என்றமரணம் மூன்றாம்விநாடி
 வழிப்பயணம்தான்போகில் மரணம்ஆவார்
இனம்என்றசனத்தேசம் தனமும்சேதம்
 என்மக்காள்உடலில்வந்த பிணிதீராது
சனம்என்றஅவர்இருந்தும் உதவிஇல்லை
 சண்டாளர்அவர்களும்தான் சத்துருஆவார்
கனம்என்றமித்துருஅர சாகநின்றால்
 கருதவேபிறர்உதவி செய்வார்பாரே (௩௫)

யாத்திரைக்கு மரணகால ச)ஆம்விநாடியின்பலன்

௱௨கசு பாராணமரணம் நான்காம்விநாடி
பயணம்அதாய்புறப்பட்டால் மரணம்எய்தும்
வேறொருவர்துணையில்லை விஷத்தால்மாய்வன்
விழல்கொண்டகானகத்தில் மிருகவதைஆகும்
சோரம்என்றசோரர்களால் களவும்உண்டு
தொலையாதஇடைஞ்சல்வந்து தோணும்பாரு
கூறுனகூற்றுவனே துணைஆகநின்று
கொல்வன்என்றுகும்பமுனி சொன்னார்அன்றே (௱௨கசு)

யாத்திரைக்குமரணகால(ரு)ஆம்விநாடியின்பலன்

௱௨கஎ சொன்னதொருமரணம்ஐந்தாம் விநாடிதன்னில்
துலைதூரம்பிரயாணம் செய்வார்ஆகில்
தன்னுடே உயிர்தனக்கும் மனம்புண்ணாகும்
சண்டாளநேரம்அது தலைஎடுக்கொட்டாது
கொன்றிடும்கூற்றுவன்தான் பிடறிமேலேறிக
கொன்றிடவே நின்றிடுவன் கொக்கரித்து
சன்னுசி ஆகிவிடும்இதுபொய்யல்ல
தத்தளித்துநெஞ்சம்அது தவிக்கும்பாரே (௱௨கஎ)

இதுவுமது

௱௨கஅ தவிக்கவேவேண்டாம்நீ பட்சியகைநீக்கி
தனத்தானமித்துருவிற் செய்தாயானால்
குவிக்கவேளத்தொழிலும்கூடும்பாரு
குணம்குறிகள்நிலைஅறிந்து கூறல்ஆகும்
தவிக்காமல்சகலகலை வல்லபம்உண்டாகும்
தான்அறிந்தால்அவன்யோகி அவனேசித்தன்
துவக்கம்உறும்யாத்திரையைச் சொன்னோம்இன்னம்
தொல்புவிமேல்மனைக்கோலம் சொல்லுவோமே (௱௨கஅ)

யாத்திரைப்படலம்-முற்றிற்று



## மனைப்படலம்

(*)

மனைக்கோலுதற்கு ஊண்கால முதல்விநாடி
உ.ஆம் விநாடிகளின்பலன்

௱௨௰க சொல்லுகிறேன்ஊண்முதலாம் விநாடிதன்னில்
துடியாகமனைமுகூர்த்தம் செய்வார்ஆகில்



வெல்லுகிறேன்முன்னூறு வருஷம்தானும்
மேல்மேலும்சுகம்ஆக வாழ்ந்திருப்பர்
தொல்லைஒன்றும்இல்லைஅடா விநாடிரெண்டில்
சுகமாகஇருநூற்று அம்பதாண்டு
சல்லியம்ஒன்றில்லாமல் வாழ்ந்திருப்பார்
தன்பதிக்கும்அதிகம்அதாம் வாழ்வுண்டாமே (௧)

மனைக்கோலுதற்கு ஊண்கால(௩)ஆம்விநாடி
(௪) ஆம்விநாடிகளின்பலன்

௩௨0 வாழலாம்ஊண்மூன்றும் விநாடிதன்னில்
மக்களேஇருநூறு வருஷம்தானும்
கோள்ஆனதொன்றுமில்லை செல்வம்மிச்சம்
கோத்திறங்கள்குறைவின்றி வாழல்ஆகும்
வேளானநான்காம் விநாடிதன்னில்
வீடுசெயில்வருஷம்உரு பதினெட்டுபத்து
கோன்ஆனகுடிதழைத்து வாழும்பாரு
கூர்மையுடன்வாழ்ந்திருப்பார் நன்மைதானே (௨)

மனைக்கோலுதற்குஊண்கால (௫) ஆம் விநாடியின்பலன்

௩௨௧ நன்மைஎன்றஊண்ஐந்தாம் விநாடிதன்னில்
நலமாகவாழ்ந்திருப்பார் பதினைந்துபத்து
செம்மையுடன்அவ்விடத்திற் சோபனங்கள்கூடும்
தினம்தோறும்போஜனத்தின் சிறுமைஇல்லை
துன்மைஇன்றிப்பால்பசுக்கள் கட்டிவாழும்
துய்யவஸ்திரபூஷணங்கள் அதிகம்ஆகும்
தின்மைஎன்றசெயலும்வருவதில்லை
ஜெயமாகவாழ்ந்திருப்பர்திண்ணம்தானே (௩)

மனைக்கோலுதற்கு நடைகாலமுதல்விநாடி
உம் விநாடிகளின்பலன்

௩௨௨ திண்ணம்அடாநடைதனிலே முதல்விநாடி
செய்தாக்கால்மனைமுகூர்த்தம் வருஷம்நூறு
எண்ணம்அடாவாழ்வுசுகம் அதிகம்இல்லை
என்மகனேவாழ்ந்திருப்பார் சுகமதாக
கன்னம்இடும்களவிதிலே போகும்பாரு
கலங்குமேமனதுபின்பு தெளிவுஆகும்
சொன்னமடாஇரண்டாம் விநாடிதன்னில்
தொடுத்தமனைதொண்ணூறு வருஷம்தானே (௪)

மனைக்கோலுதற்குநடைக்கால(௩)ஆம்விநாடியின்பலன்

௯௨௩ தொண்ணூறுவருஷம்இதில் சுகமும்துக்கம்
தொடுத்திடுமேவாழ்வுமணம் சுருக்கம்ஆக
எண்ணரியநடைமூன்றும் விநாடிதன்னில்
எடுத்தமனைவருஷம்அதற் கென்மதாகும்
கண்ணூறுமெத்தவுண்டு களவுபோகும்
கட்டியதோர்வருஷம்ஒரு முப்பதுக்குள்
பொன்னூருதண்டம்உண்டு தீக்கோள்உண்டு
பொல்லாதமனிதன்என்று சொல்லுவாரே (௫)

மனைக்கோலுதற்குநடைக்கால(௪)ஆம்விநாடியின்பலன்

௯௨௪ சொல்லுவோம்நடைநான்காம்விநாடிதன்னில்
தொடுத்தமனைஎழுபத்து வருஷம்தானும்
சல்லியம்தான்ஒழிந்ததில்லை துன்பமெத்த
சண்டையுடன்வெகுகொடுமை சகிக்கொண்ணாது
தொல்லையாய்அரசனிடப் பகையும்சூழும்
துன்பமுடன்தெண்டனையும் அதிகம்உண்டாம்
அல்லவாய்அந்தமனை கொஞ்சநாளில்
அடைபடுமேதீபமும்தான் அரிதாம்பாரே (௬)

மனைக்கோலுதற்குநடைக்கால(௫)ம் விநாடியின்பலன்

௯௨௫ அரிதாகும்நடைஐந்தாம் விநாடிதன்னில்
அகம்எடுத்தவருஷம்அது அறுபதாகும்
குறியான அந்தமனைவாழ்வுகொஞ்சம்
கொண்பெண்டிற்சேதமும்ஆம் சொல்வர்இல்லை
எரியாகும்நன்மைஎன்ற காரியங்கள்
எடுக்கமனம்ஒட்டாது இடைஞ்சல்ஆகும்
சரியானசடலத்தில் நோய்உண்டாகும்
சண்டாளசத்துருவின் பகை யுகாதே (௭)

மனைக்கோலுதற்குஅரசுகால முதல்விநாடியின்பலன்

௯௨௬ ஆகுமேஅரசுமுதல் விநாடிதன்னில்
அப்பனேமனைமுகூர்த்தம்செய்வாருகில்
ஏகுமேவருஷம்அது ஆயிரந்தான்
என்னசொல்வேன் வாழ்வதென்றால்சொல்லொண்ணாது
சேகரமாம்மனைக்குதிரை கட்டல்ஆகும்
சிவிகைதனில்ஏறுதற்கு யோகம்ஆகும்

வாகானவாழ்வும்மணம் செய்யல்ஆகும்
மங்களமாய்தான்யிருந்து வாழுந்தானே (அ)

மனைக்கோலுதற்கு அரசுகால (௨) ஆம் விநாடியின்பலன்

௩௨௭ வாழுமேஅரசிரண்டாம் விநாடிதன்னில்
வருஷம்அதுஎண்ணூறு மகிழ்ந்தசெல்வம்
ஆறுமேசுகபோகம் அதிகம்ஆக
அப்பனேமங்களமாய் இருந்துவாழும்
கேளுநீஅரசர்உற வாகும்பாரு
கெதிபெறவேமனுக்கூட்டம் ஜனசேர்க்கைமிச்சம்
நாளானஅந்தமனை எப்போதுந்தான்
நலமானலட்சுமியாள் வாசம்ஆமே (க)

மனைக்கோலுதற்கு அரசுகால (௩) ஆம்விநாடியின்பலன்

௩௨௮ வாசம்அடாஅரசுமூன்றும் விநாடிதன்னில்
வருஷம்அதுஅறுநூறு மகிழ்ச்சிஆகும்
நேசம்அடாஅரசரும்வந் திருப்பார்பாரு
நேர்மைஉள்ளப்பிரபுவினிட நேசம்ஆகும்
தேசம்அடாவெகுதூரம் பேருண்டாகும்
திருவென்றபொருளுடமை கைவசமேஆரும்
பாசம்அடாஅரசுநிகர் மனைக்குவாசல்
பரிவாகத்தானிருந்து வாழும்பாரே (௰)

மனைக்கோலுதற்கு அரசுகால (௪) ஆம்விநாடியின்பலன்

௩௨௯ பாரில்உயர்அரசு நான்காம்விநாடி
பதினெட்டில்வருஷம்தான் நூற்றைம்பதாகும்
நேருகின்றவாழ்வதிகம் செல்வம்என்றால்
நிருபதிக்கும்அதிகம்அதாம் மதிக்கொண்ணாது
கோருகின்றகுலம்கிளைகள் செல்வம்ஆகும்
கொண்டாடும்வெகுஜனங்கள் கூட்டம்ஆகும்
ஏறுகின்றபரிஏறி நடப்பன்அல்லால்
என்மகனேகால்நடையாய்த் திரியான்தானே (௰௧)

மனைக்கோலுதற்கு அரசுகால (௫) ஆம்விநாடியின்பலன்

௩௩௰ தான்என்றஅரசுஐந்தாம் விநாடிதன்னில்
தனதானமனைமுகூர்த்தம் செய்வார்ஆகில்
தேனென்றவருஷம்அது நானூறாகும்
செல்வம்என்றால்நாவினால் சொல்லொண்ணாது

மானென்ற விழிமடவார் சேர்க்கைமிச்சம்
வந்திடுமேபொருளுடமை கைவசமதாக
ஏனென்றசத்துருவே இல்லைஇல்லை
என்மகனே தீமைஒன்றும் இல்லைத்தானே (௰உ)

மனைக்கோலுதற்கு நித்திரைகாலமுதல்விநாடியின்பலன்

௩௩௧ இல்லைஎன்றஉறக்கம்முதல் விநாடிதன்னில்
என்மகனேமனைமுகூர்த்தம் செய்வாருகில்
கொள்ளையேபோகும்அப்போ அக்கினியால்வாதை
கூடிவரமாட்டாது ஒருசுகமும்இல்லை
சன்னைஎன்றபிள்ளை இல்லை மனுஉதவி இல்லை
க்ஷணநேரம்ஆகிலும்சந்தோஷம்இல்லை
தொல்லைஅடாவருஷம்ஒரு அன்பதுக்குள்
துன்பம்மெத்தஉண்டாகும்சொல்லொண்ணாதே (௰௩)

மனைக்கோலுதற்குநித்திரைகால (உ) ம் விநாடியின்பலன்

௩௩உ ஒண்ணாதஉறக்கம்ரெண்டாம் விநாடிதன்னில்
உத்தமனேமனைமுகூர்த்தம் செய்வாயானால்
தன்னாலேஅழிந்துவிடும் நார்ப்பதுக்குள்
தணல்என்றதணல்அதனால் வாதைஆகும்
எண்ணாதேமனுஉதவி இல்லைஇல்லை
இல்லறத்தில்சுகம்இல்லை நோய்உண்டாகும்
கண்ணாநெஞ்சதுவும் கண்ணும்பாரு
கலந்திடுமேமூதேவி வாசந்தானே (௰௪)

மனைக்கோலுதற்குநித்திரைகால (௩) ஆம் விநாடியின்பலன்

௩௩௩ வாசமாம்உறக்க மூன்றும்விநாடி
மக்களேமனைமுகூர்த்தம் செய்வாருகில்
பாசமாம்வருஷம்அது முப்பத்தைந்து
பாழடையும்அல்லாது சுகமேஇல்லை
நேசமாம்உறவில்லை பிள்ளை இல்லை
நினைத்ததொருகாரியங்கள் நேர்வதில்லை
நாசமாம்உறக்கம்என்ற வேளைதானும்
நன்மைஒருநாளும்இல்லை நாசந்தானே (௰௫)

மனைக்கோலுதற்கு நித்திரைகால (௪) ஆம் விநாடியின்பலன்

௩௩௪ நாசமடாஉறக்கம் நான்காம்விநாடி
நல்லதொருமனைஎடுக்கில் முப்பதாண்டும்

தோஷமடாமனையதுதான் பாழதாகும்
சொல்லொண்ணாதுயரமது தோணும்தோணும்
பாசமுள்ளஉறவில்லை பொருள்சேர்க்கையில்லை
பண்பானசுகமில்லை புத்திரர்கள்இல்லை
நேசமாம்வாழ்வில்லை பசாசர்களேஆகும்
நினையாதபீடையெல்லாம் நிலைக்கும்பாரே (௰௬)

மனைக்கோலுதற்கும்சித்திரைக்கால (௫) ம் விநாடியின்பலன்

௩௩௫ நிலைக்குமடாஉறக்கம்ஐந்தாம் விநாடிதன்னில்
நேர்மையுள்ளமனைமுகூர்த்தம் செய்வாராகில்
புலைப்பதுகேள்வருஷம்ஒரு இருபதுக்குள்
பாழடையும்அல்லாது தீபம்இல்லை
துலைக்குமடாபிறசனங்கள் உதவிஇல்லை
துன்பம்தான்நினையளவும் தொலைந்திடாதே
அலைக்குமடாமூதேவி வாசம்தானும்
அப்பனேசத்துருவின் பகைஆகாதே (௰௭)

மனைக்கோலுதற்குமரணகால முதல்விநாடியின்பலன்

௩௩௬ பகையானமரணத்தின் முதல்விநாடி
பாழாகும்வருஷமொரு இருபதுக்குள்
தொகையானமித்துருதான் அரசன்ஆகில்
சொல்லியதோர்தொகைபடிக்குத் துயரம்தோணும்
வகையானசத்துருதான் அரசன்ஆகில்
மக்களேஒருபோதும் வாழ்வதில்லை
தகையானவருஷம்வொரு ஐந்துக்குள்ளே
தன்னாலேயழிந்துமனைப் பாழாம்பாரே (௰௮)

மனைகோலுதற்குமரணகால (௨) ஆம்விநாடியின்பலன்

௩௩௭ பாழானமரணம் இரண்டாம்விநாடி
பாலகனேமனையதுதான் பரிந்தெடுக்கில்
கோளானவருஷம்ஒரு பத்துக்குள்ளே
குலைந்துபோம்மனையதனிற் குடியேயில்லை
தேளானவிஷமதனால் மரணம்ஆகும்
தெண்டனையோபொருட்சேதம் துயரம்மெத்த
சூழான அக்கினியால் வாதையாகும்
தொலைக்குதற்குமனுஉதவி இல்லைத்தானே (௰௯)

மனைகோலுதற்குமரணம் (௩) ஆம்விநாடியின் பலன்

௩௩௮ இல்லையென்றமரணம் மூன்றாம்விநாடி
என்மகனேமனைமுகூர்த்தம் இடுவாராகில்
கொள்ளையடாவருஷமது ஐந்துக்குள்ளே
குடியேறல்ஒருநாளும் இல்லையில்லை
சள்ளையடாகேளினவன் மரணமாவான்
சண்டாளர்நேரமது கரையேறாது
தொல்லையடா அம்மனையில் மூதேவிதான்
சூழுமென்றுதொல்புவியே சொல்லும்பாரே (௨௰)

மனைகோலுதற்குமரணம் (௪) ஆம்விநாடியின் பலன்

௩௩௯ சொல்லுகின்றமரணம் நான்காம்விநாடி
சொல்லியதோர்மனைகளிலே முகூர்த்தம்செய்தால்
கொல்லுமேவருஷமொரு மூன்றுக்குள்ளே
குடியேறல்ஒருநாளும் இல்லையில்லை
வெல்லவேயிவனருகில் கூற்றன்நின்று
வேணபடிமனம்போலே முடித்துக்கொள்வான்
வல்லதாம்மணமுகூர்த்தம் செய்தபோதே
வந்திடுமேமனத்துயரம் சொல்லொண்ணாதே (௨௧)

மனைகோலுதற்குமரணம் (௫) ஆம்விநாடியின் பலன்

௩௪௰ ஒண்ணாதஅஞ்சாம் விநாடிதன்னில்
உத்தமனேமனைமுகூர்த்தம் செய்வாராகில்
எண்ணாதவருஷமது ஒன்றுக்குள்ளே
இறைவனும்அவன்சடலம் அழிந்துபோகும்
தன்னாலேஉயிர்ச்சேதம் ஆகும்பாரு
சண்டாளபக்ஷியுடப் பகையிருந்தால்
விண்ணானவருஷமது குறைந்துபோகும்
மேன்மையுள்ளசீரழிவு மெத்தஆமே (௨௨)

மனைக்குப்பலாபலன் கூட்டும்வகை

௩௪௧ சீரழிவுசெய்திடுமே ஊணதாகில்
சீராகச்சொன்னவற்றுட் கால்வரிசைகுறையும்
மாரழிவுகொண்டிடுவன் கூறியபிணடகளில்
மக்களேகால்வரிசை தான்அதிகம் ஆகும்
கூரழிவுசெய்திடுவான்கொடுமைமெத்த
கூடிவராநாட்டாது பொருட்சேதமாகும்

பாரமிவுசெய்திடுவான் போஜனத்திலுள்ள
பகையெல்லாம் வருமானப்பகையதாமே (௨௩)

இதுவுமது

௩௪௨ பணியாதஅரசனிடப் பகையேயானால்
பண்பாகமுன்சொன்னபலனிற்பாதி
தொகையாகும்கூறினதோர் பீடைதானும்
தொடுத்துவிடும் மூவிரட்டில்திகமாகும்
வகையாகக்கூடிவர மாட்டாதையா
மக்களேமுன்உள்ள பொருளும்சேதம்
நகைசெய்வார் உலகத்திலுள்ளபேர்கள்
நல்லதென்றுபார்மகனும் சிரிப்பான்பாரே (௨௪)

இதுவுமது

௩௪௩ சிரிப்பானவூண் அரசுசத்துருவாய்நின்றால்
சேதமோஉயிர்சேதம் பொருட்சேதம்ஆகும்
குறிப்பானமனம்நொந்து புண்ணதாகும்
குடிகெடுத்ரசத்துருவின் பகையாகாது
மரிப்பாகும்அந்தகனை முற்றும்பாழாம்
வருமானம்எவளவெனும் வகைசெய்யாது
தெரிப்பாரேஉலகிலுள்ள பிறஜெனங்களெல்லாம்
செய்வினையோஎன்றுமனம் தவிகொள்வாரே (௨௫)

மனைக்கு ஆயுசு கூட்டும்வகை

௩௪௪ தவியாதபூமிதனில் மனைகள்கோலும்
தன்வயதுசொல்லக்கேள் தண்மையாக
சுவையாகும்ஊண் அதிலேகோலும்காலம்
தொகையாகமுந்நூறு வயசேசொல்வார்
செமையான நடைதனக்குவயதுமைந்தா
திரமாகவொருநூறு செப்பலாகும்
குவியாதுஅரசுக்கு வயதுகேட்கில்
கூசாதேஆயிரந்தான் கூர்ந்துபாரே (௨௬)

இதுவுமது

௩௪௫ கூர்ந்துபார்உரக்கத்தில் வயதுகொஞ்சம்
கொஞ்சமெனில் அன்பதுதான்ஆகும்பாரு
நொந்துபார்மரணத்தின் வயசுனுட்டம்
நிகழ்த்தயென்றால் இருபதெனும்வருஷமைந்தா

சார்ந்துபார்சத்துருஊண் அரசில்லாவிட்டால்
தண்மையுடன் சொன்னசெல்லும் பழுதேதில்லை
சேர்ந்துபார்மித்துருவின் வலுவுண்டாயில்
செம்மைஉடன் உன்றுபத்தாகும்பாரே (௨௭)

மனைப்படலம்-முற்றிற்று



# இருதுப்படலம்

௩௪௬ பாரானபாவையர்தம் வாழ்வும்கேடும்
பண்புளதும்உள்ளதுபோம் பகர்வீரென்ன
நேரான மானிடர்தான்நின்றுகேட்கில்
நீணிலத்தில் அவள்பிறந்தநாளைக்கேளு
ஆரானப்பிரந்திடுநாள் சொல்வார் ஆகில்
அப்பனே அதுகொண்டுசொல்லவேணும்
ஓரானருதுவாகும் காலம்கண்டு
உண்மையாம்அநுபோகம் ஊணுஊணே (௧)

ஊண்காலஇருதுவின்பலாபலன்

௩௪௭ ஊண்என்றபட்சியிலே ருதுதான் ஆகில்
உண்பதிலுமுடுப்பதிலும் குறைஒன்றில்லை
சேண்என்றபொருள் உண்டுசெல்வம்உண்டு
செப்பொண்ணுச் செயல்உண்டுபாலும்உண்டு
மான்என்றவாழ்வுண்டு வாஞ்சைஉண்டு
வழியானபிள்ளைகள் மற்றெல்லாம்உண்டு
கோண்என்றசிவகளைதான் அதிகம்ஆகும்
கூட்டுறவாம்மித்துருதான் அரசுநன்றே, (௨)

இதுவுமது

௩௪௮ நன்றானமித்துருதான் அரசன்ஆகில்
நடக்குமடாஇதவினால் அதிகலாபம்
குன்றாதஒருபோது வாழ்வுதானும்
கூட்டிவைக்கும்சுகபோகம் குலமேசெல்வம்
மன்றாடும்பூங்குழலாள் ஆயுள்மட்டும்
வாழ்வுசொல்லஎவராலும் மதிக்கொண்ணாது
சென்றாடும்சத்துருவின் பகையாகாது
சீரழிவுசெய்திடுவான் திண்ணந்தானே (௩)

இதுவுமது

௲௪௯ தானவனும் இருந்தவரைப் பிரித்துவைப்பான்
தனம்பொருளைப்பவுஷாகளைத்தவருசெய்வான்
கோணவனென்றறியாமல் உலகத்தோர்கள்
குறித்திடுவார்ஒருதொழிலைக் குறித்துக்கொண்டு
மானனையர்மின்னார்கள் பார்க்குங்காலம்
மதிவேணும்நேரமங்கே வாய்க்கவேண்டும்
தேனனையாள்கலியுகத்திற் கோடிக்கொன்று
திடமாகத்தானிருந்து வாழ்வார்தானே (௪)

நடைகால இருதுவின்பலாபலன்

௲௫௰ வாழாதநடை தனிலே ருதுவேயானால்
வாழ்வில்லைசுகமில்லை மனுக்கட்டில்லை
மாளாதசத்துருவன் அரசாய்நின்றால்
மற்றதொருதீவினையும் சொல்லொண்ணாது
ஆளானமித்துருவன் அரசனாகில்
அதனுடையகொடுமையும் அகற்றிவைப்பான்
கேளானவாழ்உண்டு சுகமுமுண்டு
கெடியானவன்அரசு சத்துருஆகாதே (௫)

இதுவுமது

௲௫௧ சத்துருவாய்நின்றக்கால் வருஷமொன்றில்
தான்வாழ்வுபோய்விடும் தாய்தந்தைசேதம்
செற்றுவிடும்பிரவிகள்தான் பொருளும்சேதம்
தீவினையாம்அகலாத வேசிஆவாள்
தைத்துவிடும்உடலில்நின்று பிணிகள்தானே
நசித்துப்போம் அக்குடிதான்நாசமாக
மத்யமேஆகுமென்று முதல்நூல்தன்னில்
வசனித்தார்குருமுனியும் வசனித்தாரே (௬)

அரசுகாலஇருதுவின்பலாபலன்.

௲௫௨ வசனித்த அரசிலேருதுதான்ஆகில்
வாக்கினால்அவள்வாழ்கை வழுத்தொண்ணாது
அசனித்தேபாக்கியமென்ன பவிசுமென்ன
அனைவர்களும்கைகட்டி நிற்பதென்ன
நிசமித்தவாழ்வதுதான் ஆயுள்மட்டும்
நிலைக்கும்பார்மேல்மேலும் பெருகிமைந்தா

விஷமித்தசத்துருவே இல்லை இல்லை
விளம்பும்ஒருபோஜனத்தில் சத்துரு ஆகாதே (எ)

இதுவுமது

௧௫௩ ஆகாதபோஜனத்தின் சத்துருதான் ஆனால்
அகற்றிவைப்பான்வாய்க்குரிசை ஆனதெல்லாம்
நோகாதமித்துருதான் அரசன் ஆனால்
நொடிக்குள் மனம்புண்ணாகித்தெளிவுண்டாகும்
சோகமதாய்க்கண்காணுக் காட்சியான
சொர்ப்பனத்தின்கனைபோலத் தொலைந்துபோகும்
வேகமாம்போஜனத்திற் சத்துருகான்என்ன
வேணபடிநடப்பதற்கு நடுங்கும்பாரே (அ)

சித்திரைக்கால-இருதுவின் பலாபலன்

௧௫௪ பாரடாஉரக்கத்தில் ருதுதான் ஆகில்
பார்ப்பதென்ன அவள்உயிரோ பங்கும்ஆகும்
சேரடாவாழ்வில்லை மணமும்இல்லை
ஜெகத்திலேபின்உத விதானும்இல்லை
ஆரடாவுதவிசெய்ய நினைத்தாலுந்தான்
அடிமாண்டுஇவளுயிரும் அழிந்துபோகும்
கோரடாநினைத்ததெல்லாம் கைவசப்படாது
குறியாகஅவள்முகமும் இறங்கும்பாரே (௯)

இதுவுமது

௧௫௫ இறங்குவதுயேதாலே தூக்கத்தாலே
எண்ணமென்றபிரசண்டவாய்வினாலே
இறங்குவதுமனம்புண்ணாய்ப்போனதாலே
எடுத்ததொருகாரியங்கள் பலியாத்தாலே
உறங்குவதில்பட்சியுடைப் பகையாகாது
உற்றதுணையாருமில்லை உலகத்துள்ளே
மயங்குவதுபிரமபிணி உள்ளமட்டும்
மனஉதவியில்லாமற் போகும்பாரே [ய]

இதுவுமது

௧௫௬ போகாதபொருள்போகும் வாழ்வுபோகும்
புனிதமென்றசொல்போகும் தனமும்போகும்
சாகாதஉயிர்போலத் தவிக்கும்பாரு
சண்டாளசத்துருவன் அரசனானல்

வேகாதுவென்றுவிடும் பொசிப்போ இல்லை
மேதினியில்மித்துருஊன் அரசன்ஆகில்
சோகாதுகனவுகண்ட காட்சியேபோல்
வெந்துமேநொந்துமனம் கலங்கும்பாரோ (௧௧)

இதுவுமது

௩௱௨ கலங்குவாள்ஐம்புலனும் ஓடுங்குமட்டும்
கண்டவர்கள்அவளுடனே கலந்துபேசார்
துலங்குவாள்தாமரையின் இலைத்தண்ணீர்போல்
துயரங்கள்மெத்தஉண்டு உயிர்தான்அப்பா
நலங்குவாள்உயிர்இருந்தும் செத்தபிணம்போலே
நாநிலத்தில்இவட்குதவி எவரும்இல்லை
விலங்குவாள்இவளை அறியாமல்ஐயோ
வீழ்ந்தோமேஎன்றுபர தவிப்பாள்தானே (௧௨)

இதுவுமது

௩௱௩ தவிப்பதுதானேதாலே வேலையாலே
சண்டாளசத்துருபகை யானதாலே
குவிப்பதுபோல் பொருளாசைமெத்தஉண்டு
கூடிவரமாட்டாது குமுறும்நெஞ்சும்
சவிப்பதுபோல்சொல்வார்கள் தரணியோர்கள்
சலிப்பார்கள்பிறர் இவளுக்குதவிசெய்யார்
அவிப்பதுபோல்உயிர் அதுதான்உள்ளமட்டும்
அலைந்தலைந்துமனம்உடலம் அழியும்பாரோ (௰௩)

மரணகால்இருதுவின்பலாபலன்

௩௱௪ அலைவானமரணத்தில் திரண்டாளாகில்
அழிந்திடுமேவருஷமொன்றில் உடலந்தானும்
குலையுமேஅவள்பொருள்தான் மித்துருவலிதானால்
குடிகெடுத்தசத்துரு வலிதாகுமாகில்
கலையுமேமாசமொரு மூன்றுக்குள்ளே
கடினமடாகுடிவாட்கை கடைதேறாது
இலைபோலேநாளுக்கு நாள்தான்தேய்ந்து
இவளுயிர்தான்இவ்வுலகில் இருக்காதுபாரே (௧௪)

இருதுப்படலம் முற்றிற்று





# முகூர்த்தப்படலம்

௫௯௰ இருக்கும்ருதுப்பார்க்கும்இந்த வகையைபோல
எண்ணெண்ணகாரியங்கட் காமோவென்னில்
தருக்காதுவருஷம்தான் பிறக்குங்காலம்
தனித்ததொருமாசமது பிரக்குங்காலம்
வருக்கமுதல்வினைப்பார்கள் வரவுபாரு
மறுளாதுவிதைவித்து எடுத்தல்பாரு
குறற்சாகக்குருதும்அந்த கொள்கைபாரு
கோடிவஸ்திரம்வாங்கினதின் குணமும்பாரே (க)

இதுவுமது

௫௯௧ குணமானவிலைகிறயம் குடியாபாரம்
கொண்டுவைத்து ஆளுகின்ற உறவுசேர்க்கை
மணமானவான்முறையாம் சம்பந்தங்கள்
வல்பிணிகதீர்வதற்காய் மருந்துஈதல்
கனமானபெரியோர்களைக் காணும்நேரம்
கனிவானநற்காலம் துற்காலங்கள்
மணமானகுருமுனிநூல் முழுதுமாய்ந்து
வசனித்தேன்உரோமரிஷிவகையாய்த்தானே (உ)

முகூர்த்தப்படலம் முற்றிற்று



# நலந்தீங்குப்படலம்

௫௯௨ பாரில்ஊண் அரசுமடம் செய்யநன்று
பதியெடுக்கநிலங்கொள்ள பயிர்கள்செய்ய
ஏருடாடாடிகொள்ள பணிகள்செய்ய
எதிர்ந்தவரைச்செயங்கொள்ள யாபாரம்பண்ண
தாரணியிற்சுயம்பாட அடிமைசேர்க்க
தக்கதுவாம்வாழ்வுடனே சம்பத்துண்டாம்
மாறுணநடையுறக்கம் சாவிற்செய்தால்
மனுச்சேதம்பொருட்சேதம் வகையாய்ப்பாரே (க)

இதுவுமது

௫௯௩ வகையாகப்பார்த்துமனம் தெளியவேணும்
வல்லவர்கள்பெரியோரை வணங்கவேணும்

தொகையாகச்சாஸ்திரத்தில் வினையம்வைத்து
தொடுகுறிபோற்கேள்விபினால் அறியவேண்டும்
பகையாகஇருந்ததினால் வருவதென்ன
பஞ்சபட்சிசாஸ்திரத்தை உலகம்மீதில்
நகையாதேவெறும்பிலுக்கர் உடனேகூடி
நரினம்போல்மித்துருவின் நிலையைப்பாரே (௨)

நலந்தீங்குப்படலம் முற்றிற்று



# வெற்றிதோல்விப்படலம்

௩௬௪ மித்துருவின்நிலையிலே வைத்துக்கொண்டு
வினவிநீகேட்கும்வகை சொல்லச்சொல்லும்
பற்றுநிறமணமானால் நடையில்வைத்து
பவிசுகள்அரசிலே இருந்துக்கொண்டு
வெற்றியாம்அக்ஷரத்தை ஓதுஓது
வெல்லுவதுதிண்ணமென்று உறுதிகொள்ளு
சத்தியமாய்முனியுரைத்த மொழிதப்பாது
தனிவழக்குவெல்லுதற்கு வகையைக்கேளே (க)

இதுவுமது

௩௬௫ வகையென்னஎதிரியைத்தான் ஆக்கம்சாவில்
வைத்துநீஊணரசில் இருந்துக்கொண்டு
நகையென்னகேட்பவனை நடையில்வைத்து
நவிலவேஎதிரியுமே நழுவிப்போவான்
தொகையென்னசத்துருவின் பகையாகாது
தொடராமல்நடப்பதற்கு அக்ஷரத்தைமாறு
பகைஎன்றசொல்பேச்சு உறவுண்டாச்சு
பார்த்தவர்கள்சமர்த்தன்என ஆகும்பாரே (௨)

இதுவுமது

௩௬௬ ஆகுமேபக்ஷியின்தன் தொழிலைத்தானும்
அப்பனேவகைவிபர மாகச்சொன்னேன்
ஏகமாய்ப்பதினெண்பர் சொல்லார்சொல்லார்
என்மகனேநான்வெளியாய்ச் சொல்லிவைத்தேன்
போகுமேஎதிரியுடப் பகையும்போச்சு
பூதலத்தில்கடக்கும்வகை தெரியலாச்சு
சேகரமாங்காலபலன் அறிந்துகொண்டால்
செல்வமொன்றுகோடியாய்ச் செழிப்பதாமே (௩)

மிசா

இதுவுமது

௲கள பத்தானஇந்தநூற் கிணையேயில்லை
பண்பானதனங்கோடி ஈந்தாலுந்தான்
முத்தானசாஸ்திரத்தை வெளிவிடாதே
முன்னோர்கள்மனதடக்கம் செய்துவைப்பார்
வித்தானபொருள்களெல்லாம் இதிலேதோன்றும்
வேதாந்தசுழிமுனையு மிதுவேயாகும்
கொத்தானஅடிதொடுத்து முடிவணக்கும்
கூறினேன்வாழ்வதற்காய்க் கூறினேனே (சு)

வெற்றிதோல்விப் படலம்முற்றிற்று



## அஷ்டகன்மப்படலம்

ஆதிவாரம் திதி நக்ஷத்திர இராசிபலாபலன்

௲கஅ கூறினேன்ஞாயறதில் அசுபதியும்சஷ்டி
குணமாகமிதுனமும் மோகனமேயாகும்
தேறினேன்பரணியும் ஏகாதேசி
திரமானகடகமுமேஸ்தம்பனமேயாகும்
மாறினதோர்கார்த்திகையும் துதிகைதானும்
வளமானசிங்கமதுவே ஷணமுமாகும்
தூறினேனுரோகணியும் சத்தமியுங்கூட்டி
சுகமானகன்னியது பேதனமும்பாரே (க)

இதுவுமது

௲ககூ பாரடாசிரடமும் துவாதேசியோடு
பண்மையுள்ள துலாகோலும் உட்சாடணமேசெய்யும்
கூறடா ஆதிரையும் திரிதிகையும்சேர்ந்தால்
குறியானவிருச்சிகமும் மாரணமேசெய்யும்
தீரடாபுனாபூசம் அஷ்டமியுங்கூடில்
செகம்புகழும்தனுசதுவும் வசியமாகும்
சாரடா பூசத்தொடு திதியோதேசிமகரம்
சண்டாளா ஆகிருஷ்ணம் ஆகுந்தானே (உ)

இதுவுமது

௩௪௰ தாவென்றஆயிலியம் திரிதிகையுங்கும்பம்
தரணிதனில்மோகனமே செய்யும்பாரு
வாவென்றமகத்துடனே நவமிசேர்ந்தால்
வகையானமீனமதுஸ்தம் பனமுமாகும்
தேனென்றபூரமுடன் அமாவாசைமேஷம்
திசைப்புள்ளவித் வேஷணமுமாகும்
கோனென்றஉத்திரமும் பஞ்சமியுஞ்சேர்ந்தால்
கூறியதோரிடபமது பேதனந்தாமே, (௩)

இதுவுமது

௩௪௧ தாமேதானஸ்தமுடன் தசமியதுகூடில்
தண்மையுள்ளமிதுனமுமே உச்சாடணமதாகும்
தாமேதான்சித்திரையும் அம்மாவாசை
தரித்ததொருகற்கடகம் மாரணமதாகும்
தாமேதான்சுவாதியுடன் சஷ்டியுமேசேரில்
தபவானசிங்கமது வசியமதுவாகும்
தாமேதானிவ்வகையாய் கண்டபேர்க்கு
தரணிதனிலெதிரியில்லை சாற்றுவதுமாமே (௪)

இதுவுமது

௩௪௨ மாமோகவிசாரமுடன் பிரதமைகற்கடகம்
மகத்தானமாரணமும் ஆகும்பாரு
பாமோகஅனுடமுடன் சஷ்டிபோடு
பகையானசிங்கமுமே வசியஞ்செய்யும்
காமோககேட்டையுடன் ஏகாதேசி
கன்னியுமேஆகிருஷ்ணம் கனிவாயாடும்
கோமாகமூலமுடன் துதிகைதானும்
குலாவியதுலாத்துடனே மோகனமுமாமே [௫]

இதுவுமது

௩௪௩ மோகமுள்ளபூராடம் சத்தமியுங்கூட்டி
முரிமையுடன்விரிச்சிகமும் ஸ்தம்பனமுமாகும்
பாகமுள்ளஉத்திராடம் துவாதேசிதானும்
பணியுமடாவேஷணமும் பனிந்துஅதுஆகும்
தாகமுள்ளதிருவோணம் திரிதிகையுமகரம்
தப்பாமல்பேதனமே செய்யும்பாரு

தேகமுள்ள அவிட்டமுடன் அஷ்டமியுங்கும்பம்
தெளிந்துபார்உட்சாடணமே செய்யும்பாரே (௬)

இதுவுமது

௲௭௪ செய்யுமேஉத்திராடத் திரையோதேசி
செயமானமீனமுடன் மாரணமும்ஆகும்
வையுமேசதயமுடன் சதுர்த்தியோடு
வளமானமேஷமுமே செய்யும்வசியம்
குய்யுமேபூரட்டாதி நவமிகற்கடகம்
கொண்டுவரு ஆகிருஷ்ணம் குணமாய்ப்பாரு
நையுமேரேபதியும் சதுர்த்தசியும்மிதுனம்
நயமானமோகனமே செய்யும்பாரே (௭)

சோமவாரம் திதி நட்சேத்திரம் இராசிபலன்

௲௭௫ பாரப்பாதிக்களுடன் அசுபதியுந்தானும்
பஞ்சமியும்கற்கடகம் ஸ்தம்பனமுமாகும்
நேரப்பாபரணியுடன் தசமிசிங்கம்
நேர்மையுள்ளவித் வேஷணம்செய்யும்பாரு
ஆரப்பாகார்த்திகையும் அம்மாவாசை
அப்பனேகன்னியுமே பேதனமுமாகும்
சாரப்பாஉரோகணியும் பிரதமையும்துலாமுஞ்
சார்வானஉட்சாடணமே ஆகும்பாரே- (௮)

இதுவுமது

௲௭௬ ஆகுமேமிருகசீரிடமும்சஷ்டி
அதிவிருச்சிகமாரணமுமே செய்யும்பாரு
ஏகுமேதிருவாதிரையும் ஏகாதேசி
இனிதானதனுசுடனே வசியம்மாகும்
போகுமேபுனர்பூசம் துதிகைதானும்
புனிதமுடன்மகரமும் ஆகிருஷ்ணம்ஆகும்
சாகுமேபூசமுடன் சத்தமியும்கும்பம்
தனியாகும்மோகனமே செய்யும்பாரே (௯)

இதுவுமது

௲௭௭ பாரேசீயாயிலியம் துவாதேசிமீனம்
பத்தியுமேஸ்தம் பனமும்பதிவாயக்காணும்
நேரேமகமுடனே திரிதிகையும்மேஷம்
நினைவானவித் வேஷணமே செய்யும்பாரு

தேரேசீபூரமுடன் அஷ்டமியும்இடபம்
தெளிவானபேதனமே ஆகும்பாரு
காரேகீஉத்திரமும் திரையோதேசி
கனிவானமிதுனமுமே உட்சாடனமுமாமே (௰)

இதுவுமது

௩௭௮ ஆமப்பாஅஸ்தமுடன் சதுர்த்தியோடும்
அப்பனேகற்கடமும் மாரணமும்ஆகும்
போமப்பாகவமியுடன் சோதிசிங்கம்
புகழ்பெரியவசியமுடன் செய்யும்பாரு
நாமப்பாசித்திரையும் சதுர்த்தசிகன்னி
நயமானஆகிருஷ்ணம் ஆகும்பாரு
காமப்பாவிசாகமுடன் பஞ்சமியும்துலாமும்
கனிவானமோகனமே செய்யும்பாரே (௰௧)

இதுவுமது

௩௭௯ செய்துபார்தசமியுடன் அனுஷம்மீனம்
திரண்டதொருவிருட்சிகமும் ஸ்தம்பனமுமாகும்
கொய்துபார்கேட்டையுடன் அம்மாவாசி
குணமானதனுசதுவும் வித்வேஷணமும்செய்யும்
பைதுபார்மூலமுடன் பிரதமையும்மகரம்
பணிவானபேதனமே செய்யும்பாரு
நைதுபார்பூராடம் சஷ்டியோடும்
நயமானகும்பமுமே உட்சாடணமும்ஆமே (௰௨)

இதுவுமது

௩௮௰ உட்சாணம்திருவோணம் யேகாதேசி
உறவானமீனமது மாரணமும்ஆகும்
திட்சாட்டியதிருவோணம் துதிகைதானும்
திருந்தியமேஷமுமே வசியமாகும்
நட்சாட்டிஅவிட்டமுடன் சத்தமியும்இடபம்
நன்மையென்றஆகிருஷ்ணம் செய்யும்பாரு
மைசாட்டிபூஉத்திரட்டாதி துவாதேசி
மறவாமல்மோகனமே செய்துபாரோ (௰௩)

மங்களவாரம் திதிநட்சேத்திரம் இராசிபலாபலன்

௩௮௧ செய்துபார்ரேவதி திரிதிகையுடன்நண்டும்
திரமானஸ்தம்பனமே செய்துபாரு

செய்துபார்பூரட்டாதி அஷ்டமியுஞ்சிங்கம்
துண்மையுடன்வித்வேஷணமும்ஆகும்
வைதுபார்ரேவதியும் திரையோதேதி
நலமானகன்னியுமே பேதனமும்ஆகும்
வைதுபார்செவ்வாயும் அசுபதியும்சதுர்த்தி
வளமானதுலாம்அதுவும் உச்சாடணமும்ஆமே [௰௪]

இதுவுமது

௩௮௨ ஆமப்பாபரணியுடன் நவமியுங்கூட்டி
அப்பனேவிருட்சிகமும் மாரணமேசெய்யும்
நாமப்பாகார்த்திகையும்சதுர்த்தேசிதானும்
நலமானவசியமென்றதொழிலுமாகும்
போமப்பாரோகணியும்பஞ்சமியும்மகரம்
பொருள்வரத்து ஆகி ஆகிருஷ்ணம்செய்யும்
தாமப்பாமிருகசீரிடம் தசமியோடு
தனதானகும்பமுமே மோகனமுமாமே (௱௫)

இதுவுமது

௩௮௩ மோகனமேதிநவாதினை அம்மாவாசை
முனையுள்ளமீனமுமே ஸ்தம்பனமுமாகும்
கோகனமேபுனர்பூசம் பிரதமையும்மேஷம்
குடிகெடுத்தவித்வே ஷணமுமாகும்
வாகனமேபூசமுடன் சஷ்டியோடும்
வழியானஇடபமுமே பேசனமும்செய்யும்
சாகனமேஆயிலியம் யேகாதேசி
தனிவாழும்மிதுனம்உட் சாடணமும்ஆமே (௰௬)

இதுவுமது

௩௮௪ ஆமென்றமகமுடனே துதிகைகூட்டி
அப்பனேகற்கடகமும் மாறணமுமாகும்
வேமென்றபூரமடா சத்துமியும்கூட்டி
மேன்மையுள்ளசிங்கமுமே வசியமாகும்
ஓமென்றஉத்திரமும் துவாதேசிதன்னில்
உலகமெல்லாம்ஆகிருஷ்ணம் செய்யும்பாரு
தாமென்றஅஸ்தமுடன் திரிதிகையுங்கூட்டி
தனிப்பிறந்ததுலாமுடனே மோகனமாம்பாரே (௰௭)

இதுவுமது

௩அரு பாரப்பாசோதியுடன் அஷ்டமியும்விருட்சிகம்
பகர்கின்றஸ்தம்பனமே யாகும்பாரு
நேரப்பாசித்திரையும் திரையோதேசி
நினைவானதனுசதுவும் வித்வேஷணமுமாகும்
ஆரப்பாவிசாகமுடன் சதுர்த்திதானும்
அழகானமகரமுமே பேதனமும்பாரு
கூரப்பாஅனுடமுமே நவமிகும்பம்
குடிகெடுத்தஉட்சாடணம் ஆகும்பாரே, (௧அ)

இதுவுமது

௩அசு ஆருமேகேட்டையுடன் சதுர்த்தேசிமீனம்
அழித்துவிடும்மாரணமு மாகும்பாரு
ஏருமேமூலமுடன் பஞ்சமியும்மேஷம்
என்னசொல்வேன்வசியமடா எதரிதோர்வை
போருமேபூராடம் தசமியோடு
புகழ்பெரியஇடபமுமே ஆகிருஷ்ணம்ஆகும்
வேருமேஉத்திராடம் அம்மாவாசி
விதனமுள்ளமிதுனமுமே மோகனமும்செய்யும் (௰௯)

இதுவுமது

௩அள செய்யுமடாதிருவோணம் பிரதமையும்சேர்ந்தால்
சேர்க்கையுள்ளகற்கடகம் ஸ்தம்பனமுமாகும்
மையுமடாஅட்டமுடன் சஷ்டியோடும்
மனதுறுதியானசிங்கம் வித்வேஷணமும்செய்யும்
கொய்யுமடாஉத்திரட்டாதி ஏகாதேசி
குலாவியதோர்கன்னியுடன் பேதனமுமாகும்
சொய்யுமடாசதையமுடன் பேதனமுமாகும்
ஞேஷமுள்ளதுலாமதுவும் உட்சாடணமேபாரே (உ௰)

புதவாரம்திதிநட்சேத்திரம் இராசிபலாபலன்

௩அஅ பாரப்பாபூரட்டாதி சத்தமியும்சேர்ந்தால்
பரிவானவிருட்சிகமும் மாரணமுமாகும்
ஆரப்பாரேவதியும் துவாதேசிதநுசு
அப்பனேவசியமடா அன்பாய்ச்சொன்னேன்
ஏரப்பாபுதனுடனே சுபதியும்திரிதிகையும்
என்மகனேமகரம் ஆகிருஷணமும்ஆகும்

சாரப்பாபரணியுடன் அஷ்டமியும்நவமி
சார்வானகும்பமுமே மோகனமுமாமே (உக)

இதுவுமது

௱அகூ மோகமுள்ளகார்த்திகையும் திரையோதேசி
முனையானமீனமுடன் ஸ்தம்பனமுமாகும்
தாகமுள்ளரோகணியும் சதுர்த்திமேடம்
தப்பாமல்வித்வேஷணமும் செய்யும்பாரு
ஆகமுள்ளமிருகசீரிடம் நவமியோடு
அன்பானஇடபமுமே பேதனமுமாகும்
வாகமுள்ளதிருவாதிரையும் சதுர்த்தேசிமிதுனம்
வழிவானஉட்சாட்டணமும் ஆகும்பாரே [உஉ]

இதுவுமது

௱கூய ஆகுமேபுணர்பூசம் பஞ்சமியும்சேர்ந்தால்
அப்பனேகற்கடகம் மாரணமும்ஆகும்
ஏகுமேபூசமுடன் தசமியோடு
என்னசொல்வேன்சிங்கமடா வசியம்ஆகும்
சாகுமேஆயிலியம் அம்மாவாசி
தன்மையுள்ளகன்னியுமே ஆகிருஷணமாகும்
போகுமேமகமுடனே பிரதமையும்நல்ல
புகழ்பெரியதுலாத்துக்கு மோகனமும்பாரே (உங)

இதுவுமது

௱கூக பாரோதான்பூரமுடன் சஷ்டிகூட்டி
பரிவானவிரிச்சிகமுடன் ஸ்தம்பனமுமாகும்
காரோநீஉத்திரமும் ஏகாத்தேசி
கலந்ததொருதனுராதுவும் வித்வேஷணமுமாகும்
தேரோநீஅஸ்தமுடன் துதிகைதானும்
திறமானமகரமுமே பேதனமும்பாரு
கோரோநீசோதியென்ற சத்தமியுங்கூட்டி
கும்பமுடனேஉட்சாடணம் ஆகும்பாரோ (உச)

இதுவுமது

௱கூஉ ஆகுமப்பாசித்திரை துவாதேசிமீனம்
அதுநடததும்மரணந்தான் ஆகும்பாரு
போகதப்பாவிசாகமுடன் திரிகைதானும்
புகழ்பெரியமேடமுமே வசியமாகும்



வாகுமப்பா அனுடமுடன் அஷ்டமியுங்கூடில்
வலியானஇடபமுமே ஆகிருஷணம்ஆகும்
ஏகுமப்பாகேட்டையுமே திரையோதேசி
என்சொல்வேன்மிதுனமாமோகனமுமாமே (௨௫)

இதுவுமது.

௩௬௩ ஆமென்றமூலமுடன் சதுர்த்தியோடு
அப்பனேகற்கடம் ஸ்தம்பனமும்ஆகும்
வேமென்றபூராடம் நவமிஅப்பா
மேதினியில் சிங்கமுமே வித்வேஷணமும்ஆகும்
காமென்றஉத்திராடம் சதுர்த்தேசிகன்னி
கனிவானபேதனமே செய்யும்பாரு
நாமென்றதிருவோணம் பஞ்சமியுங்கூடில்
நலமானதுலாம்அதுவும் உட்சாடனமும்ஆமே (௨௬)

இதுவுமது

௩௬௪ ஆமென்றஅவிட்டமுடன் தசமிகூடில்
அழகானவிருட்சிகம் அங்கேமாரணமுமாகும்
போமென்றஉத்திரட்டாதி அம்மாவாசிதனுசு
புகழ்பெரியவசியமப்பா என்னசொல்வேன்
தேமென்றசதயமும் பிரதமையும்மகரம்
செம்மையுள்ளஆகிருஷணம் செய்துபாரு
நாமென்றபூரட்டாதி சஷ்டிகூட்டி
நலமானகும்பமே மோகனமுமாமே (௨௭)

குருவாரம் திதிநட்சேத்திரம் இராசிபலாபலன்

௩௬௫ மோகனந்தான்ரேபதியும் ஏகாதேசி
உண்மையுள்ளமீனம்அப்பா ஸ்தம்பனமும் ஆகும்
வாகனந்தான்அசுவினியுடன் அங்கே அசுபதியுந்துதிகை
மக்களேமேஷம்அப்பா வித்வேஷணமுமாகும்
கோகனமேபரணியுடன் சப்தமியும்சேர்ந்தால்
குலாவியதேர்இடபமுமே பேதனமுமாகும்
சோகந்தான்கார்த்திகையும் துவாதேசிமிதுனம்
சொன்னேனடா உட்சாடனமேசெய்யும்பாரே (௨௮)

இதுவுமது

௩௬௬ செய்யுமேரோகணியும் திரிதிகையுங்கூடில்
திடமானகற்கடகம் மாரணமுமாகும்

௰௭

வையுமேமிருகசீரிடம் அஷ்டமியும்சேர்ந்தால்
நளினமுள்ளசிங்கம் அங்கேவசியம்ஆகும்
கொய்யுமே திருவாதிரையுந்திரையோதேசி
குணமானகன்னியுடன் ஆகிருஷணம்பாரு
வையுமேபுனர்பூசம்சதுர்த்தி துலாமென்று
வணங்குமடாமோகனந்தான் மாக்கம்பாரே (உக)

இதுவுமது

௲௬௰ மாக்கமுள்ள பூசமுடன்நவமிசோலே
மக்களேஸ்தம்பனமும் மகிழ்ந்துகாணும்
ஏர்க்கையுள்ள ஆயிலியம் சதுர்த்தேசிதனுசு
என்மகனே வித்வேஷணமாகும்பாரு
சேர்க்கையுள்ளமகமுடனே பஞ்சமியுஞ்சேர்ந்தால்
திடமானமகரமுமே பேதனமேசெய்யும்
ஆர்க்கையுள்ளபூரமுடன் தசமியோடு
அப்பனேகும்பமும் உட்சாடணமும்ஆமே (௲௰)

இதுவுமது

௲௬௰ ஆமப்பாஉத்திரமும் அம்மாவாசை
அப்பனேமீனமுமே மாரணமும்ஆகும்
நாமப்பா அஸ்தமுடன் பிரதமையும்சேர்ந்தால்
நலமானமேஷமுமே வசியம்ஆகும்
காமப்பாசோதியென்ற சஷ்டிகாலே
களக்குமேஆகிருஷணங் கண்டுபாரு
போமப்பாசித்திரையும் ஏகாதேசி
புனிதமுடன்மிதுனமுமே மோகனமாம்பாரே (௲க)

இதுவுமது

௲௬௰ பாரென்றவிசாகமுடன் அதிகைதானும்
பார்மகனேகற்கடம் தம்பனமும்ஆகும்
சீரொன்றஅனுடமடா சத்தமியுங்கூட்டி
சிறப்பானசிங்கமுமே வித்வேஷணங்கள் செய்யும்
காரொன்றகேட்டையாடா துவாதேசிகன்னி
கனமானபோதனமேயாகும்பாரு
வாரொன்றமூலமுடன் திருதிகைதுலாந்தான்
மக்களேஉட்சாடணமாம் மகிழ்ந்துபாரே (௲உ)

இதுவுமது

௪௱ மகிழ்ந்துபார்பூராடம் அஷ்டமியும்தேளும்
மனதுபோல்மாரணமும் ஆகும்பாரு
மெகிழ்ந்துபார்உத்திராடம்இராயோதேசி
நேரானதனுசதுவும் வசியம்அது ஆகும்
இருந்துபார்திருவோணம் சதுர்த்திசேர்ந்தால்
என்மகனேமகரமுமே ஆகிருஷணம்ஆகும
மகிழ்ந்துபார் அவிட்டமுடன் நவமிகும்பம்
தனதானமோகனமாம் நானேபாரே (௩௩)

இதுவுமது

௪௱௧ தானென்றஉத்திரட்டாதி சதுர்த்தேசிமீனம்
தப்பாமல்ஸ்தம்பனமே செய்யும்பாரு
பானென்றசதயமுடன் பஞ்சமியும்மேடம்
மனம்போல வித்வேஷணமேசெய்யும்
நானென்றபூரட்டாதி தசமிகாளை
நலமானபேதனமே ஆகும்பாரு
தேனென்றரேவதியும் அம்மாவாசை
சிறந்தொருமிதுனமுமே உச்சாடணமுமாமே (௩௪)

சுக்கிரவாரம் திதி நட்சேத்திரம் இராசிபலாபலன்

௪௱௨ மானென்றவெள்ளியுடன் அசுபதியுங்கூடில்
மக்களேபிரதமையும் நண்டுமாரணமாம்
தேனென்றபரணியுடன் சஷ்டிசேர்ந்தால்
திடமானசிங்கம் அது வசியம்ஆகும்
வேனென்றகார்த்திகையும் யேகாதேசி
விதமானகன்னியுமே ஆகிருஷ்ணம்ஆகும்
கோனென்றரோவதியும் துதிகைதானும்
கொண்டுதுலாம்மோகனமே செய்யும்பாரே (௩௫)

இதுவுமது,

௪௱௩ செய்யுமடாசிரிடமும் சத்தமியுங்கூட்டி
ஜெயமானதேள் அதுவும் தம்பனமும்ஆகும்
ஐயுமடாதிருவாதிரையும் துவாதேசிதனுசு
அப்பனேவித்வேஷணம் செய்யும்பாரு
நையுமடாபுனர்பூசம் திரிகையுங்கூட்டி
நயமானமகரமே பேதனமேசெய்யும்

கொய்யுமடாபூசமுடன் அஷ்டமியுங்கும்பம்
குலாவியவுச்சாடனமும் குறித்துச்செய்யே (௬௬)

இதுவுமது

௬௱௭ குறித்துநீசெய்துபார் ஆயிலியம்ஏகாதேசி
குணமானமீனமுமே மாரணமும்ஆகும்
மறித்துப்பார்மகமுடனே சதுர்த்திமேடம்
மன்னர்எல்லாம்மனமகிழ்ந்து கேளும்வசியம்
செறித்துப்பார்பூரமுமேநவமிகாளை
செக்ஷணத்திலேஆகிருஷணம் செய்வார்பாரு
விறித்துப்பார்உத்திரமும் சதுர்த்தேசியோடு
மிதுனமெல்லாம்மோகனமே ஆகும்பாரே (௬௭)

இதுவுமது

௬௱௮ ஆகுமேஅஸ்தமுடன் பஞ்சமிகர்கடகம்
அன்பானதம்பனமே அழகாய்ச்செய்யும்
ஏகுமேசோதியுடன் தசமிசிங்கம்
என்னசொல்வேன் வித்வேஷணந்தான்எதிரி இல்லை
தேருமேசித்திரையும் அம்மாவாசியோடு
ஜெயமானகன்னியுமே பேதனமும்ஆகும்
போகுமேவிசாகமுடன் பிரதமையும்துலாமும்
பெரிதானஉச்சாடனமாய்ப்பேசும்பாரே [௬௮]

இதுவுமது

௬௱௯ பேசுமடாஅனுடமுடன் சஷடிகேளும்
பேதகமாம்மாரணந்தான் செய்யும்பாரு
வீசுமடாகேட்டையுந்தான் யேகாதேசி
விதமானதனுசதுவும் வசியமாகும்
ஏகமடாமூலமுடன் திதிகைதானும்
என்னசொல்வேன்மகரமுமே ஆகிருஷணமேசெய்யும்
வீசமடாபூராடம் சத்தமியுங்கும்பம்
ஓடிவரும்மோகனந்தான் உனக்குத்தானே (௬௯)

இதுவுமது

௬௱௭௰ தானேதான்உத்திராடம் துவாதேசிமீனம்
தன்மையுள்ளதம்பனமே சரிநின்றுநிற்கும்
கோனேதான்திருவோணந் திரிதிகையுங்கூடில்
குணமானமேடம்அங்கே வித்வேஷணமுஞ்செய்யும்

தேனேதான்சதயமுடன் திரையோதேசி
செனித்ததொருமிதுனமங்கே உட்சாடணமுமங்கே
மானேகேள்ரோமனுட வாக்கியந்தன்னை
மகிழ்ந்துபார்மனக்கொண்டு அஷ்டகன்மமாமே, (௬௰)

சனிவாரம் திதி நக்ஷத்திர இராசிபலாபலன்

(௬௱அ) மானென்றபூரட்டாதி சதுர்த்திகற்கடகம்
மன்னவனேமாரணந்தான் மனம்போல்செய்யும்
தேனென்றஉத்திரட்டாதி நவமிசிங்கம்
தெளிவானவசியமடா செம்மையாகும்
வானென்றரேவதியும் சதுர்த்தேசிகன்னி
வகையானஆகிருஷ்ணம் வலியுண்டாகும்
ஏனென்றசனியுடனே அசுபதிபஞ்சமியும்
என்மகனேதுலாமிதுவும் மோகனமுமாமே. (௬௧)

இதுவுமது.

௬௱௯ ஆமப்பாபரணியுடன் தசமிகூடில்
அப்பனேவிருட்சிகமும் ஸ்தம்பனமுமாகும்
நாமப்பாகார்த்திகையும் அம்மாவாசை
நலமானதனுசுடனே வித்வேஷணமுமாகும்
ஓமப்பாரோகணியும் பிரதமையும்மகரம்
உத்தமனேபேதனமாய் முடியும்பாரு
காமப்பாமிருகசீரிடம் சஷ்டிகும்பம்
கனிவானஉட்சாடணமாய்க் காணும்பாரே (௬௨)

இதுவுமது.

௬௱௰ காணுமேதிருவாதிரை யேகாதேசி
கனிவானமீனமுமே மாரணமுமாகும்
வேணுமேபுனர்பூசம் துதிகைதானும்
மேலானமேஷமுடன் வசியமாகும்
தோணுமேபூசமுடன் சத்தமியும்இடபம்
தொடுத்திடும்பார்ஆகிருஷ்ணம் சொல்லப்போகா
காணுதேஆயிலியம் துவாதேசிமிதுனம்
நலமானமோகனமே நயந்துகாணே. (௬௩)

இதுவுமது

௬௱௧ நயந்துபார்மகமுடனே திரிதிகையும்சேர்ந்தால்
நலமானகற்கடகம் ஸ்தமபனமுமாகும்

பயந்துபார்பூரணமே அஷ்டமியும்சிங்கம்
பரிவானவேஷணந்தான் பதிவாய்க்காணும்
கயந்துபார்உத்திரமும் திரையோதேசி
கன்னியுடன்பேதனமும் கலந்துகாணும்
சயந்துபாரஸ்தமுடன் சதுர்த்திதுலாமும்
சாற்றினேன்உச்சாடணமாம் சாய்ந்துபாரோ (௬௪)

இதுவுமது,

௬௰௨ சாருமடாநவமியுடன் சோதிசோலை
சண்டாளமாரணமாம் சார்ந்துபாரு
ஏருமடாசித்திரையும சதுர்த்தேசிதனுசு
என்னசொல்வேன்வசியமடா இசைந்துகாணும்
ஆருமடாவிசாகமுடன் பஞ்சமியுந்தனுசு
அப்பனேஆகிருஷ்ணம் அழகாய்ச்செய்யும்
தேருமடாஅனுஷமது தசமிகும்பம்
செய்யுமப்பாமோகனமும் திரமாய்ப்பாரோ (௬௫)

இதுவுமது

௬௰௩ திரமானகேட்டையுடன் அம்மாவாசை
சிறந்ததொருமீனமக்கே ஸ்தம்பனமுமாகும்
பரமானமூலமது பிரதமையும்மேடம்
பழியானயுத்வேஷணங்கள் பதிவாய்க்காணும்
சரமானபூராடம் சஷ்டிகாளை
தப்பாமல்பேதனமே தனிவாய்க்காணும்
உரமானஉத்திராடம் ஏகாதேசி
உத்தமனேமிதுனமது உச்சாடணமுங்காணே (௬௬)

இதுவுமது

௬௰௪ காணப்பாதிருவோணந் துதிகைதானும்
கனிவானகற்கடகம் மாரணமுமாகும்
பூணப்பாஅவிட்டமுடன் சத்தமியுஞ்சேர்ந்தால்
புண்ணியனேசிங்கமது வசியமாகும்
தோணப்பாஉத்திரட்டாதி துவாதேசிகன்னி
சொல்லொண்ணாஆகிருஷ்ணம் முடியாய்ச்செய்யும்
வேணப்பாசதயமுடன் திரிதிகையுந்துலாமும்
வேணபடிமோகனமாம் விரும்பிச்செய்யே. (௬௭)

---

சோலை என்பது - விருட்சிகம்

இதுவுமது

௬௪ திரும்பியேபூரட்டாதி அஷ்டமியுந்தேறும்
மேலானஸ்தம்பனமாம் வேணபடியாகும்
கரும்பியேரேவதியுந் திரையோதேசி
கனியானதனுசதுவும் வித்வேஷணமுமாகும்
அரும்பியேயிந்தநாள் ஆகவேணும்
அப்பேனோநட்சேத்திரம் திதிராசிவேளைகண்டு
திரும்பியேஅவ்வகையும் பார்க்கும்போது
தொடுத்திடுவாய் இதில்வென்றுங்குறையாமற்றுனே- (௬௮)

இதுவுமது

௬௯ குறையாமல்செய்ததினால் பலிதமாகும்
குணங்குறிகள்பார்ப்பதற்கு இதுவேவேணும்
பறையாமல்போனதினால் பலிக்குமுன்னே
பஞ்சாங்கபலதிரட்டை அநுசரித்துக்கொள்ளு
மறையாமல்சொல்லிவைத்தேன் சாஸ்திரத்திலுள்ள
வகையெல்லாமாறுபத்து பக்ஷியாயச்செய்தால்
நிறையாமல் அவ்வளவுந்தப்பேயில்லை
நிஜமடாபஞ்சபக்ஷி வித்தைதானே (௬௯)

இதுவுமது

௭௦ பக்ஷிவித்தை ஒருபோதும்பழுதேயில்லை
பாராமர்போனதினால் பழுதேயாகும்
கொச்சிவித்தைபலுப்பதுதான் ஏதுனாலே
குறிகுணங்கள் நேரமங்கேகுறைவிதாலே
வச்சிவித்தைகருக்குருவம் கண்டபேர்க்கு
வணங்குமடாபட்சிவித்தை மயக்கமில்லை
நச்சிவித்தையிதுக்குநிகர் ஒன்றுமில்லை
நாட்டிலேயித்தொழிலைச் சொல்லொண்ணாதே (௭௦)

அஷ்டகன்மப்படலம் முற்றிற்று



# பீடைநிவாரணப்படலம்



ஊண்பட்சியில் பீடைவருங்கால் நிவாரணம்

௭௧ பாரடாயுலகிலுள்ள மாந்தர்க்கையா
படருகிறபீடையது நீராவிட்டால்

சாரடாமாறயிலே பீடைபற்றி
தள்ளுவதுபோல் சிறுக்கும்தவித்துநோகும்
தேரடாபஞ்சபட்சி தொழிலைக்கண்டு
ஜெகமதிலேகாலநிலை அளவுங்கண்டு
ஏரடாகொடுத்ததொரு கன்மபீடை
என்மகனேதுடராமல் தீர்க்கவுண்ணே (௧)

இதுவுமது

௲௭௧௯ வுணென்றபட்சியிலே வரும்பீதீர்க்க
உத்தமனேகணபதியை வைத்துக்கொண்டு
வேனென்றவெள்ளை புஸ்பம்சாத்திக்கொண்டு
விநாயகர்முன்உபசாரஞ் செய்துபோற்றி
தேனென்றமந்திரந்தான் சொல்லக்கேளு
திடமான அக்ஷரந்தான் ஓம்-ஸ்ரீயுங்-அங்-உங்யென்று
தானென்றயெழுத்துடான ஐயுங்-கிலியுங் - கணபதி-சர்வசாயம்
நசி-மசி-என்றுசாற்றுவாய் ஆயிரத்தெட்டுறுவமாமே (௨)

இதுவுமது

௲௭௨௰ உருவானஅதின்பின்பு கும்பம்வைத்து
ஒருபடிநெல்தான்பரப்பி அறுகோணமிட்டு
திருவானகாரணபஞ்சா க்ஷரத்தைவைத்து
ஜெயமாகவேணுமென்று காரியபஞ்சாக்ஷரமும்வைத்து
மருவானசக்கரத்தில் சூலமிட்டு
மைந்தனேஅதில்நடுவில் ஓங் அங்-சிவசிவாயென்றுபோடு
தருவானகும்பத்தில் சலத்தைவைத்து
தண்மையுள்ளமாங்குழையை யதின்மேல்வையே (௩)

இதுவுமது

௲௭௨௧ வைத்தபின்பு அதின்மேலே தேங்காய்வைத்து
வாகாகநூல்சுற்றி ஆடைசாற்றி
கைத்ததொருகும்பத்தின் முன்னேஅப்போ
கலந்துவைப்பாய்வஸ்த்ரூடனே சுத்திதானும்
செய்த்ததொருவர்க்கவகை உபசாரஞ்செய்து
க்ஷேமமாய்இருந்தோரு ஓம்-ஐயுங்-கிலியும்-சவ்வும்வறுன்
கைத்தபின்புஇன்னமடா அங்,உங்கென்று
சாற்றுவாய்பீடையெல்லாம் நசிசியென்றோதே (௪)

இதுவுமது

சஉஉ ஓதடா ஆயிரத் தெட்டுருவுமானால்
உத்தமனே ஓமகுண்டம் ரெண்டும்போடு
வாதடா சமித்துவகை சொல்லக்கேளு
வன்னிமுன்னே அரசுருவி தெர்ப்பைநெற்பொரியும்
ஏதடா ஆவின்நெய்யால் ஆகுதிகள்செய்து
என்மகனே குண்டத்துக் குபசாரம்பண்ணி
கோதடா அக்ஷரத்தைசொல்லக்கேளு குணமாகவேணுமென்று
ஓம்-ஸ்திரீயும்-அங் உங்-சருவ-பீடை-நசி-நசி-என்றோதே (ரு)

இதுவுமது

சஉங ஓதியபின் உருஅங்கே ஐயாயிரமானால்
உத்தமனே பொங்கல்பெலி நைவேத்தியஞ்செய்து
கோதியெடுசாம்பலெல்லாங் கும்பத்திற்போட்டு
குடத்துநீர் அவன்சிரசில் விடும்போதப்பா
ஆதிசிவனே நினைத்து ஓம்-சிவா-சிவ-என்று
அப்பனே அபிஷேகம் செய்துபாரு
நீதியாய்நாளதுதான் பதினொன்றானால்
நிலைக்குமோ பீடையெல்லாம் விலகும்பாரே (௬)

இதுவுமது

சஉச விலகுமே மதியென்ற தகடுசெய்து
மேலானஉச்சாடன் அக்ஷரத்தைவைத்து
கலகுமே தேவியென்ற வாலைபூசை
கைப்பாகந்தப்பாமல் வைத்துகொண்டு
நீங்குமே அதின்முன்பு தகடுவைத்து
நீஓதுஉச்சாடனம் ஆயிரத்தெட்டானால்
விலகுமே பீடையென்ற தோஷமெல்லாம்போச்சு
நில்லாதுகன்னிக்கி உபசாரஞ்செய்யே (எ)

நடைப்பக்ஷியில்பீடைவந்தால்விலக்க

சஉரு செய்துபார்நடைதனிலே பீடைவந்தால்
தீர்ப்பதற்குவிநாயகனை வைத்துக்கொண்டு
கொய்துபார்கும்பம்வைத்து கும்பமொண்டு
கூறுவேன்சமித்துவகை சொல்லக்கேளு
நந்துபார் அரசுவன்னிஉருவிதெர்ப்பை
நல்லவிழாமரசுப்பி கருங்காலித்தூளும்
மஅ

நெய்துபார்நெற்பொரியும் கடலைமொச்சை
நேராகக்கலந்துகொண்டு கும்பம்போடே (௯)

இதுவுமது

௬௨௬ போடவேஆவிநெய்யும் இலுப்பைநெய்யும்
புண்ணியனேஇரண்டுமொன்றாய் கலந்துகொண்டு
நாடவேயெக்கியத்தில் ஆகுதிகள்செய்து
நல்லதொருஅக்ஷரத்தை சொல்லக்கேளு
தேடவே-ஓம்-ரீயும்-அவ்வும்-ஸிவியும்-அங்-உங்-பீடை-நசி-நசி-என்று
செலுத்துவாய்உருவையங்கே பதினாயிரமேதானும்
வாடவேவேண்டாங்காண் பொங்கல்பலியுடனே
மைந்தனேசோடசஉப சாரஞ்செய்யே (௰)

இதுவுமது

௬௨௭ செய்துகொண்டுகும்பத்து சாம்பல்எல்லாம்
திரணமதுபோகாமல் கும்பத்தில்போடு
ஐதுகொண்டுஆதியென்ற சிவனைபோற்றி
அப்பனேசிவாசிவ என்றுபூசி
கொய்துகொண்டுவாலையுட தியானஞ்செய்தால்
குமரியவள்முன்புவந்து நிற்பாள்அப்போ
வைதுகொண்டுபோகுமடா நடையின்பீடை
மக்களேநாள்பதினொன்று செய்துபாரே (௰)

அரசுபட்சியில் பீடைவந்தால் விலக்க

௬௨௮ செய்வாறேஅரசுதனில் பீடைவந்தால்
திடமானகணபதியை வைத்துப்போற்றி
செய்வாயேகும்பம்குடம் முன்னேவைத்து
நேமகமாய்வாலையுட பூசைசெய்து
கொய்வாயேகும்பமது ரெண்டுபோடு
கொழுத்துகிறசமித்தினுட விபரங்கேளு
மைவாயேஅரசுசந் தணமும்ஆகும்
மக்களேநெல்கொண்டு ஓமஞ்செய்யே (௰௧)

இதுவுமது

௬௨௯ செய்யவேக்ஷேமசமாய் உருவங்கேதான்
திரமாகஆயிரமும் செய்துபாரு
தொய்யாதேபலியுடனே தீபங்காட்டி
தோணவேசாம்பலெல்லாம் குடத்திற்போடு

கையாலேகூடமெடுக்கும் போதெல்லாந்தான்
கருணையுடன்சிவனைநின் கருத்திலெண்ணிக்க
மெய்யாகவினைதெறித்துப் போகும்பாரு
மேலானசேறனத்தால் தகடுபோடே

இதுவுமது

௬௩௰ தகடதிலேவசியெழுத்தை வரைந்துகொண்டு
தப்பாமல்நாளேழு பூசைசெய்து
விகடதிலேஇல்லாமல் போகும்போது
மேலானபீடையெல்லாம் விலகிப்போகும்
சகடதிலேகிருபைமெத்த சிவன்தான்உண்டு
தரணிதனில்கண்டவர்கள் வணங்கிப்பூசி
அகடதிலேஉலகுதனில் வாழ்வார்பாரு
அப்பனேபீடையது விலகும்பாரே (௰௩)

உரக்கப்பகூதியில் பீடைவந்தால்விலக்க

௬௩௪ பாரடாஉறக்கத்தில்வரும் பீடைதன்னை
பதியைவிட்டுவிலகுதற்கு பண்புகேளு
நேரடாகணபதியை வைத்துக்கொண்டு
நேமகமாய்வாலையுட கும்பம்வைத்து
ஓதடாஓமகுண்டம் நாலுபோடு
உத்தமனேசமித்துவகை சொல்லக்கேளு
கோரடாஆலரசு அத்திஇத்தி
குலாவியதோர்வன்னிமுன்னே உருவியெள்ளோ (௰௪)

இதுவுமது

௬௩௫ எள்ளுடனேநவதானியம்நெற்பொரியும்சேர்த்து
என்மகனேஆவிநெய்யும் இலுப்பைநெய்யும்
தெள்ளுடனேதேங்காய்நெய் கலந்துகொண்டு
தெர்ப்பையினால்சொரிந்துவிடு உருவேறமட்டும்
அள்ளுடனே ஓம்-ரீயும்-கிலியும்-ஐயும்-சவ்வும்-என்று
அப்பனே-ஸ்ரீம்-ரீயும்-நசி-நசிஎன்று
தள்ளடாதுற்புத்தி ஒருநினைவாய்க்கொண்டு
சரியாகபதினாயிரம் உருவைப்போடே (௰௫)

இதுவுமது

௬௩௬ போடடாகும்பமொன்றில் ஸ்தம்பனமேபோடு
புகழானபேதனமும் போட்டுநீரு

கோடாவேஷணமும் ஆகும்பாரு
கெடியானமோகனமும் கெட்டியாய்ச்செய்து
நாடாபெலியுடனே தூபதீபம்காட்டி
நலமாகவேணுமென்று சாம்பல்வாரி
கோடாகுடந்தனிலே கலந்துகொண்டு
குமுறவிசிவனேநினைந் தபிஷேகஞ்செய்யே (௰சு)

இதுவுமது

௲௩௪ செய்தபுன்புரவிமதியுஞ் சேர்த்துக்கொண்டு
திரமாணதகடடித்து உட்சாடணமேசெய்ய
நொய்துகொண்டபிணியாளன்மேலேபோடு
ஓடிவிடும்பீடையென்ற தோஷம்தானும்
தொய்துகொண்டகன்னிக்கு உபசாரஞ்செய்து
சொற்பெரியசிவனுக்கு அபிஷேகம்பண்ணி
வைதுகொண்டுபோகுமடா பீடையென்றதோஷம
மக்களேமாண்டவர்தான் அறையுஞ்செய்யே (௰எ)

மரணபக்ஷியில் பீடைவந்தால் விலக்க

௲௩௫ செய்யப்பாமரணத்தில் பீடைவருமாகில்
திரும்புவதுவெகுவருத்தம் சிவன்செயலும்வேணும்
தொய்யப்பாகணபதியை வைத்துக்கொண்டு
தொடுத்திடுவாய்வாலையுட கும்பம்வைத்து
நொய்யப்பாஓமகுண்டம் எட்டுபோடு
நோக்குகிறசமத்துறவை சொல்லக்கேளு
தையப்பாஅரசுவன்னி நாயுருவிஅத்தி
தனதானகருங்காலி ஆலின்கொம்பே (௰அ)

இதுவுமது

௲௩௬ கொம்புடனேமரசுப்பி அருகுவோடு
கோர்வையாய்நவதானியம் நெற்பொரியுங்கூட்டி
அன்புடனேமேதநெய்யும்செம்மறியின்நெய்யும்
அப்பனேஇலுப்பைநெய்யும் தேங்காநெய்யும்
தெம்புடனேபுங்கெண்ணெய்புன்னையெண்ணெய்
தெளிவானவேப்பெண்ணெய் பன்றிநெய்யும்
விம்புடனேகேசரியின் நெய்யுங்கூட்டி
விரவியேஎக்கியத்தில்விடுவாய்பாரே (௰கூ)

இதுவுமது

சா௲எ பாரோநீகும்பம்எட்டில் அஷ்டகன்மம்எட்டும்
பாங்காக செபம்செய்து உருபதினாயிரமேயானால்
வேரோநீ நினையாதே பொங்கல்பெலிதூபம்
வேணபடிசெய்துகொண்டு சாம்பல்குடத்திற்போடு
கோரோநீ நின்றுகொண்டு சிவனைப்போற்றி
நீர்விடுவாய் அவன்சிரசில் அபிஷேகம்செய்தால்
தூரோநீ இவ்வகைதான் மண்டலந்தானொன்று
தொடுத்துவிடுபீடையது விலகும்பாரோ (உ0)

இதுவுமது

சா௲அ விலகுமேஎவ்விதத்தால் வந்தபீடை
மேலானபிரபுக்கு வந்ததோஷமெல்லாம்
அசங்குமேசெய்துகொண்டால் பீடைஇல்லை
அப்பனேதள்ளிவிடும் சுகமாகவாழ்வார்
இலகுமேஎன்னசெய்யப் போகுதென்று
எளிதாகநினைந்துகொண்டால் பீடைகொல்லும்
அலகுமேபிரமவெபி உள்ளமட்டும்
அலைச்சல்மிகும்பீடைகுணம் தோணும்பாரோ (உக)

பீடைநிவாரணப்படலம்முற்றிற்று

---



# அக்ஷரமாறல்படலம்

சா௲கூ தோணுமேஉலகிலுள்ள அக்ஷரத்துக்கெல்லாம்
தோணுதபஞ்சபட்சி சூட்சந்தானும்
காணுமேகருக்குருவும் காணாதுபாரு
கடினமடாஆசானும் காட்டவேணும்
பேணுமேயினதுருகி யாகவேணும்
பிசகினால்பக்ஷிவித்தை பிசகிப்போகும்
ஆணுமோஅக்ஷரங்கள் அறியவேணும்
அறிவதுதான்வெகுநினைவாய் செலுத்துவாயே (க)

அக்ஷரமாறலறிய

௲சய செலுத்துவாய்பூருவத்தின் பகலுக்கப்பா
திடமான ஆகிருஷ்ணம வசியம்மொண்டும்
வழுத்துவாய்பூருவத்தின் இரவுதன்னில்
வளமானமோகனமும் தம்பனமும்ஆகும்
பழுத்துவாய்அமரத்தின் பகலுக்கப்பா
பகையானஉட்சாடணமும் வித்வேஷணமும்ஆகும்
கொழுத்துவாய்அமரத்தின் யிரவுதன்னில்
குடிகெடுத்தமாரணமும் பேதனமும்ஆமே (உ)

இதுவுமது

௲சக ஆகுமேபூருவத்தின் பகலுக்கப்பா
அதுசரிநீகடைநிலையை பிடித்துமாறு
ஏகுமேபூருவத்தின் னிரவுதன்னில்
பொல்லாதநாலெழுத்தின் மாரலைநீஓது
ஏகுமேஅமரத்தின் பகலுக்கையா
என்னசொல்வேன்னெண்டெழுத்து மாறலிலேயில்லு
வேகுமேஅமரத்தின் னிரவுதன்னில்
வெட்டவெளியாக்கிவிடும் கடுத்தலையமாறே (௩)

திக்குகளின் அஷ்டகன்மம்அறிக

௲சஉ மாரிவிடுபேதனமும் மாரணமும்தெற்கு
வகையானவித்வேஷணமும் உச்சாடனமும்மேற்கு
கோறியிடும்தம்பனமும் மோகனமும்வடக்கு
குலவுகின்றவசியமும் ஆகிருஷணமும்கிழக்கு
வாரிவிடும்தொழிலையங்கே தனித்திருந்துபாரு
வணங்குவார்உலகத்தோர் மனதறிந்துசொல்லு
கீரிவிடும்பாவத்துக் காழாகாதே
நிமிஷத்தில்னதிரிவுடல் கீரிப்போமே (௪)

இதுவுமது.

௲சா போகுமேஅஷ்டகன்மம் இதற்கீடல்ல
பொல்லாதகருத்தொழிலும் இதற்கீடல்ல
ஆகுமேசல்லியங்கள் ஒட்டியங்கள்
அணுகாதுதொட்டியத்தில் அவர்க்கெல்லார்க்தான்
சாகுமேமந்திரியம் கெணங்கள்பூதம்
சண்டாளப்பிசாசமுதல் ஐயன்துர்கை

வேகுமேயட்சிவித்தை கண்டபோதே
மேலானவித்தையென்று மெச்சினாரே (௫)

இதுவுமது.

௲௪௪ மெச்சினார்பதினெண்பேர் சித்தரெல்லாம்
வெகுகோடிரிஷிகளெல்லாம் மெச்சினார்கள்
கொச்சினார்உலகத்தில் அனந்தங்கோடி
கூர்மையுள்ளமனமுள்ளோர் காணவேணும்
பட்சிஎன்றதொழிலைத்தான் பார்த்தபேர்க்கு
பகையில்லையொருநாளும் பகைத்தோர்இல்லை
வசூசிஎன்றஆயுதம் மனதடக்கஞ்செய்தால்
மற்றவித்தைசிமிஷத்தில் வரும்பார்நவிலுவேனே (௬)

பிரமன்பிருதுவின்வீட்டின் அக்ஷரம்

௲௪௫ நவிலுவேன்உருவையிங்கே வகுத்துக்கொண்டு
நாட்டடாபிரிதிவியில் நாற்கோணவீடு
தவிலுவேன்நான்முகன்றன் பீசம்வைத்து
தப்பாமல்அங்கென்றும நங்கென்றுந்தான்
மவிலுவேன்ரெண்டெழுத்து கோசப்பீசம்
வைத்துமேரெண்டெழுத்து கொண்டுவோது
அவிலுவேன்கருவையங்கே தொட்டுகொண்டு
அப்பனேவோதிப்பார் பலிக்கும்பாரே (௭)

மால்அப்புவீட்டின்அக்ஷரம்,

௲௪௬ பலிக்குமடாஅப்பினிட வீடுமக்காள்
பாரானபிறைபோலே மாலினிடவீடு
கெலிக்குமடாமாலினுட பீசம்வைத்து
கேள்மகனே இங்கென்றும் அங்கென்றுந்தான்
நலிக்குமடா அதினுடைய கோசபீசம்
நாட்டியேகருத்தொட்டு நேரம்பார்த்து
வலிக்குமடாவோர்மனது கொண்டுவோத
வாரிவிடும்செய்தொழிலுன் வரிசைபாரே (௮)

ருத்திரன்தேயுவினுடையவீட்டின் அக்ஷரம்

௲௪௭ வரிசையாய்தேயுவினுட வீடுமக்காள்
வளமானமுக்கோணம் சிவனுடையவீடு
பரிசையாய்சிவனுடைய பீசம்வைத்து
பார்மகனே இங்கென்றும் சிங்கென்றுந்தான்

கரிசையாயதினுடைய கோசபீசம்
கலந்துவைத்துகருவையங்கே தொட்டுவைப்பாய்
உரிசையாய்நின்றுசெபம் செய்யும்போது
உத்தமனேமுக்கோணம் பொல்லாதுபாரோ (௯)

மயேஸ்வரன் வாயுவினுடைய வீட்டின்அக்ஷரம்

௪௪௮ பொல்லாதவாயுவென்ற வீடுமக்காள்
பெரியமஹாசுவாதிஷ்டானத்தின் வீடுஅறுகோணம்
நில்லாதேமயேஸ்வரத்தின் பீசம்வைத்து
நின்றும்எங்கென்றும் வங்கென்றுந்தான்
சொல்லாதகோசமென்ற பீசம்வைத்து
தொட்டிடுவாய்கருவையங்கே நேரம்பார்த்து
வல்லாதவாயுவென்ற பிரசண்டவீடு
வாரிவிடும்வெளிதனிலே மதிக்கொண்ணாதே (௰)

சதாசிவம் ஆகாசம் வீட்டின்அக்ஷரம்

௪௪௯ மதிக்கவேபோகாது ஆகாசவீட்டில்
மதிரவியும்பூண்டிருந்த யீசனுடவட்டம்
கதிக்கவேயீசனுட பீசம்வைத்து
கனிவானஹங்கென்றும் ஏங்கென்றுந்தான்
விதிக்கவேயொண்டெழுத்தின் கோசபீசம்
மேவியேசுத்திரைப் பதிந்துகொண்டு
சதிக்கவுமேகருத்தொட்டு நேரம்பார்த்து
சருவியொடுஏகவெளியில் வாரிவிடும்பாரே (௰௧)

பஞ்சபூதம்பேர்தலின்பலன்

௪௫௰ வாரிவிடும்ஆகாசம் வாய்வும்பேர்ந்தால்
மக்களேஒருவருமே மதிக்கப்போகா
நீரிவிடும்பிரசண்ட வாயுசேர்ந்து
நிலைக்கவேஒட்டாது நிலைகொள்ளாது
மாரிவிடும்தெழில்கூர்மை வெளியில்காத்து
மாட்டுவதுபோலவுமே மனதிலெண்ணி
ஆரிவிடும்அஷ்டகன்ம வித்தையப்பா
அறிவுள்ளோர்அறிவார்கள் அறிந்துபாரே (௰௨)

இதுவுமது

௪௫௧ அறிந்துபார் ஆகாச வெளியுங்காதது
அப்பனே அக்கினியும் சேர்ந்துகொண்டால்

எரிந்துபோம்கண்ணுக்கு நிமைதோணாது
என்மகனே அக்கினியும் வாய்வுஞ்சேர்ந்தால்
பிரிந்துபோம்ஏகவெளி கூடிக்கொண்டால்
பேசுவதுஒன்றுமில்லை பெண்ணாசையில்லை
சரிந்துபோங்கைவல்யம் வாய்வுந்தீயும்
தானரிந்தால்அவனைவெல்வார் இல்லைத்தானே (௰௩)

இதுவுமது

௪௫௨ இல்லையே அக்கினியுந் தண்ணீர்சேர்ந்தால்
என்மகனேதண்ணீரும் அக்கினியைவெல்லும்
தொல்லையாய்வாழ்வு அங்கே கூடும்போது
தொடுத்ததொழில் நாட்செல்லுஞ்சுருக்கோயில்லை
கல்லையேஅப்பதுவை சேர்க்கொண்ணாது
கனிவானமண்ணதுவுந் தண்ணீர்சேர்ந்தால்
இல்லையேகாணாமல் தண்ணீர்வற்றி
இரங்கிவிடும்மண்ணதுவும் உண்ணும்பாரே (௰௪)

சத்திசிவக்கூறு

௪௫௩ உண்ணுமே அஞ்செழுத்தில் ரெண்டெழுத்தில்லை
என்றுமேபேசுவது எளிதோசொல்லு
மண்ணுமேதண்ணீருங் கூடிஅல்லோ
மனுவென்றசீவசெந்தை வளர்த்தஉறவாடி
எண்ணுமேயுலகமென்ற வாழ்க்கையெல்லாம்
இரண்டினால்உண்டாச்சு இசைந்துபாரு
கண்ணுமேஉயிரதுவை வளர்த்ததுபோலப்பா
கனிவானமண்தண்ணீர் அறிவதுதான்பெரிதே (௰௫)

இதுவுமது

௪௫௪ பெரிதானமண்ணல்லோ சத்திசத்தி
பேசவுமேகூடாது சிவன்தான்தண்ணீர்
நெரிதானசத்திசிவ மகண்டபேர்கள்
நீடூழிகாலமெல்லாம் நிமையாதோறும்
சரியானஉலகத்தில் சிறுமைபெற்று
தான்திரிவார்அவரைஒருவர் அறியமாட்டார்
அரிதானசித்துருவித்தை எவர்சொல்வார்கள்
அப்பனேஇவர்மணதை யரியார்பாரே (௰௬)

இதுவுமது

சுருரு அரியாரே அவர்மனதை நோகச்செய்தார்
அருகிவிடும் அவர்குடியும் அழிந்துபோகும்
தெரியாரே அவர்க்குஉப காரம்செய்தோர்
சிறுமைவிட்டு பெருமையிலே தேரிவாழ்வார்
சரியானநற்பதவி அவர்க்கேகிட்டும்
சண்டாளசென்மமென்றால் தரிகொள்ளாது
நெரியாரே உலகத்தோ டொத்துவாழ்வார்
நேரறிந்து அவர்குணதிற் நின்றுதேரே (யஎ)

இதுவுமது

சுருசு தேருவதுயெளிதல்ல வெகுநாட்செல்லும்
செகத்திலேகோடியிலே ஒருவன்உண்டு
ஆறுவதுகோடியிலே அணுகாதுபாரு
அப்பனேபெண்ணாசை அற்றுப்போச்சு
கோறுவதுபொருளாசை மண்ணின்ஆசை
குடிகெடுத்தகாமவெறி குழலாளைத்தள்ளி
ஏறுவதுசத்திசிவம் பூசைவிட்டால்
இழந்திடுவாய்சத்தியமாய் யெண்ணிக்கொள்ளே (கூஅ)

இதுவுமது

சுருள கொள்ளுவதுபட்சிவித்தை அறியவேணும்
கூடுதனில்வாழுமுயிர் தெரியவேணும்
துள்ளுவதுநிலையில்நின்று வாசிவிட்டால்
தூலமென்றகாயமது அழிந்துபோகும்
அள்ளுவதுபிரதிஷ்டைக்குள் ஆகிக்கொண்டு
அப்பனேபாசவினை யடுத்துக்கொல்லும்
வெல்லுவதுசத்திசிவம் பூசைசெய்தால்
மேலானபட்சிவித்தை பலிக்கும்பாரே (யகூ)

இதுவுமது

சுருஅ பாரப்பாபஞ்சபட்சி சுருக்கம்சொல்வேன்
பார்தனிலேஒருவருக்குஞ் சொல்லவேண்டாம்
நேரப்பாகலியுகத்தில் பழிக்கஞ்சார்கள்
நேர்மையுள்ளமனமுள்ளோர் தேடிப்பார்த்து
ஆரப்பாகோடியிலே ஒருவனுண்டு
அமர்ந்திருப்பார்ஞானநிலை அறிவுதங்கி

சீரப்பா இருந்தோதா மனஞ்சோதித்து
தென்னூதமிழ் பட்சிவித்தைசெப்புவாயே (௨௰)

இதுவுமது

௪௬௯ செப்புவாய்வருஷமது பனிரண்டு ஆனால்
திடமானமனதொன்று அறிந்துக்கொண்டு
ஒப்புவாய்ருகூதி ருகூமெல்லாம்
ஒழித்துவைத்துரைத்ததெல்லாம் சொல்லுவாய்நீ
தப்புவாய்சகலகரு மானமெல்லாம்
தாணடக்கஞ்செய்துகொண்டு அறிவில்நில்லு
அப்புவாய்பெரியோராகற்புடையபேனா
அகந்தையாய்ச்சொல்வரவர் அழிந்திடுவார்தானே (௨௧)

இதுவுமது

௪௭௰ அழிந்திடுவார்பட்சியைநீ பார்த்துக்கொண்டு
அப்பனேஉடலினுட சக்கரத்தைவைத்து
தெளிக்கவேபிரிதிவியில் நாற்கோணமிட்டு
நேர்மையுள்ள அங்கென்றும் ஙங்கென்றுந்தான்
குளிக்கவேபிரீங்கென்று கோசபீசம்வைத்து
கூட்டுவாய் அவன்பேரை சுற்றிவரபதித்து
களிக்கவேகருத்தொட்டு வோதுவகைகேளு
களிவாக-அங்-ஙங்-பிரீங்-ஸ்ரீங்-இன்னுன் நசி-ஈசி-என்-றேதே )

இதுவுமது

௪௭௧ ஓதுகிறபோதல்லோ செய்வகையைநினைத்து
ஓர்வகையாய்நின்றுசெபம் ஆயிரத்தெட்டுமானால்
ஏதுகிறவசியம்ஆ கிருஷ்ணமேசெய்யும்
என்மகனேநாலெழுத்தில் தம்பனமோகனமாம்
ஓதுகிறரெண்டெழுத்தில் பேதனம்உட்சாடனமும்
மக்களேநடுத்தலையைப் பிடித்துமாற
கூறுகிறமாரணமும் வித்வேஷணமும்செய்யும்
குறியானஅறுபத்துநாலும் ஆடும்பாரே (௨௩)

இதுவுமது

௪௭௨ ஆடுமேதொழிலறிந்து பூசைசெய்தால்
அப்பனேஅறுவளவுந் தப்பாதப்பா
போடுமேவோர்மனதாய் செய்யும்போது
புண்ணியனேஎக்கியமாய் முடிந்துதானல்

சாடுமேதேவிக்கு பொங்கல்பலியுடனே
தனதானருத்திரசெபம் தாக்கும்போது
வாடுமேகுறித்தபட்சி மாண்டுபோகும்
மக்களேநாள் மூன்றில் அழிந்துபோமே (௨௪)

இதுவுமது

௩௬௩ அழிந்துபோம்செய்வகையை நினைந்துக்கொண்டு
அப்படியேதொடுத்திடுவாய் எழுத்தறிந்துபாரு
தெளிந்துபோம்தொழிலுக்கு வர்க்கவகைகண்டு
திடமாகநீவிருந்து வோதும்போது
கழிந்துபோம்குறித்தபட்சி உடல்சிதறிப்போகும்
கண்மணியேகன்மம்அது தோஷம்தோஷம்
நெளிந்துபோம்பட்சிஅது பொல்லாதப்பா
நேரறிந்துகுறிப்பறிந்து நீசெய்வாயே (௨௫)

இதுவுமது

௩௬௪ செய்வதுதான்யாருக்குச் செய்யவேணுந்
செகத்திலேஎனத்துரோகி குருத்துரோகிக்கும்
கொய்துதான்பெரியோரை தூஷிப்போர்க்கும்
கொடுமைஉள்ளவஞ்சகர்க்கும் கற்பழித்தபேர்க்கும்
நெய்வதுதான்பொய்குரு கற்றபேர்க்கும்
நேர்மைஉள்ளபிராமணரை பழித்தபேர்க்கும்
நைவதுதான்சிவாலயங்கள் அழித்தபேர்க்கும்
நவமில்லாமனத்தோர்க்கு செய்வாய்பாரே (௨௬)

அப்புவின் வீட்டின் அக்ஷரம்

இதுவுமது

௩௬௫ பாரப்பா அப்புவுக்குப் பிரையாம்வீடு
பணிந்துநல்லஇங்கென்றும் மங்கென்றுந்தான்
கோரடாஸ்ரீங்கென்றும் கோசப்பீசம்வைத்து
கூட்டுவாய் அவன்பேரை சுற்றிவைத்து
காரடாகருவையங்கே தொட்டுக்கொண்டு
கனிவாகவோதும்வகை-இங் மங்-கென்று
தேரடாவிஷங்கட்கு-கங்-கென்றுசொல்லி
தேடியேயின்றுஞாநசி-நசி-யென்றுசுற்றிவையே (௨௭)

தேயுவின்வீட்டின்அக்ஷரம்

௩௬௬ சுத்திவைத்துமுன்போல செய்துபாரு
துஷ்டயான அஷ்டகன்மம் ஆகும்பாரு

குத்திவைத்துதேயுவினுட வீட்டைக்கேளு
குறியானமுக்கோணம் சிவனுடையஆட்டம்
கத்திவைத்துஉங்கென்றும் சிங்கென்றுந்தான்
கருதுவாய்டங்கென்று கோசபீசம்வைத்து
மூத்திவைத்துவோதுவது உங்கிங்கென்று
மொழியடா-டங்-கென்று-ரங்-லங்-நசி-நசி-யென்றோதே (௨அ)

இதுவுமது

௩௬௭ என்றல்லோஎதிரியுட பேரைச்சுற்றி
எழுதுவாய்கருவைஅங்கே தொட்டுவைத்து
நன்றல்லோசுத்தியுடன் வஸ்துவைத்து
நலமாகமுன்சொன்ன படியேயோது
மன்றல்லோஅஷ்டகன்மம் அறுபத்திரனும்
வகையுடனேசெய்வதுதான் பலிக்கும்பாரு
குன்றல்லோவெடிமருந்து இதற்கொவ்வாது
குடிகெடுத்தபட்சிவித்தை கூறொண்ணாதே (௨௯)

வாயுவின்வீட்டின் அக்ஷரம்

௩௬௮ கூறவொண்ணாவாயுவினுட வீட்டைக்கேளு
குமரகுருசக்கரத்தான் அறுகோணம்அப்பா
மாறவொண்ணா எங்-மங்-கென்றுபோடு
மறையாதேவீங்கென்றும் கோசபீசம்வைத்து
தேறவொண்ணாசிவத்துக்கு எழுத்தைக்கேளு
திரமான-எங்-வங் வீங்-கங்-ரங்-இன்னுனேநசிநசிஎன்றோது
நேரொண்ணாக்கருத்தொட்டு வோதும்போது
நீறிவிடும்பிரசண்ட வாயுதானே (௩௰)

ஆகாயத்தின்வீட்டின் அக்ஷரம்

௩௬௯ தானென்ற ஆகாயவட்டவீடு
சதாசிவனார்வாழும்அந்த வீட்டில்அப்பா
தேனென்ற-ஓங்-யங்-என்றுபோடு
திரமாக-டங்-ரீங்-காரம் கோசபீசம்வைத்து
மானென்றதேவியைத்தான் வருந்திக்கொண்டு
வளமாகவோதும்வகை நன்றாய்க்கேளு
பானென்ற-ஓங்-யங்-டிரிங்-கங்-சங் இன்னுனேநசிநசி
பரமபதம்வழிநோக்கி பகைத்துச்செய்யே (௩௧)

பிரிதிவிக்குகடத்தலையாகப்பிடித்துமாறல்

௬௱௯௨ பகையாதுகடத்தலையைப் பிடித்துமாற
பகைத்தபேர்எல்லாரும் உன்பதமேசேர்வார்
நகையாதுநசிபைவிட்டு வசியென்றுவோது
நலமானதொழில்கள்எல்லாம் நசியைநினையாதே
வகையாதேமற்றஅஞ்சு தொழில்கட்கப்பா
வகையாகநசியைவிட்டால் பலியாதுடாரு
தகையாதுதொழில் அறிந்து வோதவேணும்
துடியானபகைபோச்சு உறவும்ஆச்சே (௯௨)

சுபகாரியத்துக்கு செபம்செய்யும்ஸ்தலம்

௬௱௯௩ உறவானதொழில்கள்எல்லாம் மித்துருவைச்சேர்ந்து
ஓதுவாய்சுநுமனதாய் இருந்துகொண்டு
பறவானநல்லதோர் காரியங்கள்
பலிக்குமடா வில்வமரம் பதியிலிருந்தோது
நறவானசிவாலயங்கள் கெங்கையோரம்
வளர்ந்தநந்தவனத்திலே இருந்துசெய்தால்
திரமானமூன்றுவகை தொழிலுமாகும்
திண்மைஎன்றதொழில்செய்யும் தலத்தைக்கேளே [௯௩]

அசுபகாரியத்துக்கு செபம்செய்யும்ஸ்தலம

௬௱௯௪ தலமதுதான்பாழ்வீடு மெத்தநன்று
தன்மையுள்ளமூகசந்தி பாதைஆகும்
குலமதுதான்காளியிட கோவில்ஆகும்
குலாவுகின்றபொதுவான அம்பலமும்ஆகும்
செலமதுதான்மாட்டையுந் தொழுவம்ஆகும்
தீயெறியுக்காடாகும் சுடுகாடுஆகும்
வயமதுதான்இத்தலத்தில் தொழிலைச்செய்ய
மக்களேஅஞ்சுவகை தொழிலும்ஆமே (௯௪)

௬௱௯௫ தொழிலாகும்வகையேது சொல்லக்கேளு
துடருமுன்னேபக்ஷியைநீ கண்டபோதே
குளியாகும்அந்திடத்தை சுத்திபண்ணு
குணமாகமந்திரந்தான் சிவாசிவவென்றுசொல்லு
தழுவாகும்பட்சிலேக்கி சாபம்நீக்கி
தன்மையுடன்காப்பிட்டு சிலைபோல்வருந்துபாரு

தெளிவாகும்சக்கரத்தில் அக்ஷரத்தைவைத்து
நேர்மையுள்ளசக்கரத்தால் கருத்தொட்டுபூசைசெய்யே (௬ )

இதுவுமது

௲௭௪ பூசைசெய்துநிர்வாணத் தோடேநின்று
பிடுங்குவாய்கிழக்குமுக மாகநின்று
பாசைசெய்துவேர்வாங்கி தேவிமுன்பு
பண்பாகவைத்துநீ தூபபெலியுடனே
வோசைசெய்துவேரெடுத்து வைக்குந்தலைமைகண்டு
விழியானபெலிகொடுத்து புதைக்கும்போது
நாசைசெய்துபோகுமடா தொழில்பொல்லாது
நாடாதேவெகுபாவங் கொடுமையாமே (௬௯)

இதுவுமது

௲௭௫ கொடுமையுள்ளவஞ்சகர்க்குச் செய்யவேணும்
கொலையானபேர்களுக்குச் செய்யவேணும்
அடிமையென்றுவந்தவர்க்கு அறிவித்தாக்கால்
அப்பனே அவன்செய்யும் பலனிற்பாதி
வடுமையென்றுமனமறியச் சொன்னாயானால்
வந்திடுமேவெகுபாவம் வந்துசூழும்
தடுமையுள்ளபித்தர்கள்தான் வந்துவைப்பார்
தள்ளிவிடு அதினாலே பலன்உண்டாமே (௬௭)

இதுவுமது

௲௭௬ பலனுண்டுஇத்தொழிலை வெளிவிடாதே
பழிக்கஞ்சாகலியுகத்தில் பழியோபாவம்
பெலனுண்டுஉலகத்தில் பகையோஇல்லை
பெருமைஎன்றபெரியோர்கள் வார்த்தைசொல்வார்
கலனுண்டுஎன்றுசொல்லி சற்றுநினையாதே
கலங்காதேமனமுறுதி கழியவேணும்
சிலருண்டுவருங்காலம் தங்குங்காலம்
செடமறிவதற்கல்லோ தெளிந்துபாரே (௬அ)

இதுவுமது

௲௭௭ தெளிவைத்தான்வெகுவினையம் வைத்துபாரு
செடமுழுதும்சத்துருவை பித்துருவைகண்டு
அறிவதுதான்உண்டானால் தொழில்செய்யும்போது
அப்பனேயட்சிக்கி பகையைக்கூட்டு

தெளிவதுதான்பட்சிவகை இருந்திடத்தில்
நேரானகருத்தொட்டு வைக்கவேணும்
கழிவதுதான்தலைகீழாய் மாறும்போது
சண்ணுமடாகருக்குருவும்சண்ணும்பாரே (௬௪)

இதுவுமது

௭௮ சண்ணுமடாருத்திரசெபம் முடிந்ததாலல்
தானினைந்தபடிமுடியும் தப்பாதுஅப்பா
எண்ணுமடாமுன்போலே தொழிலைச்செய்து
எடுத்திடுவாய்கொள்ளியொடு அதனில்வைத்து
கண்ணுமடாருத்திரனை நினைந்துகொண்டு
கனிவானவஸ்துடனே சுத்திவைத்து
பண்ணுமடாவோர்மனதா இருந்துசெபம்செய்தால்
பழிகாரருத்திரனும் முடிப்பான்பாரே (௬௫)

இதுவுமது

௭௯ முடிப்பாரேஅவனுடைய கருவிருப்பதாலே
மோசமதுசெய்திடுவான் பழிகொலைக்குஅஞ்சான்
அடிப்பானேஅவனுடைய எமதண்டியினாலே
அவனடிக்கஆர்விலக்கப் போறார்அப்பா
குடிப்பானேஉதிரம்என்ற பானந்தானும்
கொல்லுவான்அவனுடைய ஈரலைத்தான்கவ்வி
கடிப்பானேமூளையைத்தான் தின்றுஐயா
கலங்காமல்நீயிருந்து பூசைமுடிப்பாயே (௬௬)

இதுவுமது

௮௦ முடிப்பாயேஉன்மனது போலேமக்காள்
முடிவதுதான்ஏதாலே கருக்குருவினாலே
செடிப்பானேஎதிரியுடல் பெலங்குறைந்ததாலே
சிவனுடையருத்திரர்களை கோபத்தாலே
வடிப்பானகாலன்என்ற துகைமுடிந்ததாலே
வந்துதடாஇந்தவினை மறிக்கப்போகா
குடிப்பானருத்திரனும் உதிரத்தைத்தானும்
கோபமதைஒருவரால் திருப்பொண்ணாதே (௬௭)

இதுவுமது

௮௧ திருப்புவதுகருவறிந்த பேரேஅல்லால்
ஜெகத்திலுள்ளபேர்களோ திருப்பப்போறார்

கருப்புவதுருத்திரனுடமந்திரந்தானப்பா கருதுவதுஓம்ஸ்ரீம்
கிரீம் அங் உங் மதுமாங்கிஷ ருத்திரமூர்த்திவாவாவென்று
வருப்புவதுஉருவங்கேநூற்றிருபத்தெட்டு
வருந்தினல்ருத்திரனும் மனதில்தோணும்
முருப்புவதுமுன்சொன்ன எழுத்தைக்கூட்டி
முடிக்கினல்எதிரிஇல்லை முடிந்துபோச்சே (௩௬)

இதுவுமது

௩௮௨ போச்சுதடா முன்சொன்னபடிதப்பாது
பொல்லாதபட்சிவித்தை பொருள்சொல்லாதே
தாட்சியொன்றும்வாராது மனதடக்கம்வேணும்
தன்மையல்லோபுத்தியலோ தணியவேணும்
வாச்சுதென்றுஉயிர்வதை செய்யநினையாதே
வந்திடும்பார்கன்ம வினைதொலைக்கொண்ணாது
பாச்சுதுபார்குருபதத்தை பணிந்தோர்அப்பா
பதனெண்பேர்சாபம்இல்லை பலிக்கும்பாரோ (௩௭)

இதுவுமது

௩௮௩ பலிக்குமடாகுருபதத்தை மரக்கொண்ணாது
பரமபதபொருளெனவே எண்ணுவாய்நீ
சொலிக்குமடாசரஸ்பதியாள் கிருபைதானும்
தொடுத்திடுமேஞானவிதி அமைக்கும்பாரு
கெலிக்குமடாஉன்னுவில் சொன்னதெல்லாம்
கெணிதமுடன்உனைப்பகைத்தோர் வாழ்வதில்லை
வலிக்குமடாதன்னுயிர்போல் மன்னுயிரைஎண்ணி
வாழ்வதுதான்உலகத்தோ டொத்துவாழே (௩௮)

இதுமவுது

௩௮௪ ஒத்துநின்றவாழ்வறுதான் அறிந்துமக்காள்
உலகத்தில்பேய்க்கூத்தாய் ஆடும்பாரு
சத்துநிறைபொருள் அறியார்சண்டிமாண்பர்
சன்னியாசிரிஷிகளைப்போல் வேடம்பூண்டு
கூத்துநின்றபெரியோரை வணக்கஞ்செய்து
கலந்ததினல்மறைப்புஅது வெளியாய்த்தோன்றும்
புத்திவரும்அறிவுதக்கும் சிவயோகர்பெற்று
பூதலத்தில்நீயும் ஒருசித்தாவாயே (௩௯)

இதுவுமது

௬௮௫ சித்தனென்றபெயர்பெறவும் வெகுநாட்செல்லும்
செடம்இருந்தால் அதிசயங்கள்காணல் ஆகும்
பத்தனென்றகன்மவலைக் குள்ளேசிக்கி
பாழ்நரகில்விழாதே பலன்ஏதுண்டு
கத்தனென்றசிவனுடைய கடாக்ஷத்தாலே
கலந்தேறமனதுருகி யாகவேணும்
வத்தனென்றுஉலகத்தில் கோடிக்கென்று
வாழுவான்இல்லறத்தில் பெரிதாம்பாரே (௬௭)

அக்ஷரமாறல் படலம் முற்றிற்று



# மூலிகைப்படலம்

௬௮௬ பெரிதானசாஸ்திரந்தான் பட்சிசாஸ்திரம்
பேருலகில்மானிடர்கள் அறியாவிட்டால்
அரிதானநேரம்அங்கே அறிந்துசெய்தால்
அப்பனேசெய்தொழிலும் பங்கம்ஆமோ
குறியானதோஷமென்றபீஜந்தானும்
குணமாகசொல்லிவைத்தேன் கிரீங்ஸ்ரீங்யென்றுபோடு
வரிதானமுனிசொன்ன அக்ஷரத்தில்சேர்ந்தால்
மகிமையுண்டுஅவ்வெழுத்து எழுந்தாடும்பாரே (௧)

௬௮௭ ஆடுமேகாரிய பஞ்சாட்சரமும்அப்பா
அதினுடனேகாரணமும் சேர்ந்ததானால்
கூடுமேகோசமென்ற பீஜம்சேர்ந்தால்
கூடிவினை ஆடுமடா உடல்உயிராய்நின்று
வாடுமேஇதுமூன்றும் சேராவிட்டால்
மறப்பாவைபோலிருக்கும் ஆடாதுபாரு
தேடுமேகருக்குருவும் சேர்ந்தகாலம்
செகத்திலேஅவனைவெல்வ தரிதாம்பாரோ (௨)

பூர்வபட்சத்துபட்சிகளின்பச்சிலை

௬௮௮ அரிதானநேரமங்கே அறியவேணும்
அப்பனேமூலிகையும் தெரியவேணும்

சரியானசத்துருவும் மித்துருவும்நின்ற
தன்மைஅங்கேதெளிவாகக் காணவேணும்
பரிவானவைகப்பாகம் செய்பாகங்கள்
பழக்கத்தால்ஆசானும் காட்டவேணும்
குறியானதொழில்செய்தால் பலியாதேபோமே
குருத்தொட்டுக்காட்டவுமே முத்தியாமே (௩)

இதுவுமது

௩அ௯ முத்தியாய்ரோமரிஷி சொன்னவாக்கியம்
முன்பின்னாய்வாராது பழுதொன்றில்லை
பத்தியாய்ஓர்மனது கொண்டுநின்றால்
பார்க்கலாம்அதிசெயங்கள் உலகத்துள்ளே
வெற்றியாய்வருவதற்கு உறுதிவேணும்
மேதினியில்சாஸ்திரத்தை வெளிவிடாதே
சத்தியமாநீநினைந்து வந்தாயானால்
சகலமுமேசித்திமுத்தி யாவாயில்லை (௫)

இதுவுமது

௩௯0 நில்லென்றவல்லூறுக் கனைக்கிரையாகும்
நிட்சயமாய்சொல்லிவைத்தேன் ஆந்தைசிறுகிரை
வெல்லென்றகாக்கைக்கி சாரணைவேர்ஆகும்
வெகுகொடுமைகோழிக்கி தகரைவேரும்
சொல்லென்றமயிலுக்கு நங்கிலிவேர்என்று
கூறினார்முனிவர்எல்லாம் துறைசொல்லாமல்
அல்லென்றஅப்புஉப்பு நாழிஎன்று
அறிந்தவர்கள்பக்ஷிவித்தை அறிவார்பாரே (௬)

மூலிகைசாப நிவர்த்தி

௩௯௧ பாரோநீமூலிகைமுன் இருந்துகொண்டு
பகருவாய்ஓம்மூலி என்றுகொண்டு
சேரோநீசருவமூலி சாபம்நசிநசிஎன்று
செலுத்துவாய்பதினாறு உருவும்ஓதி
கோரோநீகன்னிநூல் காப்புக்கட்டி
கொடுத்திடுவாய் வஸ்துசுத்திதீபங்காட்டி
வேரோநீபிடுங்குமுன்னே அக்ஷரத்தைஓதி
வேளைகண்டுகருத்தொட்டு பிடுங்குவாயே (௭)

மூலிகைபிடுங்கும்வகை

௪௯௨ பிடுங்குமிறபோதல்லோ நிர்வாணங்கொண்டு
பெரிதானருத்திரனை மனதில்வைத்து
நடுங்குவதுவாசியைநீ உள்ளேவாங்கி
மைந்தனேநினைத்ததுபோல் எண்ணிக்கொண்டு
ஒடுக்குவதுதிண்ணமென்று எதிரிமுகம்நெஞ்சுமூலம்
ஊண்அடாநடைஉறக்கம் சாவைவைத்து
ஆடுங்குமேகுறித்திடத்தில் சரவெழுத்தைபோது
அள்ளிவிடுகாலடிமண் கருவைத்தொட்டே (௭)

பீடைசம்பவித்தல்

௪௯௩ தொட்டல்லோவேர்மண்ணும் ரெண்டும்ஒன்று
சுருக்கிடவே அவ்வெழுத்தை பிடித்துமாறு
விட்டல்லோஐம்புலனும் சிதறிப்போகும்
மேலானவேளைத்தான் மயானஞ்சென்று
சுட்டல்லோபோடாதே வெகுகொடுமைவந்து
சூழும்அடாஉனதுகுலம் கடைத்தேருவதில்லை
கொட்டியதேள் அதுபோல் விஷந்தானேறும்
கூடாதுஒருவரால் திறுப்பும்வகைபாரே (௮)

பீடைநிவர்த்தி

௪௯௪ திருப்புவதுநீயல்லால் வேறொருவர்இல்லை
செகத்திலேமுத்தர்களும் திருப்புவதும்அறிது
கருப்புவதுபிடுங்கினவேர் வித்துவிறைஇட்டு
காலைசந்தியிருநேரங்கண்டு அரசோது
முறிப்பதுவும்நடைமூலம் உறக்கமூலம்
உத்தமனேமரணவேர் பிடுங்கொண்ணாது
அறிப்பதுவும்ஊண் அரசுவேர் பிடுங்கிவைக்க
அப்பனேஉன்னைவெல்வ தரிதாகும்பாரே (௯)

தன்னைவெல்லக் கூடாதென்பது

௪௯௫ பாரடா ஆகிருஷணம் வசியம்ரெண்டும்
பண்பான அரசிலே யெடுத்துஓது
தேரடாமோகனமும் தம்பனமும்ரெண்டும்
திடமான ஊண்ணதிலே ஓதிப்பாரு
வாரடாவேஷணமும் உச்சாடணமும்ரெண்டும்
மக்களேநடைஎழுத்தைப் பிடித்துமாறு



கூட்டாபேதனத்தை எரக்கத்தில்மாறி
குடிகெடுத்தமாரணத்தைசாவெழுத்தால்மாறே (௰)

இதுவுமது.

௬௯௬ மாறிவிடும் நால்தொழிலும்வகையாய்ச்செய்து
மக்களேவேளாவைக்குந்தலைமை அதுகண்டு
கோறிவிடும்போதடைக்கும் அக்ஷரத்தைஓதி
கொண்டுபோஇவனை வெல்வதிவ்வுலகில்இல்லை
வாறிவிடும்அஷ்டகன்மம் மனதுறுதிகொண்டு
மக்களேபிரர்உயிரைவதை செய்யாதே
நீறிவிடும்தன்னுயிர்போல் மன்னுயிரைஎண்ணி
நிஜமென்றேஉணராது நிமஷம்அதுபாரே (௰௧)

அமரபக்ஷம்பக்ஷிகளின்பச்சிலை

௬௯௭ பாரேநீஅமரத்தில் கொடுமைநினையாதே
பழிகாரபச்சிலையைசொல்லொண்ணாது
மாரேநீமயிலுக்குத் தவளை ஆகும்
மருளாதகோழிக்கு குப்பமேனி
வாரேநீவல்லூற்கு நாய்க்கடுகுஆகும்
வந்ததொருஆந்தைக்கு அனாக்கினா அப்பா
காரேகேள்வலியனுக்கு அவுரி அதுசேரும்
கனமானபச்சிலையை வெளிவிடாதே (௰௨)

வேர்பிடுங்குவதில்உண்டாகும்பலன்

௬௯௮ வெளிவிட்டால்நடைமூலம் பிடுங்கினுக்கால்
வெற்றிஎன்றதம்பனமும் மோகனமும்செய்யும்
தெளிவுடனேஅரசினுட வேர்பிடுங்கிக்கொண்டால்
ஜெகத்திலேமெச்சும் ஆகிருஷணவசியம்ஆகும்
பழியுடனேஊண்வேளை பிடுங்கினுக்கால்
பழிக்குமடாவேஷணந்தான் கண்கொள்ளாது
களிவுடனேஉறக்கம்வேர் பிடுங்கும்போது
கனமானஉட்சாடனமும் பேதனம்செய்யுமே (௰௩)

இதுவுமது.

௬௯௯ செய்யுமடாமரணவேர் பிடுங்கும்போது
திரும்பாதுஎதிரிஉடல் சிதறிப்போகும்
ஐயமடாஎவ்வகையும் நினைக்கும்போது
அவ்வெழுத்தைநீபிடித்து மாறிக்கொள்ளு

பொய்யடாமுன்சொன்ன படிதப்பாது
பொல்லாதஅமரத்தில் தொழில்செய்யாதே
வையகத்தில்பாவியென்று பேரெடுத்தாமக்கள்
மனோன்மணியாள்கிருபையில்லை வரிசைபாரோ (மச)

தன்னைதானறிதல்

ருா பாரோநீஉன்னுடைய ஆத்துமாவை
பகர்ந்தறிவதற்கல்லால் சொன்னேன்சூக்ஷம்
பாரோநீஎந்தெந்த வேளைகண்டு
பருகிடுவாய் அக்ஷரத்தைபிடித்துமாறு
தேரோநீஉலகத்தில் பழிசெய்யாதே
செடமிருந்தால்அதிசயங்கள் காணலாகும்
வேரோகேள்கொலைகள் வரும்பாவத்துக்கும்
விரும்பாதேரிஷியினுட சாபந்தானே (மரு)

பட்சிநிலைஅறிதல்

ருாக சாபமென்றால்மனோன்மணியாள் கிருபைவேணும்
சண்டாளஅக்ஷரத்தை மாறவேணும்
கோபமென்றகொடுமையை நீஅகற்றவேணும்
குறித்தவன்தன்பட்சி யுடக்கருவும்வேணும்
பாவமென்றகன்னிநூல் காணவேணும்
பழிகாரநேரம் அங்கேபதியவேணும்
விவேகமென்றதினைதறிவால் கைபாகங்கள்
விரும்பினதேசெய்பாகம் பலிக்கும்பாரோ (மசா)

பழிநிவர்த்திசெய்துகொள்ளல்

ருாஉ பலிக்குமடாதேவியுட பூசைசெய்தால்
பாதகங்கள்செய்தாலும் பழிநிவர்த்திசெய்து
கெலிக்குமடாஉயிர்வதை செய்யநினையாதே
கேசரியாள்மனம்நோக நடத்தைநடவாதே
சொலிக்குமடாஉன்னுவில் ஈஸ்வரியாள்கிருபை
சொரூபநிலைஅறிவித்து பரகெதியைச்சேர்ப்பாள்
வலிக்குமடாஉன்மனது நோகநடந்தோர்க்கு
மயக்கம்இல்லைபீடைவரும் மனதறிந்துபாரே (மஎ)

இதுவுமது,

ருாங பாரப்பாஉலகத்தில் உள்ளபேர்கள்
பணிந்திடுவார்தனங்கோடி ஈந்தாலுந்தான்

சேரப்பாபகூஷியுட் சுருக்கஞ்சொல்வேன்
திண்மைஎன்ற தீவினைக்குஉள் ஆகாதே
நேரப்பாஉன்னுடைய மனதுதெளிவாக
நின்றநிலைகாணவல்லோ சொன்னேன்சூக்ஷம்
ஆரப்பாதன்அறிவைத்தான் அடக்கிக்கொண்டு
மூகத்தானசிவயோகத் திருந்திடாயே (௰அ)

புத்திகூறுதல்

ருாச இருந்திடவேகாய சுத்திசெய்துகொண்டு
என்மகனேகற்பம் அதுஉண்டுதேறு
அறிந்திடவேகூடமியா வாழ்க்கைதேட
அப்பனேமனோன்மணியாள் கிருபைசெய்வாள்
தெறிந்திடவேசித்தர்எல்லாம் உன்னிடத்தில்வந்து
தேவைஎன்றகாரியங்கள் சொல்லிவைப்பார்பாரு
சொருந்திடவே அஷ்டலக்ஷ்மியும்வந்து
சொரூபானுசொரூபநிலை சொல்வாள்பாரே (௰௯)

ஊண்வேளையில்வேர்பிடுங்கும்பலன்

ருாரு பாரடாஊண் வேருபிடுங்கினுக்கால்
படருகிறகாரியங்கள் ஆகுமபாரு
ஆரடாசத்துருமித்துருவும் ஆவான்
அப்பனேசோபனகாரியங்கள் நன்மை
தூரடாபீடையது விலகும்பாரு
தப்பாதுபொருள்வரத்து தனஞ்செயனும்ஆவாய்
ஓரடாவேர்பிடுங்கி குலிசம்அதுஆட
ஓகோகோஇதின்பெருமை உரைக்கொண்ணாதே (௨௰)

நடைவேளையில்வேர்பிடுங்கும்பலன்

ருாசு ஒண்ணாதநடைவேர் பிடுங்கினுக்கால்
உத்தமனேமுடைப்படுத்தி வருத்தம்கொள்ளும்
எண்ணாதஎண்ணமனம் இடைஞ்சல்கொள்ளும்
எவ்வளவேணும்சுகமில்லை பிரமமேமட்டும்
தன்னாலேவிதி அமைப்புஉள்ளமட்டும்
தான்அனுபவிக்கவுமே அல்லாதில்லை
விண்ணானசித்தர்களும் திரும்புவகைஅறியார்
மேதினியில்உள்ளவரோ திரும்புவதுபாரோ (௨௧)

அரசுவேளையில்வேர்பிடுங்கும்பலன்

௩௯ பாரேநீஅரசினிடவேர் பிடுங்கிவைக்க
பசுமையுள்ளதகடதனில் பொதிந்துகொண்டால்
சாரேநீஉன்சிரசில்கட்டி இடும்போது
சகலமுமேவசியமடா உன்னைவெல்லதாகும்
கோரேநீஇவ்வுலகில் சத்துருவும்இல்லை
கொங்கணவர்இவ்வேளை மெச்சிக்கொண்டார்
காரேநீஎரும்புகடை யானைதலைஎல்லாம்
கைவசமேஆகுமென்று முனிவர்சொன்னார்பாரே (௨௨)

தூக்கம்வேளையில்வேர்பிடுங்கும்பலன்

௩௪ பாரப்பாஉலகத்தில் வேர்பிடுங்கிக்கொண்டால்
பகையானஎதிரியுமே வெல்வதுவும்இல்லை
நேரப்பாஎதிர்த்தவனை ஜெயம்செய்யல்ஆகும்
நேமித்தகாரியங்கள் நிமஷத்தில்வெல்லும்
கூரப்பாஇவ்வேளை கொடுமைகளையாதே
கூற்றிவந்தான்வேறில்லை கொலைகள்வரும்தோஷம்
சாரப்பாமனுவுகள்மேல் வெகுதயவுசெய்து
தண்மையுள்ளதொழில் செய்யவேளை அதுபாரே [௨௩]

மரணவேளையில்வேர்பிடுங்கும்பலன்

௩௫ வேளைன்னமரணவேர் பிடுங்கவென்றால்
வெல்லுவதுஎதிரியுமோ வெல்லுவதும்இல்லை
தாளைஎன்றசத்துருவும் இல்லைஇல்லை
சண்டாளநேரமது செவிப்பதுவும்இல்லை
பாளைஎன்றவுறவுபொருள் உயிர்ச்சேதம்ஆகும்
பண்பானதுயரமது வெகுகொடுமைஆகும்
காளைஎன்றஎருமையின்மேல் ஏறும்ஈசன்
கடாக்ஷம்வைத்துப்பார்த்தாலும் திருப்பரிதுபாரே (௨௪)

பட்சிகளின்வலு அறிதல்

௩௬ அறிதாகுஉலகுதனில் சத்துருவும்இல்லை
அப்பனேபஞ்சபக்ஷி அறிந்தவர்கள்முன்னே
குறியானசிங்கத்தின் முன்னேநின்று
கூத்தாடுமோநரியும் குலாவுமோசொல்லு
தெறியான அஷ்டகன்ம சாஸ்திரங்கள்எல்லாம்
வெறும்பாண்டம்பக்ஷியுட சாஸ்திறந்தான் அப்பா

சரியானபடியென்று பதினொண்பேரும்
சகலருமேமெச்சினரோபக்ஷிஅதுபாரே, (௨௧)

பக்ஷிகளின் வலுஅறிதல்

௫௬௧ பட்சியென்றபஞ்சபட்சி வலுவைசொன்னால்
பகர்வதற்குஎன்னாலே முடியாதப்பா
கொச்சிஎன்றசத்துருநாள் வலுவோயில்லை
கொடுமையுள்ள நாள்அதிலேபக்ஷிபகைஆனால்
மெச்சிஎன்றசத்துருவை அழித்துப்போடும்
மேலானபட்சியெல்லாங் கூடிக்கொண்டு
அச்சிஎன்றமித்துருவும் இருந்தால்என்ன
அப்பனேபட்சிவலு இல்லைத்தானே (௨௨)

படுபட்சிவலு அறிதல்

௫௬௨ தானென்றபடுபட்சி நாளையிலே அப்பா
தனக்குவலு அற்றுவிடும் மித்துருவும்இல்லை
தேனென்றசெய்காரியம் தவக்கம்ஆகும்
ஜெயமாகமாட்டாது ஒருநாளும்தான்
கோனென்றபட்சிஅது கொடும்பாம்பில்சூரியன்
கொதித்துமனம்புண்ணாகி வாடுவதுபோலே
நானென்றஆணவங்கள் ஏதுவில்லாமல்
நமக்குவார்சத்துருநாள் கொடுமைஆமே (௨௩)

இதுவுமது

(௫௬௩ கொடுமையுடநாளையிலே பட்சியுடவலுவை
குறிப்பதுவும்வெகுகளவு வெருள்எளிதுபாரு
அடிமைஎன்றவந்தவர்க்கு இந்நாளில்
அநியாயக்கொடுமைகளை அநுசரிக்கவேண்டாம்
கெடுமதியும்கண்ணுக்குத் தோன்றுதுபாரு
கேடுவரும்போதுமதி கெட்டுவரும்முன்னே
கடுகளவும்பாவமதுமனதாரச்செய்தால்
கண்கெட்டுகுலநாசம் அற்றுவிடும்பாரே (௨௪)

சிஷ்னது சன்மார்க்கம் அறிதல்

௫௬௪ அற்றுவிடும்பட்சிவித்தை சொன்னாலும்தோஷம்
அப்பனேமனதறிந்து சொல்லவேணும்
கற்றுவிடுபணிரண்டு வருஷம்காத்தான்
கைபாகம்செய்முறைகள் கருசொல்லாதே
கொத்துவிடும்அவனுடைய குணத்தைதக்கண்டு
கூறுவாய்ஜாலத்தில்செல்லிவாயி

பற்றிவிம்மனைதத்தான் அறியாவிட்டால்
பழிகாரா யித்தொழிலைச்சொல்லொண்ணாதே (௨௫)

இதுவுமது

௫௧௫ ஒண்ணாதபட்சிவித்தை பொல்லாதப்பா
உத்தமனே அவன்செய்யுங்குணத்தைக்கண்டு
எண்ணாததொழில்செய்தால் பாவம்இல்லை
என்மகனே அவனுடைய குணத்தைப்பாரு
கண்ணாதேதொழிலை அங்கேசொல்விடாதே
காட்டாதேகருக்குருவும் கருமிக்கப்பா
விண்ணாதேஇடிவிழுந்து தலைதெறித்துப்போகும்
மேதினியில்அவன்குணத்தை கண்டித்தேனே (௨௬)

இதுவுமது

௫௧௬ தேனென்றபஞ்சபட்சி மூறையைத்தானும்
செய்யாதேஉலகிலுள்ள மூர்ந்தர்க்கையா
கானென்றகசடுள்ள மனிதர்க்கையா
காட்டாதேஉன்னுடைய கபாலம்போகும்
மானென்றமனதறிந்து சொல்லவேணும்
மகத்தானபாவங்கள் வந்துசூழும்
ஆனென்றஆணுவத்தை அடக்கினோர்க்கு
அதினுடையசூக்ஷத்தை அறிவிப்பாயே (௨௭)

எதிரியை மடக்கும்வகை

௫௧௭ அறிவிப்பாய்கன்னியுட நூல்சொல்லாதே
அப்பனேகருவை அங்கே வெளிவிடாதே
திருவித்தசக்கரத்தை வெளிவிள்ளாதே
நின்றும்அக்ஷரத்தை நினைவில்நினையாதே
மறுவித்தமூலிகையின் வகைக்காட்டாதே
வந்துநின்ற சத்துருமித்துரு சொல்லாதே
கருவித்தநேரமது காட்டொண்ணாது
காட்டினால் பிழைஆவான் கண்டுபாரே (௨௮)

இதுவுமது.

௫௧௮ பாரடாமூலிகைக்கு சாபம்நீக்கி
பண்மான கன்னிநூல் காப்புகட்டி
வாரடாசக்கரத்தை அதிலேவைத்து
வளமானஅட்சரத்தை மாறிப்போடு
சேரடாகருவை அங்கே அட்சரத்தில்வைத்
செலுத்தும்பார்எதிரிஉயிர்திரும்பாருதால்

ஆராடா அறிவார்கள் குருசூக்ஷந்தன்னை
அறிந்தவன் தான்சித்தனென்றே பெரும் ஆச்சே (௨௯)

சித்தன்பெருமை

௫௰௯ சித்தனென்றால்மனதடக்க மிருக்கவேணும்
ஜெகஜாலகூத்தறிந்து தெளியவேணும்
பத்தனென்றால்வாசியிலே காணவேணும்
பழியான இத்தொழிலை செய்தாயானால்
கர்த்தனெனும்சிவனுடைய சாபம்நின்று
கருவறுக்கும்இருபத்தோர் தலைமுறைக்கும்
வர்த்தனென்றால்தன் னுயிர்போல் மன்னுயிரைப்பார்த்து
வழுவாமல்குருபதத்தை மனதில்வையே- (௩௰)

தேவிபூசை

௬௰ வையப்பாசத்துருநாள் அறிந்துகொண்டு
வகையாகதேவியுட பூசைசெய்து
நொய்யப்பாசடலைசாம்பல் மேலேபூசி
ருத்திரன்போல்நிர்வாண ரூபங்கொண்டு
கொய்யப்பாகருவையிங்கே இலதையபோட்டு
குறித்தவன்தன்உடலிலே அட்சரத்தைவைத்து
செய்யப்பாகோடிவஸ்திரம் உடுத்திக்கொண்டு
திடப்படுத்துஉன்மனது தெளிவும்ஆச்சே- (௩௧)

ருத்திரர்கோபம்

௬௧ ஆச்சப்பாஎதிரியுட பேரைச்சொல்லி
அப்பனேமூலிகைமுன் இருந்துகொண்டு
வாச்சப்பாவஸ்துடனே சுத்திவைத்து
வர்க்கவகைதூபங்கள் வளமாய்ச்செய்து
பாச்சப்பாஓர்மனதாய் இருந்துகொண்டு
பணிந்துதான்ருத்திரனை வணக்கம்செய்தால்
போச்சப்பாஎதிரியுட பேரும்பொச்சு
பொல்லாதருத்திரர்கோபம் செலுத்துவாரே- (௩௨)

சோதித்தறிதல்

௬௨ வாருமென்றுஉலகத்தில் உள்ளபேரை
மனஞ்சோதிகெடுநாள்மனம் அறியாமல்செய்தால்
பாருமென்றுபாவதுக் குள்ளாகவேணும்
பழிகாரர்இவர்கள்செய் திடுவார்தோஷம்
ஆறொன்றஅரவவிஷம்இதற்கொவ்வாது
ஆட்லாம்அஷ்டகன்மம் அறுபத்தினாலும்

ஊன்றபட்சியுட தொழிலைச்செய்தால்
ஒருவரால்திரும்பும்வகை அறியார்பாரே. (௩௩)

இதுவுமது

௫௨௩ அறியாமல்சித்தரெல்லாம் கூடிக்கொண்டு
அடைக்கின்றார்குகைதனிலே அதைநான்கண்டு
நெறியானசிஷியோர்க்கு வேணுமென்று
நின்றனடாவெகுகாலம் தவசில்நானும்
குறியானபட்சியுட சாஸ்திரத்தைவாங்கி
கொடுத்துவிட்டேன்கொங்கணவர் கொட்டினார்பார்
பரியாசமென்றுசொல்லி நினைப்போர்க்கெல்லாம்
பலியாதுபட்சிவித்தை பண்புள்ளோர்க்கே. (௩௪)

பலியாதவர் அடையுங்குணம்

௫௨௪ பலியாதுமனஒருமை கொண்டோன் ஆகில்
பலிக்கும்அடாதக்ஷணத்தில் மறியில்லாட்டால்
குலியாதுவினை அறுத்த பெரியோர்தன்னை
குலமதிலேகுருவென்றுப்பணியாதுக்கும்
பழியாசைதன்னினம்போல் போற்றாதார்க்கும்
மன்னுயிரைத்தன்னுயிர்போல் வணங்காதார்க்கும்
கலியானகலியுகத்தில் சொல்லைமபுன்ன
கசடருக்கும்பலியாது கணேரும்பாரே. (௩௫)

பலிப்பவர்களின் பெருமை

௫௨௫ கண்டபோர்பலிப்பதுவே அருக்காறல்
கபடமதுதான்நீக்கி நேர்மனதுகொண்டு
வண்டுபோல்குருபதத்தைப் பணிந்தோர்க்கையா
மனதிலேஎவ்வளவேனும் கோபந்தள்ளி
தொண்டர்கள்உலகத்தில் வணக்கஞ்செய்து
தூற்புத்திபொருளாசை தள்ளினோர்க்கும்
சண்டாளன்என்றபேர் ஆகாதப்பா
தன்மையுள்ளபுருஷருக்கு பலிக்கும்பாரே. (௩௬)

இதுவுமது

௫௨௬ பாரடாரோமரிஷி சொன்னவாக்கியம்
பழுதொருநாள்வாராது பற்றிப்பாரு
தேரடாசாஸ்திரத்தின் உண்மைகண்டு
தெளிவாகசொன்னதல்லால் மற்றோர்க்கில்லை
ஆரடாஅறிவார்கள் சூக்ஷந்தன்னை
அறிவதுதான்குருவாக்கால் அறியவேணும்

கோரடாவகையாகக் கொட்டினேன்பார்
கொடுத்துவிடாய்சாஸ்திரத்தை அவர்குணத்தைக்கேளே (௬௭)

மாரணம்

௫௨௭ கேளடாஎதிரியுமே நடந்தபின்பு
கீழ்நோக்கித்தான்எடுத்து தேவிமுன்பு
வாளடாஅக்ஷரந்தான் ஆயிரத்தெட்டோது
வளமாகஅதைஎடுத்து பானஞ்சென்று
நாளடாதினமரணம் வேலைபார்த்து
நசியென்றதலைதெற்காய் நாரணியையோது
பாழடாபோகாது அவனுயிரும்போகும்
பரமனுடகிருபையினூற் பலிக்கும்பாரே (௬௮)

இதுவுமது

௫௨௮ பலிக்குமென்று இத்தொழிலைச் செய்தால்பாவம்
பகைவந்தால் மனம்பொருத்து கோபம்தள்ளி
வலிக்குமென்று தன்னுயிர்போல் மன்னுயிரைப்பார்த்து
மனம்புத்தி ஆங்காரம் மனதடக்கஞ்செய்து
கெலிக்குமென்றுஉன்மனது தள்ளாவிட்டால்
கேளடாநடைஉறக்கம் வேலைபார்த்து
சலிக்கவேஎதிரியத்கான் படுக்கப்போடு
சண்டாளபிரமஹத்தி வறைக்கும்பாரே (௬௯)

இதுவுமது

௫௨௯ பாரேநீபேச்சிலைக்கி காப்புகட்டி
பண்பானகருத்தொட்டி அக்ஷரங்களோதி
நேரேநீநாள்பார்த்து வேலைகண்டு
ஜெயந்தரவேணுமென்று குருவைப்போற்றி
கோரேநீஓர்மணதாம் உருவைப்பார்த்து
கொடுமையுள்ளசத்துருவால் வேணாவாங்கி
தேரேநீசுடலைஎன்ற சாம்பல்மேலே
தெளித்திடுவாய்கொள்ளிதனை அதின்மேல்வையே (௭0)

இதுவுமது

௫௩0 வைத்தபின்பு அதின்மேலே சாம்பல்போட்டு
வளமாகதேவிமுன்னே வைத்துப்போற்றி
நைத்திடுவான் அதைஎடுத்துகாளிகோஷ்டம்
நன்றானஐயனுட ஆலயத்தில்வைக்க
மொய்த்திடுவாய்முச்சந்தி பாதைபார்த்து
முனையானநசிவேலை நால்வேலையொன்றில்

வைத்திடுவாய் பிரமலபி உள்ளமட்டும்
வாட்டமடாச்சாகாத பிணந்தான்பாரோ (௪௧)

தன்னையடையும் பீடைவிலக்க

௫௫௧ பாரடாஉன்னிடத்தில் கருமபீடை
படராமல்பக்ஷமுடனே துமீக்கொன்று
கோரடாதேவியைத்தான் தொழுதுபோற்றி
கொடுமைஎன்றபாவங்கள் அணுகாதுபாரு
வாரடாமுகத்தோனை பணிந்துகொண்டு
வர்க்கவகைகளைவைத்தியம் வளமாய்ச்செய்து
தோரடாபிராமணருக்கு தானஞ்செய்து
சிறுபிள்ளைகளுக்கு உபசாரஞ்செய்யே (௪௨)

இதுவுமது

௫௫௨ செய்திடுவாய்உன்மனதில்பீடை அணுகாது
திடமானபட்சி அக்ஷரத்தைஓது
நைந்திடும்பார் அவனுயிரும் ஈள்குறையுமட்டும்
நன்றல்லவெகுபாவம் கொடுமைஅதுமெத்த
கொய்திடும்பார் இத்தொழிலே உலகத்தோர்க்கு
நோக்காதமனதறிந்து நுணுக்கம்செய்யாதே
வைதிடுவார்உலகத்தோர் குருத்துரோகிஎன்று
வழுத்தாமல்பிறஜனங்கள்நல்லவனென்றே (௪௩)

நற்புத்தி

௫௫௩ நன்றல்லோஉலகத்தார் சொல்லவேணும்
எளியவன்போல்நாட்டிலுள்ளோர் அறியவேணும்
நன்றல்லஇத்தொழிலே கண்டபேர்கள்
நவில்குவார்பாவபுண்ணியம் என்றுசொல்லி
தொண்டுசெய்தசீஷனுக்கு சொல்லிடாதே
சொல்லுவதுசூக்ஷமாய் சொல்லிவைநீ
பண்டுதான்வெகுகாலம் காத்தபேர்க்கு
பழக்கத்தில்அவன்மனதை பார்த்துசொல்லே (௪௪)

இதுவுமது

௫௫௪ சொல்லுவதுமைத்ததெல்லாம் சொல்லிவைநீ
சொல்லாதேகன்னியுட நூல்சொல்லாதே
வெல்லுவதுஅக்ஷரந்தான் வெளிவிடாதே
விரோதிஎன்றகருவை அங்கே வெளிகாட்டாதே
கொல்லுவதுபச்சிலையின் குறிசொல்லாதே
கொடுமையுள்ளநேரமது குணங்காட்டாதே

செல்லுமதுமற்றதெல்லாம் சொல்லிவைநீ
சண்டாளர்மனதறிந்து சூக்ஷம்சொல்லே- (௪௫)

இதுவுமது

௫௩௫ சூக்ஷமென்றபஞ்சபக்ஷி தொழிலைத்தானும்
சொல்லாதேஉலகிலுள்ள மாந்தர்க்கையா
ஆட்சியென்றமனோன்மணியாள் சாபமின்று
அவன்குலத்தையழிந்திடும்பார் சொன்னதோஷம்
காட்சியென்றஉலகத்தில் நடக்குங்காட்சி
கண்டுமனந்தெளிவதற்கு சொன்னேன்சூக்ஷம்
பாட்சியென்றகன்மவினைக் காளாகாதே
பழிகாரமனதடக்கி அறிவில்நில்லே- (௪௬)

இதுவுமது

௫௩௬ அறிதானசாஸ்திரத்தை உலகிலுள்ளோர்வந்
தடுத்தாலும்அவர்குணத்தை அறிந்துபார்த்து
குறியானகுணங்கள்எல்லாம் மறைந்துவைத்து
கூறுவாய்வெகுகாலம் குறிசொல்லாதே
பரியானஈஸ்வரியாள் சாபம்வந்து
பலிக்குமடாஒருவருந் தாங்கொணாது
நரிதானநாய்ஜெனன மெடுத்துஅலையாதே
நல்லோர்கள்மனதறிந்து கூறுவாயே (௪௭)

இதுவுமது

௫௩௭ கூறுவாய்கலியுகத்தில் பழிக்கஞ்சார்கள்
கொடுமையென்றதொழிலென்று நினைந்திடார்கள்
சாருவார்அவர்வயறு பிழைக்கவேண்டி
சண்டாளதத்துவங்கள் பேசிக்கொண்டு
மீருவார்கற்றோரை பணிந்துகேட்பான்
வெகுளியால்நூல்முறையை செல்லிடாதே
ஆருவாய்அவர்குணத்தை அறிந்துநீயும்
அப்பவல்லோபட்சியுட சுருக்கச்சொல்லே. (௪௮)

மரணமூல கன்னிநூல்

௫௩௮ சுருக்கமென்றமூலிகைமுன் னிருந்துகொண்டு
சொல்லிவிடுசாபத்தை நிவர்த்திசெய்து
வருக்கமென்றதலைச்சுழுட நூலைவாங்கி
வழுவாமல்மித்துருவின் முகத்தைநோக்கி
நெருக்கமென்றசத்துருவை விரல்படாமல்
நினைவாகக்காப்பிட்டுகெஸ்து சத்திநூபக்கட்டி.

உருவினுடச்சக்கரத்தை முன்புவைத்து
முனையாகக்குறித்தபட்சி எழுத்தைவிட்டுஓதே [௬௧]

இதுவுமது

௫௬௯ ஓதியேகுறித்தயிடம் பார்த்துக்கொண்டு
ஓதுவாய்பட்சியுட கருவைத்தொட்டு
சோதியாய்நின்றதொரு வாலைபூசை
சூட்டியேகுறித்திடத்தில் முள்கொண்டுகுத்து
போதவர்கள்வாதனைதான் மெத்தஉண்டுமகனே
புகலக்கேள்வருத்தமிக்க வேணுமென்றால்
மோதியேகுறித்திடத்தை யிளந்துபோடு
மோசம்வரும்அந்திடத்தில் மோசந்தானே (௫௰)

இதுவுமது

௫௭௰ மோசமடாவெகுமோசம் மறணமூலி
மூலிகைமூன்றினிருந்து கொண்டு தூபம்தாக்கி
பாசமடாகன்னிநூல் காப்புகட்டி
பகையானபட்சியுட சக்கரத்தைவைத்து
தோஷமடாஅக்ஷரத்தை மேல்நோக்கிஓது
சொல்லொண்ணாக்கருத்தொட்டு நேரம்பார்த்து
நேசமடாமித்துருவை சேர்த்துக்கொண்டு
நிர்வாணரூபமதாய் நின்றுவேளைவாங்கே (௫௧)

இதுவுமது

௫௭௧ வாங்கியேஎதிரியுமே கடந்தால்நன்று
மக்களேஇல்லாவிட்டால்வலதுகால்மண்ணை
ஓங்கியேவேர்மண்ணும் கூடச்சேர்த்து
உத்தமனேமயானத்தில் வைத்துக்கொண்டு
தாங்கியதோர்தேவிக்கு பூசைசெய்து
சனியென்றபச்சிலையை சுட்டாயானால்
பாங்கியேசுட்டதொரு ஜாமந்தன்னில்
பழுதாகும்எதிரிஉடல் பாவம்ஆச்சே. (௫௨)

இரக்கம் கொள்ளல்

௫௭௨ பாவமென்றுஉன்மனது நினைத்தானால்
படுக்கவேபோடுகொஞ்சம் நாளைக்கப்பா
கோபமென்றகொடுமையைத்தான் நினைக்கொண்ணாது
கொல்லுவதுவெகுபாவம் கொடுமைஆமே
சாவதுதான்திண்ணமென்று உயிர்வதைசெய்யே
சண்டாளர்தன்னுயிர்போல் மன்னுயினைப்பாரு

போவதுதான்பச்சிலையைப் புதைத்துப்போட்டால்
போகுமேஉயிர்குறைந்து போகும்பாரே (௫௩)

இதுவுமது.

௫௪௩ போகுமேஉயினாளைதை செய்தாயானால்
பொல்லாதகன்மவினை சூழும்சூழும்
வேகுமடாஉன்சடலம் வெள்ளிடிதான்வீழும்
வீணனபேர்களுக்கு தொழில்சொல்லாதே
ஆகுமடாமனோன்மணியாள் சாபந்தானும்
அப்பனேபட்சியுட தொழிலைப்பார்த்து
ஏகுமடாமனதடக்கம் செய்துகொண்டு
என்மகனேரோமனுட நூல்பலிக்கும்பாரு

இதுவுமது.

௫௪௪ பலிக்குமடாசித்தருட சாபம்தின்று
பகராதேஉமையவள்மேல் ஆணைஆணை
செலிக்கும்அப்பாபட்சிவித்தைக் கருக்குருவும்கண்டால்
கேசரத்தில்பரக்கும்வித்தை இதற்கொவ்வாது
வலிக்கும்அப்பாபுண்ணைநிலேகாகம்குத்த
வருத்தம்ரொம்ப அதுபோல பக்ஷிவித்தைஅப்பா
சலிக்கும்அப்பாசீஷருட மனதறிந்துசொல்லு
சண்டாளனென்றுக்கால் சொல்லொண்ணாதே (௫௫)

இதுவுமது

௫௪௫ சொல்லாதேபக்ஷியுட சூக்ஷம்தன்னை
சொல்லிவிட்டால்வெகுகொடுமை பாவம்ரொம்ப
வல்லாண்மைஉள்ளவர்கள் உலகில்உண்டு
வந்தடுத்துஉன்மனதை மயக்கம்செய்வார்
பொல்லாதகருமிகளை மனச்சோதித்து
புத்தியுள்ளசீஷர்மனம் அறிந்தாலையா
சொல்லாதேஎன்றுசொல்லி பரவசங்கள்வாங்கி
கூறுவாய்பட்சியுட சூக்ஷந்தானே. (௫௬)

மூலிகைப்படலம்-முற்றிற்று



## ஞானசூக்ஷ்மப்படலம்

௫௪௬ தானென்றகன்னிநூல்தீக்ஷைசன் ஆகும்
சண்டாளகருவல்லோ இனங்காள் ஆகும்

தேனென்றசக்கரங்கள் உடலதாகும்
திறமானஅக்ஷரமும் காரணமாய்முடியும்
வானென்றமூலிகையை பிடுங்கொண்ணாது
மக்களேமற்றதெல்லாம் செய்துபாராய்
ஏனென்றுபேசுமடாமித்துருஉன் செயலால்துக்கே
என்மகனேசேர்ந்துபோனால் பக்ஷிவித்தைபலியாதே (க)

பக்ஷிவித்தை பலிப்பவர்களின் குணம்

௫௪௭ பட்சிவித்தைபலிப்பவர்தன் குணத்தைக்கேளு
பார்தனிலேபொய்சொல்லான் குருவார்த்தைமறவான்
கொச்சியென்றகோபகுணம் மனதில்வையான்
கொடுமைஉள்ளசினமில்லான் வஞ்சகங்கள்பேசான்
மெச்சிஎன்றஎவ்வுயிர்க்கும் இரங்குவானும்
மேதினியில்வெகுஜெனங்கள் நல்லோனென்பார்
பட்சிவித்தைபலியாமல் போறதில்லை
பாருலகில்அரிதான வித்தைதானே (உ)

இதுவுமது

வித்தையிலேஅதிகவித்தை பட்சிவித்தை
மேலானசித்தர்களும் மறைத்துவைத்தார்
கொத்தாகநான்வெளியாய்ப் புலம்பிவைத்தேன்
குருபதத்தைப்பணிந்தோர்க்கு பலிக்கும்பாரு
சத்தானஎரும்புகடை யானைத்தலைமுழுதும்
தானவனாய்நின்ற பட்சிவித்தைஅப்பா
மற்றதெல்லாம்பால்போலே ஆகும்சாஸ்திரம்
மணியென்றபஞ்சபட்சி செய்யும்ஆச்சே (௩)

இதுவுமது

௫௪௯ செய்யென்றசாஸ்திரத்தை ரோமன்நன்றாய்
நிக்ஷயமாய்குருபதத்தை பணிந்துபோற்றி
மெய்யென்றவாசியிலே அறியச்சொன்னேன்
மேலானதொழில்களுக்கு இதுவேவேணும்
பொய்யென்றுநினைத்தவர்க்கு பலிதம்ஆகா
புத்தியில்லாபாவிகள் இதைப்பாராவிட்டால்
கையென்றகையதுவும் ஆத்துமாவை
கடாட்சித்தகதைஅதுபோல் ஆகுந்தானே [௪]

இதுவுமது

௫௫௦ ஆகுமேபட்சியுட சாஸ்திரத்தைப்பார்த்து
அப்பனேபெரியோரைப்பணிந்துபோற்றி

கோறுமே அவர்குணம்போல் நடத்திஞக்கால்
கொண்டுசெல்லும் வெகுகாலம்வாழலாம்பார்
காருமேவேனை யொருசாஸ்திரத்தைப்பார்த்து
கலக்குவதுமேய் அல்லது தெளிவதுவும்இல்லை
பாருமேபட்சியுட சாஸ்திரந்தான்
பண்பானபடிஎன்று பணிந்துபாரே (ரு)

இதுவுமது

ருருக பணிந்துபார்மைத்தொரு சாஸ்திரம்எல்லாம்வெரும்
பாண்டமே அல்லாமல்வழியோ இல்லை
துணிந்துபார்பட்சியிலே எவ்வளவேணும்
சொல்குறைச்சல் வாராதுபழுதொன்றில்லை
கணிந்துயர் அதிஞவுடைய குருசுந்தன்னை
கண்டவர்கள்மனிதரொன்று சொல்லுண்ணாது
தணிந்துபார் அவர்பதத்தை பணிந்துபோற்றி
தண்மையுள்ளபொருள்எல்லாம் அறிந்துகொள்ளே (சா)

இதுவுமது

ருருஉ அறிந்துகொண்டு உலகமதில்தலிந்துபேசி
அப்பனேகற்றோறை தொண்டுபண்ணி
தெரிந்துகொண்டுபூமிதன்னில் நடக்கும்காட்சி
சிஷ...ாபோல்வெகுவணக்கம் செய்துபோற்றி
செரிந்துகொண்டபாபதுபோல் உலகவாழ்க்கை
துன்பமதில் அணுகாமல் திருநீற்றுகழிச்சிபோல
வரிந்துகொண்டு ஞானத்தின்வண்மைகண்டு
மக்களேகாயசித்தி வணக்கஞ்செய்யே. (எ)

இதுவுமது,

ருருங செய்திடுவாய் ஞானசித்தி யோகசித்தி
சொல்லுவதுசிவயோகி பரயோகி
வைதிடும்பார்உலகத்தில்வாழ்க்கைபோக்கி
மக்களேமனுக்கள்எல்லாம் வணங்கஆச்சு
செய்திடும்பார்உலகத்தில் உள்ளபேர்கள்
திசையாளும்மன்னர்எல்லாம் உன்தெரிசனத்தைக்காண
மொய்திடும்பார் அவர்களிட உறவெண்ணாதே
மொய்குழலாள் வாலையுடஉறவுகண்டே (அ

இதுவுமது

ருருச நானென்றபட்சியுட சாஸ்திரத்தை அப்பா
நலமாகஉலகத்தில் வணக்கஞ்செய்தால்

உண்டென்றதொழிலை அங்கேபிரிவிப்பார்கள்
உத்தமனேமனதறிந்து உரைக்கவேணும்
கண்டர்யென்றபேர்க்கெல்லாம் உரைத்தாயானால்
கழுதையென்ற ஜெனன மறுபிறக்கல்ஆகும்
வண்டென்றவாலைமேல் ஆணை ஆணை
மக்களேசாஸ்திரத்தின் வகைசொல்லாதே (௯)

இதுவுமது

௫௫௫ சொல்லாதேஉலகிலுள்ள மாந்தர்க்கையா
திரமானகாயசித்தி செய்துகொண்டால்
பொல்லாதபவயோகி ஞானயோகி
புகழ்பெற்றஜடலத்தை அறியாயோகி
இல்லாதவாசியைத்தான் நிறுத்தும்யோகி
நிகரொருவரில்லையென்றே நினைக்கும்யோகி
கொள்ளாதஉடலுயிரை நிறுத்தினோர்க்கு
கூறுவாய்பாவிகளை குறித்துத்தள்ளே (௰)

இதுவுமது

௫௫௬ தள்ளுவநுசிஷ்டருட மனதைக்கண்டு
நயங்காமல் ஓர்மனதாய்நிற்பாறாகில்
உள்ளபொருள்உள்ளதெல்லாம் உனக்கேசொன்னேன்
உரைத்திட்டேன்உமைஆணை உண்மைஉண்மை
தெள்ளுமணிபஞ்சபட்சி வித்தைஅப்பா
ஜெகத்திலேஒருவருக்கும் சொல்லவேண்டாம்
தள்ளிவிடுவாலையுட சாபந்தான்வந்து
தலைதெறித்துபோகும்என்று மனதில்எண்ணே (௰௧)

இதுவுமது

௫௫௭ மனதில்எண்ணிசத்தியமாய் இருந்தாயானால்
வாக்கினன்சொன்னதெல்லாம்பலிக்கும்பாரு
கனிவுகொண்டுசாஸ்திரத்தில் வினையம்வைத்து
கைப்பாகம்செய்பாகம் குருவாக்காய்அறிந்து
தனமென்றபொருள்கோடி ஈந்தாலுந்தான்
தக்கனவேஆக்கினையாம்தோஷம்தோஷம்
தணிவுகொண்டுஉலகத்தில் வணக்கம்செய்து
தனித்திருந்துஅறிவதுதான் பெரிதாம்பாரோ (௰௨)

இதுவுமது

௫௫௮ பெரிதானபஞ்சபட்சி சாஸ்திரத்தை
பேருலகில்சொன்னதனால் வருவதேது

அரிதானசாஸ்திரத்தை வெளியிடாதே
அப்பனேபதினெண்பேர் சாபந்தானும்
குறியாகவந்துவிடும் சொன்னேன்அப்பா
குருவானசாஸ்திரத்தைக் கொடுக்கொண்ணாது
தெரியாதுஇதனுடைய சாஸ்திரந்தானும்
செய்யவில்லையான்வெளியாய்செப்பினேனே (௰௩)

இதுவுமது

௫௩௪ செப்பினதோர்சாஸ்திரத்தை உலகமீதில்
ஜெடமறியாமாந்தருக்கு சொன்னாயானால்
தப்பில்லைபதினெண்பேர் சாபந்தானும்
தன்குலத்தைநாசமது செய்யும்பாரு
கொப்புதனின்குரித்தாவிளை யாடும்சென்மம்
குறங்கதுபோல்ஆருமப்பா சொன்னேன்யானும்
இப்புவியில்வாலையுட சாபம்அப்பா
ஈடேவதொருபோதும் இல்லைத்தானே (௰௪)

இதுவுமது

௫௩௫ இல்லைஎன்றுசொல்லதுவும் உண்மைஉண்மை
என்மகனேசாஸ்திரத்தை கொடுககொண்ணாது
தொல்லைவரும்உமையாள்மேல் ஆணைஆணை
சொன்னதொருவார்த்தைதனை தட்டவேண்டாம்
சள்ளையென்றதாய்தந்தைமேல் ஆணைஆணை
தனக்குவந்தபெண்டுபிள்ளை தன்மேல்ஆணை
வெல்லுவதுஉன்குலத்தை காக்குந்தெய்வம்
மேலாணைசொல்லாதே தொழில்பொல்லாதே (௰௫)

இதுவுமது.

௫௩௬ தொழில்செய்யும்ஜோசியங்கள் சொல்லும்போதும்
தொடுத்திடுவாய்விநாயகனை பூசைபண்ணி
கழிவுசொல்லிதள்ளாதே பாவம்பாவம்
கண்டபடிகுறிகுணங்கள் நன்றாய்ச்சொல்லு
வழிசொல்லிஉறுதி யாகக்கொண்டால்
வந்ததோர்பீடையெல்லாம் விலகிப்போகும்
தெளிவுசொல்லிநன்மைதின்மை திரமாய்ச்சொல்லி
செய்திடுவாய்வாலையுட பூசைதானே (௰௬)

இதுவுமது

௫௩௭ பூசைதனைமறவாதே ஞானமறவாதே
பொல்லாதபஞ்சகர்த்தாள் அஞ்சுபேரை

நிசம்வைத்துமனதுருதி யாகக்கொண்டு
நிலைத்ததொருசத்திசிவம் பூசைபண்ணி
பாசம்வைத்துஉன்னுயிர்க்கு பழிதேடாதே
பழிகாரசிவயோகம் பாதைகாணும்
ஆசைவைத்துப்பெண்மேலே மோகங்கொண்ட
அன்புஅதுபோலிருந்தால் பலிக்கும்பாரே. (௰௭)

இதுவுமது

௫௬௩ பலிக்குமடாபட்சியிலே தொழிலைச்செய்தால்
பழிசெய்யாத்தானிருந்தால் நிவர்த்திகேளு
கெலிக்குமடாயக்கியங்கள் செய்யவேணும்
கேள்மகனேபச்சிலையும் தழையவேணும்
சொலிக்குமடாவாலையுட பூசைவேணும்
சொர்ணமதுவஸ்திரங்கள் தானம்வேணும்
அளிக்குமடாமனமகிழ கொடுக்கவேணும்
அப்போவல்லோகன்மம்அங்கே தொலையும்பாரே (௰௮)

இதுவுமது

௫௬௪ தொலையுமேநிலவுசெய்ய மனதுநொந்தால்
தொடுத்திடுங்கன்மம்அது தொலைக்கொண்ணாது
அலையுமேஉன்சடலம் அழிந்துபோகும்
அப்பனேஆராலே திரும்பக்கூடும்
வலையிலே அகப்பட்ட மானைப்போல
வளர்ந்திடுமேகன்மமென்ற பீடைதானும்
நிலையதுபோல்இருக்காமல் செலவுசெய்து
திருப்புவதுஅரிதான வித்தைதானே (௰௯)

இதுவுமது

௫௬௫ அரிதாகும்திருப்பதற்கு வெளியாய்ச்சொன்னேன்
அப்பனேதிருப்பினவன் அவனேசித்தன்
குறியானதேவியும் பூசைமறவாதே
கொடுமையுள்ளபச்சிலையும் தழையும்வேணும்
வழியானதருமமது செய்யவேணும்
மக்களேவினையம்வைத்து பார்க்கவேணும்
நெறியானநிலையறிந்து ஞானமார்க்கம்
நிலைக்குமடாபட்சியுட கருத்தோணும்பாரே (௨௰)

இதுவுமது

௫௬௬ தோணுமேஉலகிலுள்ள மாந்தர்க்கையா
தோணுவதுகோடியிலே ஒருவன்உண்டு

காணுமே கருக்குருவும் காணும்பாரு
கடினமடா அவன்மனது கலங்கும்போதில்
பேணுமே சாஸ்திரத்தைப் பேணார்பாரு
புல்லறிவுகொண்ட சென்மப்பெயர்மெத்த
நாணுமே வீணாகப்புலம்பிச் சொன்னேன்
கலமானசாஸ்திரந்தான் சொலிக்கும்பாரோ (௨௪)

இதுவுமது

௯௫ வெளிக்குவிடாய்சொன்ன தொருசாபமெல்லாம்
வீணாகப்போகாது அநுபவிக்கவேணும்
துலிக்குமடாஉன்குலமோ அழிந்துபோகும்
சொல்லாதபிடையது தொலையும்பாரோ
வழியானமனதுடனே கண்டுசொல்லு
வகையாகப்பாழ்நரகில் வீழாதேசொன்னேன்
களிவிடாய்தள்ளிவருசித்தி முத்திஉண்டு
கற்போலேநீயிருந்து சாதிப்பாயே (௨௫)

இதுவுமது

௯௬ சாதிப்பாய் அதினாலே மோக்ஷமுண்டு
தள்ளிவிடுகன்மிகளை சேர்க்கவேண்டாம்
சோதிப்பாய் அவன்மனதை நெடுநாட்கொண்டு
சொல்லாதகுருக்ஷமெல்லாம மறைத்துவைத்து
போதிப்பாய்ஞானமெல்லாம் பூண்டபின்பு
பொல்லாதபக்ஷிவித்தை சொல்லிவைநீ
ஆதிப்பாய்கருக்குருவும் வெளியாய்சொன்னேன்
அறிவதுதான்வெகுநினைவாய்பட்சிஅறிவதுவே (௨௬)

ஞானச்சருக்கப்படலம்முற்றிற்று



## கருமானச்சருக்கப்படலம்

இதுவுமது

௯௭ அறிவதுதான்முதல்விலக்கம் கன்னிநூலாம்
அப்பனே அண்டமொடு புளியுக்கூட்டி
தெரிவதுதான்தயிலம் அதுகருவும் ஆகும்
நிசமாகச்சொல்லிவைத்தேன் பாஷாணமைந்தும்

எரிவதுதான்ஐங்காதம் இதுவேஆகும்
என்னசொல்வேன்வெகுசுருக்கு இதுக்கோவ்வாது
முடிவதுதானொன்றுமில்லை எதிரிபேனைச்சொல்லி
முடிக்கிறல்அக்ஷரத்தைஎதிரிஉயிர்முடியும்பாரோ (௧)

இதுவுமது

௬௭௰ முடிவதுவேபச்சிலைக்கி சாபம்நீக்கி
முன்னையானஎதிரியென்று நினைத்துக்கொண்டு
சடுதியிலேசக்கரத்தை இதிலேதாக்கி
சண்டாளஅக்ஷரத்தை அதிலேமாறி
சுருதியென்றகன்னிநூலது காப்புக்கட்டி
சொல்லர்தஜங்காயக் கருவும்தொட்டு
பருதியென்றநேரமது அரிந்தும்க்காள்
பழிகாரசத்துருவை விலக்கிவேனைவாங்கே (௨)

இதுவுமது

௬௭௧ வாங்குவது திருவாணரூபங்கொண்டு
மக்களேவோர்அதுவை சுட்டிடாதே
ஏங்குவதுவேனைநீ புதைத்துப்போடு
என்மகனேபிர்மலபி தட்டும்பாரு
ஓங்குவதுவோர்அதுவை பிடிக்கொண்ணுது
உத்தமனேநினைத்திடத்தில் கருவைந்தொட்டு
பாங்குபெறமுள்கொண்டு குத்தும்போது
பழுதாகும்அந்திடத்தில் பழுதாம்பாரோ (௩)

இதுவுமது

௬௭௨ பழுதாகும்குறித்திடத்தைப் பிளந்துபோடு
பகைத்தஉயிர் பழுதாகுமஉயிரும்போச்சு
நமுகாதேஎதிரியுமோ இல்லைஇல்லை
காடாதேவெகுகொடுமை பாவம்மிக்க
அழுதாலும்தீராது ஒருவர் அதைக்கொண்ணுது
அப்பனேபச்சிலையை அறியவேணும்
தொழுதாலும்ஒருத்தரால் திருப்பொண்ணுது
தொடுகுறிபோல்சூக்ஷம் அதுசொன்னேன்பாரோ (௪)

இதுவுமது

௬௭௩ சொன்னரோசூரனை சம்மாரம்பண்ணி
சுப்ரமண்ணியர்க்கல்லோ சிவன்உபதேசித்தார்
விண்ணனசூரனை சம்மாரம்செய்து
வெகுகாலம்சென்றபின்பு குறுமுனிக்குபதேசித்தார்
கண்ணுனகும்பமுனி பதினெண்பேர்க்கும்
கலந்துஉறவாகியல்லோ உபதேசித்தார்

நன்றாகநான்வெளியாய்ப் பட்சிவித்தை
நாட்டினேன்உலகத்தில் நன்றாய்த்தானே (௫)

இதுவுமது

௱௭௪ நன்றென்றுஉலகமதில் சொன்னேன்சூக்ஷம்
நழுகாதேசத்தியமாய் எண்ணிக்கொண்டு
குன்றென்றகோபத்தால் கொடுமைவினையாதே
குலநாசம்பிறப்பரிது குலைக்கும்சென்மம்
வண்டென்றபட்சியல்லோ மதுவையுண்டு
வகையதுபோல்இதினுடைய சூக்ஷங்கண்டு
தொண்டென்றதொண்டர்கள்போல் உலகமீதில்
தோணாமல்வெகுவினைவாய் வாழ்வார்பாரே (௬)

இதுவுமது

௱௭௫ வாழ்வதுதான்கோபமது இருக்கொண்ணாது
மனதிலேவஞ்சகங்கள் பேசொண்ணாது
கோளதுவேஉலகமதில் சொல்லொண்ணாது
கொடுமையுள்ளவஞ்சரிடம் சேரொண்ணாது
மீளாததொழில்கொடுமை செய்யொண்ணாது
வெகுஜனங்கள்பாவியென்று நினைக்கொண்ணாது
ஆளுமேசத்தியமாய் இருந்துக்கொண்டால்
அப்பவல்லோபட்சிவித்தை பலிக்கும்பாரே (௭)

இதுவுமது

௱௭௬ பலிக்குமேகருக்குருவும் காணவேணும்
பழிகாரஅக்ஷரமும் பதியவேணும்
சொலிக்குமேஆசான்சொல் உறுதிவேணும்
சொன்னசொல்அணுவளவும் மறவாதிருக்கவேணும்
கெலிக்குமேஎத்தொழிலும் நினைத்ததெல்லாம்
கெடிகாரசீட்டுமுதல் இதர்கொவ்வாது
வலிக்குமேபட்சிவித்தை பொல்லாதப்பா
மகத்தானபாவிகட்கு சொல்லொண்ணாதே (௮)

இதுவுமது

௱௭௭ சொல்லொண்ணாவாழுஉண்டு வசியம்உண்டு
துயரமேஎவ்வளவேணும் தோணாதுபாரு
அள்ளொண்ணாஞானவிதி அமைக்கும்பாரு
ஆசைஎன்றபாவமது விலகிப்போகும்
துள்ளொண்ணாஉலகத்தில் நொடித்ததெல்லாம்
சொற்குறைச்சல்வாராது பலிக்கும்பாரு

கள்ளொண்ணுகபடமது அகத்தில்வைத்து
கற்றோர்க்குதொண்டுசெய்து கலந்துநில்லே (௯)

இதுவுமது

௱௭௮ நில்லென்றுசொல்வதுவே சத்தியம்சத்தியம்
நிலைக்குமடாநினைத்ததெல்லாம் சத்தியம்ஆகும்
சொல்லென்றசொல்பழுதே ஆகும்காலம்
தோணுதுபட்சிவித்தை பலிதம்இல்லை
கல்லென்றமனமுள்ளோர் காணும்வித்தை
கலந்துஉறவாடுவது வெகுளிபோல
சொல்லென்றசொல்லதுவும் ஆகாதுபாரு
தண்மையுள்ளபுருஷரைப்போல் சார்ந்துபேச்சே (௰)

இதுவுமது

௱௭௯ பேசினதால்வருவதென்ன குறைவதென்ன
பெருமைபெற்றபட்சியுட தொழில்சொல்லாதே
காசினியில்வாழ்வதுதான்பிரர்தன்கோஷ்டி
கலந்துஉறவாடாதே கலக்கந்தள்ளு
நேசம்வைத்துபேசிவிடுநிலை சொல்லாதே
நீபேசும்வார்த்தையது நிசமென்றெண்ணி
தோசிகளும்போய்விடுவார் நடத்தில்நில்லு
சொன்னதினால்பாவம்வந்து சூழும்தானே (௧௧)

இதுவுமது

௱௮௰ சூழுமேஇருபத்தோர் தலைமுறைக்கும்
சூழுவதுஒருவரால் திருப்பொண்ணாது
மாளுமேஅவன்குலமும் அற்றுப்போகும்
மக்களேசிவசிந்தை மறக்கொண்ணாது
காணுமேபக்ஷிகளின் கருவறிந்து
நலந்தீதும்அவரவர்தன் பேரும்கண்டு
வாழுமேஅக்ஷரம்சொல்வேன் பிரித்துத்தானே
மக்களேஜெகத்தோர்க்கு காட்டொண்ணாதே (௨௧)

இதுவுமது

௱௮௧ காட்டாவேஉலகிலுள்ள மாந்தர்க்கப்பா
காட்டினால்சாபமது வந்துசேரும்
பூட்டாதேஉன்குலமும் அழிந்துபோகும்
புதுமையுள்ளபட்சிவித்தை பொல்லாதப்பா
கீட்டினால்பஞ்சத்திலே நெருப்பைப்போலே
நீறிவிடும்உலகமெல்லாம் நிமிஷத்திற்றான்

கூட்டினார் அரன் திருமால் அயன்கணேசன்
துணைவரென்ற வேலவர்க்குச் சொல்லிதானே (௰௩

பிரதிவியின் தொழில்

௫௮௨ தானென்ற பிரிதிவிக்குத் தொழிலைச்செய்தால்
தயவான அப்பெழுத்தைப் பிரித்துமாறு
தானென்ற அப்பதுவை மண்ணுஉண்ணும்
தள்ளாத மற்றெழுத்தை சேர்க்கொண்ணாது
வானென்ற ஆகாச எழுத்தைக்கூட்டி
மாறிவிடுஞ் சூக்ஷமதை வழிசொல்லாதே
கோனென்ற சிவன்மேலே ஆணை ஆணை
கொடுமை அப்பா தொடுக்குறியை கூறொண்ணாதே (௰௪)

அப்புவியின் தொழில்

௫௮௩ கூறவொண்ணா அப்புக்குத் தொழிலைச்செய்தால்
குலைத்துவிடும் வாய்வெழுத்தைப் பிடித்துமாறு
நேரொண்ணா அக்கினியைச் சேர்த்துக்கொண்டு
நிலைக்குமே தண்ணீரும் நிமிஷம் அற்று
மாறவொண்ணா மற்றெழுத்தை மறந்துவிடு அப்பா
மகத்தான கூடழிந்து மறித்துப்போகும்
சேரவொண்ணா தேவியின்மேல் ஆணை ஆணை
ஜெகத்தோர்க்குச் சூக்ஷம் அது தெரியொண்ணாதே (௰௫)

தேவியின் தொழில்

௫௮௪ தெரியாத தேயுவுக்குத் தொழிலைச்செய்தால்
சீரான அப்பெழுத்தை திரமாய்ஓது
குறியான ஆகாச எழுத்தைச்சேர்த்து
கூட்டியே யொன்றிலொன்றாய் மாறும்போது
வரியான அக்கினியும் அமர்ந்துபோகும்
மக்களே அப்பதுவும் உண்டுபோகும்
செரியான தேவியின்மேல் ஆணை ஆணை
ஜெகத்தில்உள்ள மாந்தருக்கு செப்பொண்ணாதே (௰௬)

வாயுவின் தொழில்

௫௮௫ செப்பொண்ணா வாயுவுக்குத் தொழிலைச்செய்தால்
திடமான பிரிதிவியைப் பிடித்துமாறு
அப்பலோ அவ்வெழுத்தை கூடச்சேர்த்து
அநுசரித்தாய் வாயுவதும் அடங்கிப்போகும்
இப்புவியில் செப்பாதே மற்றெழுத்தைசேராதே
இதமான இத்தொழிலை வெளிக்காட்டாதே

கப்பில்லா அரசிவன்மேல் ஆணை ஆணை
தரணிதனில்குருகூடமதை தாண்விள்ளாதே. (௰எ)

ஆகாசத்தின் தொழில்

ரு௮௬ விள்ளாதே ஆகாச வெளிக்கிச்செய்தால்
விதமானபிரதிவியும் அப்புங்கூட்டி
தள்ளாதே அக்கினியும் வாய்வும்சேர்த்து
தப்பாமல்நாலெழுத்தும் பிடித்துஓதி
நில்லாதே ஆகாச வெளியில்தாக்கு
நிலைக்குமடா இத்தொழிலும் நிலைத்துபோச்சு
பொல்லாதசிவன்உமைமேல் ஆணை ஆணை
பூதலத்தில்செப்பாதே புகழ்ந்துபாரே. (௰அ)

வசியம்

ரு௮எ புகழ்ந்துபார்வசியமது செய்வீர் ஆகில்
புண்ணியனே ஆகாசம் வாய்வும்சேர்த்து
நிகழ்ந்துபார் அக்கினியும் சேர்த்துக்கொண்டு
நீ செய்யும்தொழிலை அங்கே நிலைத்துஓது
மகிழ்ந்துபோம்சகலமுமே வசியம்ஆகும்
மன்னர்முதல்தேவரையும் வணங்குவார்கள்
இகழ்ந்துபார் இத்தொழிலை வெளிவிடாதே
என்னதான்சொன்னாலும் இயம்பொண்ணாதே (௰௯)

இதுவுமது

ரு௮௮ இயம்புவாய் அவ்வெழுத்தை வசியம்பண்ண
என்மகனே அக்கினியைக் கூடச்சேரு
மயம்புவது அக்கினியை வசியம்பண்ண
மக்களேவாயுவெழுத்தை பிடித்துமாறு
தயம்புவது அப்பெழுத்தை வசியம்பண்ண
தண்மையுள்ளபிரதிவியைப் பிடித்துமாறு
சுயம்புவதுபிரதிவியை வசியம்பண்ண
சுத்தமுள்ள அக்கினியை ஓதிப்பாரே (௨௰)

இதுவுமது

ரு௮௯ ஓதுவதுபெரிதல்ல மனமொன்றாக
உண்மைகொண்டுஐம்புலனை நிறுத்திக்கொண்டு
தேறுவதுசெய்தொழிலும் மனம்போல்ஆகும்
திடமானபட்சிவித்தை வழிஇதப்பா
கூறுவதுஉலகிலுள்ள மாந்தர்க்கப்பா
குணங்குறியும்சததருமித்துருகாணவிட்டால்

மீறிவிடும் ஒருவரால் அடக்கொண்ணாது
மேலானமுனிவர் சொன்னவாக்குத்தானே (உக)

இதுவுமது.

௫௯௰ வாக்குமனம் ஒன்றாக நிறுத்தவேணும்
வழியானகுருவாக்கால் அறியவேணும்
ஏற்குவதுசத்தியமாய் நினைக்கவேணும்
என்மகனேசூக்ஷமதை அறியவேணும்
பாக்கியமாம்பழிபாவம் காணவேணும்
பண்பானபட்சிவித்தை பதியவேணும்
நோக்குவதுசிவன்பாதம் நோக்கவேணும்
நுண்மைஉள்ளசுருக்கத்தை சொன்னேன்பாரே (உஉ)

இதுவுமது

௫௯௧ சொன்னேனேபாவபுண்ணியம் அறியவேணும்
சூட்டாதக்கருமறைப்பை வெளியாய்ச்சொன்னேன்
கண்ணேகேள்கண்மணியே உலகம்பேயாம்
கருதாதஉலகத்தோர் பழிக்கஞ்சார்கள்
விண்ணானசாஸ்திரத்தைப் பதினெண்பேரும்
விளம்பாமல்உலகத்தில் மறைத்துவைத்தார்
தன்னாலேஎளியோர்க்கு வேணும்என்று
தண்மையாய்ச்சொல்லிவைத்தேன் அடக்கம்பண்ணே (உ௩)

இதுவுமது

௫௯௨ அடக்கமதுசெய்துகொண்டு அறிவாய்பாரு
அப்பனேதேவியுட சாபம்பொல்லாது
வெடக்கெடுத்தநாய்போலே உலகமீதில்
வீணருடன்பேசினால் வருவதென்ன
மடக்கொடியாள் ஆசையினால்மனம்வேறாகி
வஞ்சனைபொய்சூது கோபத்தைத்தள்ளு
தொடக்குறிகள் அறிவாலே அறிந்துபாரு
சொன்னதினால்பாவமவந்து சூழுந்தானே (உ௪)

இதுவுமது

௫௯௩ சூழுமேபாவபுண்ணியம் அறிந்துகொண்டு
சூக்ஷமென்றகருவையெல்லாம் அடக்கஞ்செய்து

வாழுமேஉலகத்தோ டொத்துவாழ்ந்து
வளமானமனங்கொண்டு பழக்கஞ்செய்து
கேளுமேஅக்கினியில் மனதைப்பூட்டி
கொண்டாடிஅடிபணிந்து தாயைப்போற்றி
நாளுமேதுதிசெய்து அக்கினியைப்போற்று
நலம்பெறுவாய்உலகத்தில் துயரம்போச்சே (௨௫)

சுப்பிரமணியர் தியானம்

௫௨௪ போச்சென்றுசுப்பிரமணியர் தியானங்கேளு
புகழாகஹங்கரீங் கென்றுசொல்லு
காச்சென்றுகங்கங் கென்றுஞ்சொல்லு
கனமானமரிங்கென்று ரிங்ரிங்கென்று
வாச்சென்றுபாலசுப்பிரமணியதேவா நமாவென்று
வாகாகநாலுநாள் லட்சமோது
நற்சுண்டல்வடைதோசை யப்பமோடு
நலமானதேனுடனே பால்பழமும்வையே (௨௬)

இதுவுமது-

௫௨௫ வையப்பாபுஷ்பமோடு புனுகுகெந்தம்
வளமானகஸ்தூரி பச்சைபூரம்வை
கையப்பாமண்டலந்தா னுபசாரஞ்செய்
கனமானகுகன் அவரும் வசியமாவார்
மெய்யப்பாசுப்பிரமணியர் தியானம்வேணும்
மேலானவைதியனுட தியானம்வேணும்
ஐயப்பாஇவைவிட்டால் பக்ஷியேது
அன்பானயோகம்விட்டால் வீணும்பாரோ (௨௭)

இதுவுமது.

௫௨௬ வீணப்பாவீணகப் புலம்புவார்கள்
வினையறியார்பொருளறியார் பட்டிமாடு
ஆணப்பாஆணுவத்தால் அழிந்துபோவார்
அப்பனேஅதின்சூக்ஷம் கண்டுகேளு
மாணப்பாபக்ஷிகள் தன்வலுவோமெத்த
மகத்தானபக்ஷிகளின் காலங்கண்டு
தானப்பாஒவ்வொன்றை தனித்துநோக்கி
தண்மையாயுரைத்திடுவாய் கொல்லத்தானே (௨௮)

எதிரியை வெல்வது

௫௯ கொள்ளவே எதிரிக்கி சத்துருவைக்கூட்டி
குணமாகச்செய்கிறவன் மித்துருவைச்சேர்த்து
அள்ளவே சத்துருவின் முகத்தைநோக்கி
அப்பனேசெய்தொழிலை முன்னேவைத்து
விள்ளவேதிருவாண ரூபங்கொண்டு
வீற்றிருந்துமந்திரத்தை ஓதும்போது
துள்ளவேயெடுத்துவிடும் யெதிரியில்லை
துருசாக அனுவளவும் நிக்ஷயமாய்ச்செய்யே. (௫௯)

பேதவியல்பு

௬௦ நிக்ஷயமாய்ஊனுக்குக் குள்ளனவான்
நிலத்ததோர் அரசுக்கு நெடியனவான்
பட்சமுள்ளநடைதனக்கு சமானமாவான்
பகரரியசித்திகளுக்கு மிகவுங்குள்ளன்
அட்சமாமரணத்துக் கூனென்று
அறிவதனுல்பட்சிகளின் தொழிலேக்கண்டு
எட்சமயம்பேர்களுமே தெளிவாய்க்காண
இயம்பினேன் அறுநூற்றில் இயல்பாம்ஊனே (௬௦)

இதுவுமது

௬௧ ஆமடா இன்னூலை பதனம்பண்ணு
அன்பானநல்லோர்கள் பதனஞ்செய்வார்
வாமடா இன்னூலைப் பெற்றுக்கொண்டு
வளமாகபூசைசெய்து பதனஞ்செய்து
காமடா முக்காலைச் சொல்லும்தோறும்
கனமானனுந்நூலை கைவிடாதே
நாமடா கருத்துன்னித் தெளிந்துபாரு
நலமானகருமானச் சுருக்கம்முற்றே (௬௧)

வியாதி அறியும்படி

௬௨ ஊனுக்குசிறகில்நோயாம் உரக்கத்தில்தலைகழுத்து
பேணியஅரசுநெஞ்சில் பிணியுண்டாம்நடக்ககாலில்
காணுமேசாவுதன்னில் அனாபினில்காகங்காணும்
ஆணுவங்கொள்ளாநீதான் அறிந்திடும்உண்மைதானே ௬௨

பேதப்பட்சி-வெண்பா

௲௱௯ வல்லூறுகாணவந்தான் வளர்ஆந்தைபொய்யுரைப்பான்
செல்லாகுங்காகம்திருட வந்தான்-பொல்லாத
கோழியேபோர்க்குவந்தான் கோலமயில்கலகம்
ஆழியாய்பேதம்அறி (௲௲)

மச்சம் அறியும்படி

௲௱௨ வல்லூறறைமுதுகுவளத ஆந்தைஉச்சிகைக்கீழ்
பொல்லாதகாகம்புயமார்பு-நல்லாய்கேள்
கோழிமுகங்கண்டம்கோதை தொடைமுழங்கால்
பாழிலாமச்சமெனப்பார்

இதுவுமது

௲௱௲ வாழ்வதுதான்ரோமரிஷி சொன்னவாக்கியம்
மறவாதஒருநாளும் மனதுருதிகொண்டு
ஆள்வதுவான்சத்தியமாய் எண்ணிக்கொண்டு
அப்பனேசாஸ்திரத்தைப் பழக்கம்பண்ணி
தாழ்வதுதான்வாராது சகலமுமேசித்தி
தன்மையென்றதேவியுமே அக்கினியாகும்
பாழ்வதுதான்போகாது பட்சிவித்தைஅப்பா
பஞ்சபட்சிஅறுநூறும் பலிக்குமுற்றே (௲௫)

தருமானச்சருக்கப்படலம் முற்றிற்று



ரோமமஹாரிஷியார்

அருளிச்செய்த



# விநாடிபஞ்சபட்சி

ஆ பாடல் ௲௱௲

முற்றிற்று.



உ

கடவுள் துணை

# பஞ்சபட்சிபலதிரட்டு

## முகவுரை

உன்னிஒருவன் உரைத்தமுதல்எழுத்தைப்
பன்னிப்பரவையாய்ப்பாவித்து-முன்னி
உதயதிசைப்பட்சி உண்மைஉறைக்கக்
கதைமாவியப்பொருளே சாப்பு (க)

### நூல்முதலியப் பொருள்

பூமேவுநான்முகத்துப் புங்கவன்சிஷ்டிப்பெவையும்
மாமேவுபட்சிஐந்தாய்வாழுமே-சீர்மேவும்
வல்லூறுபேர்ஆந்தை வண்காகம்கோழிமயில்
எல்லாப்பிறப்பும்இது (உ)

ஒன்றுதிசைக்குருவி ஒன்றுவரும்ஓர்தூத
நின்றநிலைஆருடத்தின்நேரும்-நன்றி
வழுவாதுவந்தாய்ந்து வல்லவர்கள்சொன்ன
முழுவாகடத்தின் முறை (ங)

மொழிக்குமுதல்எழுத்தே மூன்உதிக்கும்ஆங்கே
பழிக்கும்அவன்தன்நிலையும்பார்த்து-வழிப்பெறவே
பேரால்வருவனவும் பேதம்அறிந்துணர்வும்
றாராய்ந்துசொல்வ தறி (ச)

### பூருவபட்சத்தின் அட்சரப்பட்சி

அம்முதல்நான்கும்வல்லூறிம் முதல்இரண்டாந்தை
உம்முதல்இரண்டும்காகம்ஊண்கோழி-எம்முதல்ஒண்
டுற்றமயில்ஒம்முதல்ஒண்டும்குறில்ஆண்பெண்நெடிதாம்
ஒற்றுய்தம்பேடென் றுணர் (ரு)

### அமரபட்சத்தின் அட்சரப்பட்சி

இம்முதல்இரண்டும்வல்லூறும் முதல்இரண்டாந்தை
ஒம்முதல்இரண்டும்உயர்காகம்-அம்முதல்நான்
காகும்இவைகோழிஆனமயில்எம்முதல்ஒண்
டாகும்அமரபக்கமே (சு)

✽ ஈண்டுவெண்பா முதலியசெய்யுட்களிற் பிரித்திருப்பதுசெய்யசொல்லாகவேயன்றிச்சீரும்தளையுமாகப்பிரித்ததன்றும்

பூருவபட்சம் பகல்வாரம் ஏ - ற்கும் ஊண்பட்சி

செவ்வாய் அருக்கன்வல்லூறாண் சிறந்ததிங்கள்புதன் ஆந்தை
கவ்வாய்வியாழங்காரண்டம் கருதும்வெள்ளிகோழி அதாம்
மவ்வார்சனியின்மயில்உண்ணும் மானேபூர்வப்பகல்அதனில்
இவ்வாறின்நூல்குறுமுனிவர் இயம்பலுற்றார்உலகுக்கே (எ)

அமரபக்ஷம் பகல்வாரம் - ஏ-ற்கும் ஊண்பட்சி

திங்கள்சனிமயில்ஆம் சேய்அருக்கன்கோழி அதாம்
பொங்குபுதன்காகம்போஜனம்ஆம்-மங்கையே
அந்தணனுக்காந்தை அணிபுகர்க்குவல்லூறு
சந்ததமும்புற்பகற்கே சாற்று (அ)

பூருவபட்சம்இரவுவாரம்-ஏ-ற்கும் ஊண்பட்சி

ஞாயிறுசெவ்வாய்காரண்டம் நல்லபுந்திமதிகோழி
மாயப்பெண்ணேமயில்ஆகும் வளரும்வெள்ளிவல்லூறும்
ஓயாஆந்தைசனிஉண்ணும் உயரும்கங்குல்உணர்க்கென்ன
ஆயும்வேதக்குறுமுனிவர் அருளால்அறைந்தஅரும்பொருளே (கூ)

அமரபட்சம் இரவுவாரம்-ஏ-ற்கும்ஊண்பட்சி

மந்தன்சோமன்கோழியின்ஊண் மானேவெள்ளிமயில்உண்ணும்
புந்திஆந்தைபோஜனம்ஆம் பொன்னிற்காகம்இரைஅருந்தும்
சிந்தைமகிழ்ந்தசேய்இரவி தினத்தில்வல்லூறமுதுசெய்யும்
அந்தித்தோன்றும்பிற்பக்கத் தடைவிசொன்னோம்அறிநன்றே (ம)

பூருவபட்சவாரம்-ஏ-ற்கும்படுபட்சி

அருக்கன்வெள்ளிமுனிமரணம் அணிசேர்செம்பொன்காரியுடன்
நெருக்கும்வல்லூறேமரணம் நெறியாய்காகம்மதிமரணம்
செருக்குஞ்செவ்வாய்கோழி அதாம் சேர்ந்தபுத்திமயில்மரணம்
கருக்கும்குழலாய்முற்பக்கம் கடிகைஅறுபான்சாவாமே (மக)

அமரபட்சம்-ஏ-ற்கும்படுபட்சி

கூறிடும்திங்கள்ஆந்தைகுலவுசெய்வல்லூறுக்கும்
மீறியஅருக்கன்காகம்வெள்ளியும்புதனும்மஞ்ஞை
ஏறியசனிவியாழம் கோழிஆம்இயம்புங்காலை
ஆறுபத்தாகும்கன்னல் அளவும்சாமம்அமரபக்கம் (மஉ)

பூருவபட்சம்பகல்இரவு-உ-ற்கும்பட்சி ஒன்றன்தொழில்முறை

உண்டுநடந்துஉலகாண்டுநித்திரைஆயத்
தண்டம்உறமுற்பகலிற்சாவாகும்-உண்டே
அரசாய்இறந்துவழி அன்னேவரம்போம்
இரவாய்உறங்கும்இடை

அமரபட்சம்பகல்இரவு-உ-ற்கும்பட்சிஒன்றன் தொழில்முறை

உண்டுடனேசெத்து முறங்கிஅரசாண்டு
மண்டிவழிநடக்கும்மாமயிலே-அன்றிரவில்
உண்டும்உறங்கி உடனேநடந்திறந்து
கண்டரசன்ஆகும்எனக் காண் (௧௪)

பட்சம்-உ-ற்கும்கடைநிலைப் பட்சிகள்

அறிவானபூருவத்தில் மரணம்உண்ணும்
அப்பனே அவ்விரவில் தூக்கம்உண்ணும்
கரியானஅமரத்தில் நடைதான்உண்ணும்
கண்டுசொன்னேம்பின்இரவில் அரசன்உண்ணும்
வரியானஅட்சரங்கள்பிரித்துப்பார்த்தோர்
வகைஅறிவார்மற்றோர்கள் அறியமாட்டார்
நெறியாகச்சொன்னோர்கள் பெரியோர்ஐயா
நிட்சயமாய்க்கும்பமுனி நிகழ்த்தினரே. (௰௫)

பூருவபட்சம் பகல் ஜாமம்-ரு-ற்கும்பட்சிகளின்-ரு-ன்தொழில்முறை

வலிஉண்ண ஆந்தை வழிநடக்கக்காகம்
உலகாளும்கோழிஉறக்கம்-கலாபமயில்
செற்றுப்போம்என்றே செயல்உரைத்தால்பூருவத்தின்
உற்றபலன்ஆம் என்றுணர் (௰௬)

நினைவின்மயில்உண்ண நேர்நடக்கவல்லூறு
இனிதாந்தையேஅரசன் ஆகத்-தனியனும்
கறுத்தகொடி தூங்கிவிழக் காசினியிர்கோழி
இறக்கம் புறப்பக்கப்பகல் (௧௭)

அறிவானகோழி அமுதுண்ணத்தோகை
விரியாய்வடக்கவலிவேந்தாய்-செறிஆந்தை
நித்திரைஆம்காகம் நெடிதிறக்கும்பூருவத்தின்
நித்தபலன்ஆகும்நினை (௧௮)

பூருவபக்கத்தின்பகலிற் காகம்பொசிக்க
ஊர்நடக்கக்கோழி உலகாளத்-தேர்மயில்தான்
வல்லூறுறங்க மடிந்துவிடும்ஆந்தையது
நல்லாய்நவில்வ தறி (௰௯)

உண்ணப்படின்ஆந்தை ஊர்நடக்கக்காக்கையது
மண்ஆளக்கோழிமயில்தூங்கப்-பெண்ணே
தவியாதவல்லூறு தான்இறக்கும்கண்டாய்
இவைபூர்வப்பகல்ஆம் எண் (௨௰)

## பூருவபட்சம்இரவுஜாமம்-ரு-ற்கும்பட்சிகள்-ரு-ன்தொழில்முறை

அமுதுசெய்யக்காக்கை அடர்ஆந்தைசெல்ல
சமர்இம்மெல்வல்லூறரசன்ஆகத்-திரம்உற்றுத்
தூங்கிவிழத்தோகையது துஞ்சிவிழுமேகோழி
ஈங்குமுற்பக்கத் திரவினில் (உக)

தோகைஉண்ணக்கோழித் தொடர்ந்தூர்ப்பயணம்உறக்
காகம்அரசாளமுனிக்கண்டுயிலச்-சாகுமே
வல்லூறுமுற்பக்கமா இரவில்ஆமென்றார்
சொல்லூறும்முன்னோர் துணிந்து (உஉ)

ஆந்தைஉண்ணவல்லூறது நடக்கத்தோகைமயில்
வேந்தனும்கோழிவிழிதுயிலும்-மாய்ந்துவிடும்
காகம்அதுபக்கத்திரவில் இவைதான்
ஆகுமென்றார் முன்னோர்அறிந்து (உங)

கோழிஉண்ணக்காகம் குலாவிவழிநடக்க
ஏழுலகும்ஆந்தைஇனிதாளத்-தாழ்வில்லா
வல்லூறுதூக்கம் மயில்மடியும்முன்இரவில்
வல்லோர்உரைத்த வழி (உச)

வல்லூறுதான்உண்ண வர்ண்ணமயில்நடக்கப்
பல்ஆன்றகோழிபதிஆள-நல்லாய்க்கேள்
ஆகல்உறும்பாகம் அணந்தல்செயஆந்தையாம்
ஏதில்முற்பக்கமிரவில் (உரு)

## அமரபட்சம் பகல்ஜாமம்-ரு-ற்கும்பட்சிகள் ரு-ன்தொழில்முறை

மயில்உண்ணக்கோழிஅது மண்ஆளக்காகம்
உயிர்அழியஆந்தைதான்ஓடச்-சயனம்
சிகரம்உறும்வல்லூறு தான்செயவேசெய்யும்
பகரும்அமரபட்சத்தின் (உசா)

ஆந்தைஉண்ணவல்லூ றரசுசெயமாமயில்தான்
மாய்ந்துவிடக்கோழி வழிநடக்க-நேர்ந்தொரு
காகமேநித்திரையாய் காணும்அமரபக்கத்
தாகும்பகலில் அறி [உஎ]

அமுதுசெயக்கோழி அரசாளக்காகம்
மமதைஉறும்ஆந்தை மடியத்-திமிரமுடன்
வற்புறும்வல்லூறே நடமாமயில்-உறங்கிவிடும்
பிற்பகலில்ஈங்கிதனைப்பேசு (உஅ)

உணவுள்ளவல்லூ றுலகாளமஞ்ஞை
பிணம்ஆகக்கோழி பெறிதும்-துணைஇன்றிக்
காக்கைநடந்துசெலக் கண்டாந்தைகண்டுயிலும்
போக்கும்பகலிற் புகல் (௨௯)

கொடிவுண்ணஆந்தை குவலயம்தான்ஆள
மடிவாகவல்லூறுமஞ்ஞை-நடைஅதுவாய்
ஒப்பரியகோழி உறங்குமேபிற்பக்கத்
தப்பகலில்ஆம் என்றறி (௩௰)

{ அமரபட்சம் இரவுஜாமம் -ரு-ற்கும்பட்சிகள்
ரு-ன்-தொழில்முறை }

உண்டுஉண்ணமஞ்ஞை உலகாளவல்லூறு
மண்டலத்தில்ஆந்தை மடியவே-கண்டுகொடி
ஊர்க்குசெலக்கோழி உறங்கிவிடும்மேதினியில்
ஏர்க்கும்ஒருபின் இரவினில் (௩௧)

பொசிக்கவலியன் புவிஆளஆந்தை
நசிக்கநற்காகம்நடக்கத்-துசிக்கோழி
தோகைதுஞ்சும்பின்இரவில் தோகாய்மலயம்உறு
வாகைசேர் மாமுனிவன்வாக்கு (௩௨)

முனிஉண்ணக்காகம் முயன்றுளச்சேவல்
இனிசாகத்தோகை மயில்ஏகந்=தனியாண்
வலியனைகண்ணுறங்கும் மாதேஉலகிற்
பெலனைப்பின் இரவினில் (௩௩)

காகம்உண்ணக் கோழிஅதுகாசினியைஆளமயில்
சாகவலுவல்லூறுதான்நடக்க-யோகம்உள்ள
நித்திரையாம்பின்னிரவில் நிர்மலசுழுத்தில்ஆம்
பத்திரையாம் சொன்னநெறி (௩௪)

போசனம்ஆகக்கோழி பூவுலகாளத்தோகை
நாசம்உறும்வல்லூறு நல்ஆந்தை-யோசனையாய்
தான்செல்லும்காகம் சயனம்அதாம்பின்னிரவில்
மான்செயலும் கண்ணாய்மதி (௩௫)

பூருவபட்சம் பகல் தொழில்முறை-ரு-ற்கும்நாழிகை

ஊண்பட்சிக்கொன்றரை ஆம்ஒன்றேகால்தான்நடைக்காகம்
ஏணில்அரசுக்கிரண்டாகும்-வாணுதலாய்
தூங்கும்அதற்கோர்முக்கால்துஞ்சும்அதற்கோர் அரையாம்
பாங்குடையமுற்பகலினில் (௩௬)

பூருவபட்சம்இரவுதொழில்முறை-௫-ற்கும்நாழிகை

உண்பாறுக்கொண்றேகால் ஓன்றேகால்தான்நடைக்கும்
குண்ணாள் அரசுக்கொன்றுய்மால்-பெண்பாவான்
சித்திரைக்கொன்றோன்றனையேசின்றதுபோர்பொன்றும்அதற்
இத்தலத்தின்முன் இரவினில் (௩௭)

அமரபட்சம்தொழில்முறை-௫-ற்கும்நாழிகை

ஊண்கடிகையொண்டாகுர்ஒந்நடை ஒன்றனைஆம்
ஆணின் அரசுமுக்கால்ஆனமேதா-வீணின்
உறக்கம்அரைநாழிஉயிர்போக்கொன்றேகால்
பறக்கும்பிற்பக்கப்பகல் (௩௮)

அமரப்பட்சம்இரவுதொழில்முறை-௫-ற்கும்நாழிகை

ஊண்எழுக்கால்போக்கெழுகால்ஊராள்வதோர்முக்கால்
மாணின்றுறக்கும்அதுமுக்கால்-சேணின்று
சாகும்அதுநாற்கால்ஆர்சற்றும்
ஏகும்பிற்பக்கஇரவில் (௩௯)

பூருவபட்சத்தின்திதிபட்சி

பன்னொன்று,றொன்றுவலிபன்னிரண்டேழ்மொன்டாந்தை
பன்மூன்றுமூன்றெட்டுகாகம்அதாம்-பன்னான்கு
நான்கொன்பதுகோழிப்பதினைந்தைந்தொருபத்
தானமயில்பூருவத்தில்ஆம் (௪௰)

அமரபட்சத்தின்திதிபட்சி

பதினைந்துபத்தெந்துவல்லூருநான்கென்
பதுவதினன்காந்தைமூன்றெட்டு-பதின்மூன்று
வாயாசம்இரண்டேழ்பனிரொண்டுகோழிமயில்
தேய்வுபன்றொன்றுமே (௪௧)

பூருவபட்சம் அமரபட்சம் உ-ற்கும்நட்சேத்திரபட்சி

ஐந்தாறைந்நந்தார்சுவினிநேர் ஆறைந்
தைந்தாறைந்தாகஇரேவதிநேர்-முந்திய
பட்சமும்பின்பட்சம்முறையேபகருவர்காண்
பட்சிஐந்தும்உள்ளபடி (௪௨)

பூருவபட்சம்இராசிப்பட்சி

அறிவுடையாய் ஆடரித்தேள்வல்லூறுஞெண்டே
டுழும்மிதுனம்கன்னிமறையோன்-புறைசிலைமீன்

---

☞ * தனைபிறிக்குமிடத்துசொற்சொல்லாகப்பிரித்தலினாலே பிறிவுபட்டமெய்யையும்உயிரையும்ஒன்றுபடுத்திஉயிர்மெய்யிர்க்கும் தோன்றினமெய்யைக்கெடுத்தும்பிரித்துக்கொள்க

காகம்எருதுதுலைகோழிமகரம்கும்பக்
தோகைமூதற்பக்கம்இதாம்சொல்

அமரபட்சம் இராசிபட்சி

எருதுதுலைமீன்வல்லூறியாழ்சிலையாள்ஆந்தை
அரிஅரிவைமான்காகம்ஆகும்-மறியுடன்தேள்
வாரணம்ஆம்ஞெண்டுமயில்பிறபக்கத்
தாரணநூல்சொன்னதறிவு (௪௪)

பூருவபட்சம் திசைபட்சி

சொல்ஊறும்பூருவபக்கத்தில்தொல்கிழக்கு
வல்லூறுதெற்காந்தைவாயசம்மேற்-கல்ஊரும்
கூந்தல்நல்லாய்வடக்குகோழிஆம்மதித்துஅது
வாமந்தமயில்ஆகமதி (௪௫)

அமரபட்சம் திசைபட்சி

அமரபக்கம்தன்னில்கிழக்காகம்
எமன்தன்திசைஅதுதான்கோழி-குமரன்உறும்
வாகனமேமேற்காகம்வடக்காந்தைமத்திவல்லி
ஆகும்எனச்சொன்னார்அறிந்து [௪௬]

உவாக்கால் திசைபட்சி

மத்திபத்திவ்வல்லூறுவாழ்ஆந்தைதெற்காகும்
ஒத்ததொருகிழக்காகம்ஒண்காகம்-இத்திசையில்
தெற்காகம்கோழிசிறந்தமயில்மேற்காகம்
எக்காலும்சாற்றும்இயல் (௪௭]

பூருவபட்சம் அங்கப்பட்சி

மிதம்ஆகும்கூந்தல்விரல்உடன்தோள்மார்பு
துதிசோகப்பட்டைகுய்யம்தோகை-சதுர்ஆணி
நெற்றிதோள்மார்பின்கீழ்நீள்பிடரிஊருஇவை
உற்றதொருகோழிஎனஓது

ஓதரியகாசிவிழிமுழங்கைஉந்திமுது
கேதில்முழங்கால்காகம்என்பரோ-போதருவாய்
நல்லமுன்கைபின்புபக்கம்நாட்டும்நடுமுதுகு
வல்லகெண்டைஆந்தைஅதுஆம் (௪௯)

ஆமேசமுத்துமணிகட்டுகீழாம்கை
நாமேவலதுபக்கம்நல்மறந்த-பூங்குழலாய்
வல்லூறமுற்பக்கம்ஆம்அங்கப்பட்சிஅது
சொல்வாய்முழுதும்துணிந்து [௫௰)

அமரபட்சத்தின் அங்கப்பட்சி

துணிந்துரைப்பாய்கண்டம்மணிகட்டுநதிதோளும்
மணந்தஇடைபூம்கணைக்கால்வல்லூ-றுணர்ந்தபடி
நற்கைவயிறுநடுமுதுதுகெண்டைக்கால்
அற்குழமாய்ஆந்தைஎனல்ஆம் (௰க)

குழல்ஆர்ந்தநல்லாய்கேள்மார்பின்கீழ்தொண்டை
எழில்ஆர்ந்தமுன்கையோதேனே முழங்கையோ
டான்றவிரலுடனேகைகீழ் வலப்பக்கம்
ஏன்றஎழில்முதுகோ டுங்கு (௰உ)

ஈங்குரும்நாசிவிறிவாய்இடப்பக்கம்
ஓங்கும்முழங்கால்காதம்ஓதுவார்-தீங்கில்நெற்றி
கைப்பட்டமார்புபிடரி துடைகார்குழலாய்
செப்பும்உறும் கோழிஎனச்செப்பு [௰௩]

செப்பும்தலைதோள் சிறங்கைகீழ் கூந்தலுடன்
மெய்ப்புடையகுய்யன் வியன்மயில்ஆம்-பிறபக்கம்
தன்னில்தொடைகுறியால் சாற்றும்அங்கப்பட்சிஇவை
அன்னநடைமாதேஅறி (௰ச]

{ அங்கபட்சியில்இன்னம்ஒருஅடைவுஅகாரசப்தம்
உடையான் அங்கப்பட்சி }

காணும்அகாரப்பேரான்உடையகண்டம்முதல்
காணும்சிரசாந்தைகைக்காகம்-பேணும்
கோழிஉடம்புமயில் முன்பின் ஆகும்வலியன்
தாழ்வில்இருசரந்தான். [௰௫]

இகாரசப்தம் உடையான்அங்கப்பட்சி

தானும்இகாரப்பேரான்உடைய கண்டம்முதல்
காணுதலைக்காகம்கைக்கோழி-மானே
உடலேமயில்முன்பின்வல்லூறு கால்தான்
அடல்ஆந்தை அண்டும் எனல்ஆம் (௰௬)

உகாரசப்தம்உடையான் அங்கப்பட்சி

அண்டும்உகாரப்பேரான் உடையசென்னிமுதல்
கண்டம்வளாக்கோழிஆம்கைமயிலாம் - உண்டான
வல்லூறுடல்முன்பின்வாழுமே ஆந்தைஅது
நல்லகால்காகம்எனநாட்டு (௰எ)

எகாரசப்தம்உடையான் அங்கப்பட்சி

நாட்டும்எகாரப்பேறுடையான்உடைய சென்னிமுதல்
[illegible] டும்கைவல்லூறுடல்ஆந்தை-நாட்டும்முன்

பின்ஆகும்காகம் பெருத்ததோர்கோழிகால்
நன்னுதலாய்கண்டு நவில் (௫௮)

ஒகாரசப்தம்உடையான் அங்கப்பட்சி

நவிலும்ஒகாரத்தின் சென்னிவலியன்
சவரும்கை ஆந்தைஉடல் காகம்-புவிஅதனில்
தேனேமுன்பின்கோழி தேவர்க்கெல்லாம்அடுக்கும்
மானேமயில்கால் மதி (௫௯)

பூருவபட்சத்தின் பட்சிநிறம்

வல்லூறுபொன்நிறம்ஆம் வாழ்ஆந்தைவெள்ளை அதாம்
செல்லாரும்காகம்சிவப்பாகும்-நல்லாய்கேள்
கோழிநிறம்பச்சை குளிர்தோகையேகருப்பு
நாழிமணக்க நவில் (௬௰)

அமரபட்சத்தின் பட்சிநிறம்

ஆந்தைசிவப்பாம் அணிகாகம்பொன்நிறம்ஆம்
வாய்ந்தபச்சைவர்ணமயில் ஆகும்-ஏந்திழையீர்
வெள்ளை ஆம்கோழி விளங்கும்வெகுகறுப்பு
வல்லூறுகண்டு மதி (௬௧)

பூருவபட்சத்தின் பட்சிகுணம்

வல்லூறுபார்ப்பான் வளர்ஆந்தைதான்வணிகன்
செல்லாரும்காகம் செகத்தரசன்-நல்லாய்கேள்
கோழியாம்வேளாளன் கூறும்மயில்சண்டாளன்
ஆழியான்சொன்ன தறி (௬௨)

அமரபட்சத்தின் பட்சிகுணம்

பொன்மறையோன்ஆம்வலியன் போர்வேந்தன்ஆந்தைஆம்
துன்னும்எழில்காகம் துலைவணிகன்-மன்னும்
உழுகுலத்தோன்கோழியே ஓதும்கால்பச்சை
இழிகுலத்தோன்என்றே இசை (௬௩)

பூருவபட்சத்தின் பட்சிபூதம்

அரியபுவிவல்லூறப்பாகும்ஆந்தை
கரியதொருகாகம் கனல்ஆம்-பெரியகால்
தேனேநிகர்மொழியாய் செஞ்சூட்டின்வாரணந்தான்
வான்ஆகும்தோகை மயில் (௬௪)

அமரபட்சத்தின்பட்சிபூதம்

வல்லூறுதேயுவாம் வல்ஆந்தைவாயுவாம்
பொல்லாக்கருங்காகம்பூமிஆம்-நல்லாய்கேள்
நீர்ஆகும்கோழிதான் நீலமயில்காகம்ஆம்
கார்ஆர்குழலாய் கணி (௬௫)

பட்சம்-உ-ற்கும்பட்சிமுக்காலம்
ஆந்தைமயில்முற்காலம் ஆனதொருவாரணந்தான்
சேர்ந்தநிகழ்காலம்செப்பிடுமே-வாய்ந்ததொரு
வல்லூறுகாகம் வரும்காலம்காட்டுமே
வல்லோர்உரைத்தவழி (சுசு)

பட்சம்-உ-ற்கும்பட்சிதாதுமூலசீவன்கள்
வல்லூறுமூலம் வளர்ஆந்தைசீவன்ஆம்
சல்லாபம்ஆம்காகம் தாதுவாம்நல்லாய்கேள்
கோழிமூலத்தாது கோலமயில்சீவதா
தாழியான்சொன்ன தறி (சுஎ)

பட்சம்-உ-ற்கும்பட்சிவடிவு
வல்லூறுநீள்வட்டம் மால்ஆந்தைஐங்கோணம்
அல்ஆகும்காகம்அறுகோணம்-மெல்லியலாய்
கோழிஅதுநாற்கோணம் கோலமயில்முக்கோணம்
ஆழியான்சொன்ன தறி (சுஅ)

பட்சம் உ-ற்கும்பட்சிகால்
வல்லூறிருகால் ஆம்வன்காகம்நீர்க்கால்ஆம்
நல்லதிரல்ஆந்தைஅது நாற்கால்ஆம்-சொல்லில்
குறும்கோழிகொம்பாம் குலவும்மயில்பட்சிப்
பெரும்கால்ஆம்என்றிதனைப் பேசு (சுகூ)

பட்சம்-உ-ற்கும்பட்சிநிலம்
வல்லூறுபாலை வளர்ஆந்தைவண்குறிஞ்சி
நல்லாய்கேள்காகம்அது நல்மருதம்-சொல்அறிய
வாரணமேமுல்லை வளரும்மயில் நெய்தல்
ஆரணநூல்சொன்னதறி (எ0)

பட்சம்-உ-ற்கும்பட்சிலோகம்
வல்லூறுபொன் ஆம்வளர்ஆந்தைவெள்ளிஅதாம்
செல்ஆரும்காகம்அதுசெம்பாகும்-நல்லாய்கேள்
கோழியேவெண்கலம்ஆம்கோலமயில்இரும்பாம்
ஆழியான்சொன்னதறி (எக)

பட்சம்-உ-ற்கும்பட்சி ஆண் பெண்
வல்லூறுகாகம்மயில்மூன்றும் ஆண்ஆகும்
நல்லதிறவுகோல்நாம் சொன்னோம்-நல்லாய்கேள்
ஆந்தைபொற்கோழிபெண் ஆகும்இதேதோழி
தேர்ந்தறிந்துசொல்லும்திரம் (எஉ)

பட்சம் உ-ற்கும்சுவை
தித்திக்கும்ஆந்தைசிறுபுளிப்புகோழிஅதாம்
எத்துவர்ஒருகாகம்இனிதுவர்ப்பாம்-பத்திசெய்யும்
வல்லூறுகாறும்மயில்கைக்குமென்பரே
அல்லார்குழலாய் அறி (எஙு)

பட்சம்-உ-ற்கும் ஆள்வரத்து

வல்லூறுநிற்கின்றான்மாமறையோன்தான்மீண்டான்
வல்லகரும்காகம் வருகின்றான்-மெல்லியலாய்
கோழிதான்ஊர்க்குள்வர்தான் கோலமாமஞ்ஞை அனா
நாழிகையிலேவருவான் நாடு (எ௪)

பட்சம்-உ-ற்கும்வரவுகால அளவு

கோழிக்குநான்குநாள் குவலயத்திலேமிக்க
வாழும்மடவல்லூறுக் கைந்தேநாள்-தோழிகேள்
காகம்நாள்மூன்றாகும் கார்ஆந்தைநாள்இரண்டு
தோகைமயில்நாள்ஒன்றாம் சொல் (எ௫)

பட்சம்-உ-ற்கும்பட்சிபருவம்

உண்ணும்அரசுபலாபலன் உயர்நடைதானேகுமரன்
பண்ணும்அரசதுவே பார்வேந்தன்-நண்புடைய
முற்றும்துயில்கிழவன் மோனமுடிந்தோன்சாவு
பற்றும்பருவப் பயன் (எ௬)

பூருவபட்சத்தின் பட்சிசத்துரு

வலிசத்துருவாயசமும் கோழியாம்கோழி
கலாபமும்தான்ஆந்தைசத்துருவாகும்-கலாபம்வலி
வாயசம்அதற்கு வல்லூறாந்தைகோழிக்காந்தை
தாயசமும் மஞ்ஞைசத்துருவாம் (எஎ)

அமரபட்சத்தின் பட்சிசத்துரு

கோழிமுனிவல்லூறுக் காந்தைக்குமஞ்ஞைவலி
கோனமஞ்ஞையும் காகச்சத்துருவாம்கோழிக்குக்
காகமுடன்வல்லூறாம் பிற்பகலில்தோகைக்குக்
காகமுடன்ஆந்தை எனக்காண் (எஅ)

பூருவபட்சப் ஊணின்பலாபலன்

போஜனம்ஆகில்பகிவாழும்போனார்மீள்வர்போம்கவலை
காசினிவாழும்மழைபொழியும் களவும்இல்லைக்கதிர்விளையும்
பேசில்கன்னிப்பேறாகும் பிணியும்தீரும்பெண்பெருவள்
மாசில்செழும்பொனவாணிப மாமன்னனாகிவல்வாய்மாக்குயிலே

பூருவபட்சம் நடையின்பலாபலன்

யாத்திரை ஆகில்சிலைகுலையும் ஒன்னார்வெல்வர் இருநிதிபோம்
காத்திரம்இல்லாக்கதிர்விளையும் கன்னியர்வாழ்க்கைநன்றாகா
மாத்திரள்செல்லும்பொருள்கூடா வேட்கைதவிர்ந்துமனம்கூடா
சூத்திரம்சொன்னபடியாலேசொன்னார் பெரியோர்சுரிகுழலே

பூருவபட்சம் அரசின்பலாபலன்

அரசுசெய்யிற்புவிப்பேறும் அரசராலேபலன்எய்தும்
முரசும்அதிரும்வரிசையுடன் மூடகருமம்தான்விலகும்



பரிசம்பெரியோர்கிரள் இவர் பழையபிணிபோம்பயம் இல்லை
புரைபோம்களவுந்தான்காணும் போக்கும் இல்லைபொற்கொடியே

பூருவபட்சம் நித்திரையின்பலாபலன்

தூங்கும்ஆகில்நோயமாரா தூரம்போனார்தாம்மீளார்
ஆங்கேக நமக்கன்று மா அரிவைவாழ்க்கைதாழ்வாகும்
தீங்கே அல்லால்மழைபொழியாய்ச் செந்நெல்விளையாச்செய்கருதி
ஓங்குமணமும்தாராதே உண்மையாகஉரைத்தோமே (௮௨)

பூருவபட்சம் மரணத்தின் பலாபலன்

துஞ்சும்ஆகில்சாவுசொல்லும் தொலையப்பிணியுமதான்எய்து
நெஞ்சில்நினைத்தபொருள்கூடா நிதியுங்காணார்நிலைகுலைவார்
வஞ்சர்நோயும்மிகஉண்டாம் மனையாள்வெருப்பள்உறவாகாள்
கஞ்சமலர்ஆர்குழலாளேகருக்கால் உரைத்ததெடுத்துரையே (௮௩)

அமரபட்சம்ஊணின் பலாபலன்

கெடுதியும்உடனேநீங்கும் கிளையுடன்வாழ்வுபெறும்
கடுதியபிணியும்தீரும் கலக்கமாசமறும்இல்லை
அடைமழைபெருகஉண்டாம் அங்கமும்மலிவாம்கண்டாய்
முடிகியபயணம் இல்லை மொழியும்பிற்பக்கஊணே (௮௪)

அமரபட்சம் நடையின்பலாபலன்

வெற்றியும்சுகமும்உண்டாம் வியாதியும்மாறும்பின்பு
பற்றியகருமம்கூடும் பயம்இல்லைஅங்கமும்தாழா
உற்றார்தாம்கெடநிகாணும் உயிர்மழைஉண்டுதூரத்
துற்றதற்கரவுகூடச் சொல்லும்பின்நடக்கதோன்றில் (௮௫)

அமரபட்சம்அரசின் பலாபலன்

செயமோடுசுகமும்உண்டு சிறந்ததோர்பயணந்தன்னில்
புயல்இடிமழையும்அற்பம் புவிதனில்கலக்கம்இல்லை
இயம்பினார்பெறலாம்வெற்றி இலாபமும்மேவதாகும்
பயம்விளையாதுதேய்பின் அரசதாம்பரவைஆகில் (௮௬)

அமரபட்சம் நித்திரையின் பலாபலன்

வன்னியபிணிஅலால்மற் றொருபிணிஅதிகம்ஆகும்
மன்னியமழையில்லை வைத்தனம்கெடுதிஆகும்
துன்னியநெஞ்சில்தோஷம் தோன்றிடும்கருமம்செய்யும்
பன்னியபிற்பக்கத்தில் உறங்கும்அப்பறவைஆகில் (௮௭)

அமரபட்சம் மரணத்தின்பலாபலன்

காலினில்வயமும்உண்டு கலகம் ஆம்கருமம்எல்லாம்
தீவினைப்படும் மற்றன்றிச் செய்யும்நல்வினைகள் ஆகாச்
சாவினில்விழுந்தபட்சித் தழும்பக்கம்முகிப்பதாலே
பூவினிற்சிறந்தமாதே புகன்றனன்புள்ளின்நூலே (௮௮)

உரோமரிஷி விநாடிபஞ்சபட்சி மூலமும்.
பஞ்சபட்சிபலதிரட்டு, மூலமும்,
முற்றிற்று

Page numbering incorrect